# ஓ'ஹென்ரியின் கதைகள்

தமிழில்:

வி. எஸ். வெங்கடேசன்

மனோன்மணி புத்தக நிலையம்,
138—A, பவழக்காரத் தெரு, சென்னை—1.

மனோன்மணி : 33.
முதற் பதிப்பு, ஜூலை, 1963


விலை ரூ. 3·00

அச்சிட்டோர் :
மாருதி பிரஸ், சென்னை-14.

# பதிப்புரை

ஓ'ஹென்றி அவர்களின் உண்மைப் பெயர் வில்லியம் சிட்னி போர்டர் என்பதாகும். அவர் 1862-ம் ஆண்டு பிறந்தார். அவருடைய தகப்பனார் பிரபல மருத்துவர். வடக்கு கரோலினாவிலேயே ஓ'ஹென்றி அவர்கள் வாலிப வயதுவரை வசித்து வந்தார். சிறு பிராயத்து அனுபவங்களே அவரை இலக்கிய உலகத்திற்கு உந்தித் தள்ளின எனலாம்.

1895-ம் ஆண்டுவரை அவர் பல தொழில்கள் செய்தார். ஒரு வழக்கில் அகப்பட்டுக்கொண்டு சிறை தண்டனையையும் அனுபவித்தார். அதன் பிறகே அவர் பூர்ணமாக இலக்கியத்தில் ஈடு பட்டார்.

ஓ'ஹென்றி அவர்களைச் சிறுகதை மன்னர் என்றே அழைக்கலாம். அவருடைய கதைகள் கடைசி கட்டத்தை அடையும்வரை எப்படி முடியப் போகிறது என்று யூகித்து அறியவே முடியாது. மேலும் கதையின் கடைசி கட்டத்தில் நினைப்பதற்கு நேர்மாறான வகையில் முடிவடையும்.

சிறந்த சிறுகதை மன்னரான ஓ'ஹென்றி அவர்கள் 1910-ம் ஆண்டு இயற்கையை எய்தினார். அவருடைய சிறுகதைகளே அவருக்கு அழியாத நினைவுச் சின்னமாக இருந்து வரும் என்பதில் ஐயமே இல்லை. உலகப் புகழ் பெற்ற அவருடைய சிறு கதைகளைத் தமிழில் வெளியிடுவதை நாங்கள் பெருமையாகக் கொள்கிறோம்.

எங்களுடைய மற்ற நூல்களைப் போலவே இதனையும் தமிழ் மச்சள் வாங்கிப் படித்துப் பயன் பெறுவார்கள் என்று நப்புகிறோம்.

மனோன்மணி புத்தக நிலையத்தார்.

## உள்ளுறை



# 1. யாதும் ஊரே!

நள்ளிரவு. ஓட்டலில் அப்போதும் கூட்டமாக இருந்தது. எக்காரணத்தாலோ நான் உட்கார்ந்திருப்பதையும், வந்தவர்களை வரவேற்று அமருவதற்கு இடமளிக்கத் தயாராக உள்ள இரண்டு நாற்காலிகளையும் உள்ளே வருபவர்கள் பார்வையிலிருந்து தப்பிவிட்டது.

வெகு நேரத்திற்குப் பின் அந்தக் காலியாக இருந்த நாற்காலிகளில் ஒன்றில் எல்லா நாடுகளையும் ஒன்றுபோலக் கருதும் பரந்த மனப்பான்மையுள்ள ஒருவன் வந்து உட்கார்ந்தான். அவனைக் கண்டு நான் மகிழ்ச்சியடைந்தேன். உலகம் அனைத்தையும் ஒன்றுபோல நினைக்கும் மக்கள் உள்ளதாகக் கேள்விப்பட்டிருக்கிறோம். அவ்விதமே பல ஊர்களுக்கும் பிரயாணம் செய்பவர்களைக் கண்டிருக்கிறோம். ஆனால், அத்தகைய மனப்பான்மையுள்ளவர்களை மாத்திரம் கண்டதே இல்லை.

எனது சர்வதேச அபிமான நண்பருடைய பெயர் ரெஷமோர். அடுத்த வேனிற்காலம் முதல் அவரைக் குறித்து கோனித் தீவிலிருந்தே அறிய முடியுமாம். அங்கு அவர் புதிய கவர்ச்சி ஒன்றை ஏற்படுத்தியிருக்கிறாராம். என்னை அங்கு அழைத்ததுடன் எனக்கு மன்னருக்கேற்ற

சுகபோகங்களை அளிப்பதாகவும் வாக்களித்தார். பிறகு அவருடைய பேச்சு உலகத்தின் ஒரு பாகத்திலிருந்து அதன் மற்றொன்றுக்குச் சென்றது. உருண்டை வடிவமான உலகத்தையே அவர் தம் கையால் எடுத்துக்கொண்டு விட்டதுபோலும் காணப்பட்டது. மேலும் அவருடைய பார்வைக்கு அது சிறு தானியமணியைப்போலவும் தோன்றிற்று. ஒவ்வொரு நாட்டையும்பற்றிப் பேசினார். கடல்களை அவர் தம் கைக்குட்டையாலேயே கடந்து சென்றார். கையின் அசைவில் இந்தியாவிலுள்ள ஹைதராபாத் நகரத்தின் கடைத்தெருவை விவரித்தார். இதேபோல பல நாடுகளைக் குறித்தும் சொன்னார். "ரெஷமோர், உலகம்!" என்று முகவரி எழுதிக் கடிதம் போட்டாலே அவருக்குப் போய்ச் சேர்ந்துவிடும் போலவும் நம்பிக்கை தெரிவித்தார்.

ஆதாமுக்குப் பிறகு கடைசியாக ஒரு உண்மையான சர்வதேச அபிமானியைக் கண்டுபிடித்துவிட்டேன். உலகத்தைச் சுற்றி வரும் அவருடைய சொந்த ஊரின் பெருமை ஏதாவது இருக்கிறதா என்று அறிய விரும்பினேன். ஆனால், அவர் எந்த ஒரு நகரத்தையோ, ஊரையோ மிகைப் படுத்தியோ தாழ்வாகவோ பேசவில்லை. காற்று, பூமியின் அமைப்பு ஆகியவை எப்படி ஒன்றுபோல இருக்கிறதோ அவ்விதமே அவரும் தம் கருத்தை வெளியிட்டார்.

ரெஷமோரைக் கண்டதும் எனக்கு ஒரு கவிதை நினைவிற்கு வந்தது. அதில் மனிதர்கள் உலகத்திலுள்ள நகரங்களை வேற்றுமைப்படுத்துகிறார்கள் என்று கூறப் பட்டிருக்கிறது. "மனிதர் உலகத்தில் பிறந்து அதிலேயே வளர்கிறார்கள். உலகத்தின் பல பாகங்களுக்கும் போய் வருகி றார்கள். ஆனால், குழந்தைகள் தம் தாயின் முந்தானையைப் பற்றிக்கொண்டு தொங்குவதுபோல அவர்கள் சொந்த ஊரை விடாப்பிடியாகப் பிடித்துக் கொள்கிறார்கள்" என்று அதில் கூறப்படுகிறது. இவர்கள் தங்களுக்குத் அப்போது இவர்களுக்குத் தம் ஊரின் தெருக்கள் நினைவிற்கு தெரியாத ஊரின் தெருக்களில் சுற்றித் திரிவார்கள்.



வந்துவிடும். மிகவும் உண்மையாக, முட்டாள்தனமாக சொந்த ஊரின் தெருக்களின்மீது பற்று வைத்திருப்பார்கள். இந்த தெருக்களின் பெயரைச் சொன்னாலே போதுமானது. மகிழ்ந்து போய்விடுவார்கள்.

இத்தகையகுப்பையிலிருந்து உற்பத்தியாகாத ஒருவரைக் கண்டுபிடித்தேன். இவருக்குத் தம் சொந்த ஊர், பிறந்த இடம் என்ற குறுகிய மனப்பான்மை கிடையாது. யார் என்ன சொன்னாலும் அவர் கேட்கமாட்டார். உலகம் முழுமையும் ஒன்றாகவே கருதி வருவர்.

என் மேஜைக்கு அருகில் உட்கார்ந்திருந்த ரெஷ மோரின் வாயிலிருந்து இத்தகைய கருத்துக்கள் தங்கு தடையற்ற நீர்வீழ்ச்சிபோல வெளிவந்து கொண்டிருந்தன. அவர் என்னிடம் சைபீரியாவின் ரயில் போக்குவரத்தைப் பற்றி விவரிக்கும் சமயம் பாண்டு வாத்தியம் ஒரு இனிமை யான பாடலை இசைக்கத் தொடங்கிற்று. பாடலின் முடிவில் இசையமைப்பு வெகு நேர்த்தியாகவும், கேட்பவர் மனதைக் கவர்வதாகவும் இருந்தது. இசையின் கவர்ச்சியினால் அங்கு உட்கார்ந்திருந்த அனைவருமே கைதட்டி தாளம் போடத் தொடங்கினர்.

நியூயார்க் நகரத்திலுள்ள விசித்திரமான ஓட்டல்களில் ஒவ்வொரு மாலை வேளையிலும் இத்தகைய காட்சியைச் சிலராவது வந்து கண்டு களிப்பார்கள். இதன்மூலம் ஏராள மான சாராயம் செலவாகும். நகரத்திலுள்ள தெற்குப் பகுதியைச் சேர்ந்தவர்கள் அனைவரும் மாலை மங்கியதும் ஓட்டல்களுக்குத் தாமாகவே வந்து சேருவார்கள். சங்கீதத் தில் மயங்கி உற்சாகம் மேலீட்டுக் கைதட்டுவதால் வடக்கு மாகாண நகரத்தில் சிறிது புரட்சிக் காற்று வீசாமல் போகவில்லை. ஆனால், இது அடக்க முடியாத ஒன்றாகி விடவில்லை.

பாண்டு வாத்தியக்காரர்கள் நடனப் பாடலை இசைக்கத் தொடங்கியதும் அங்கிருந்த ஒரு வாலிபன் துள்ளி எழுந்

தான். கையில் தொப்பியைச் சுழட்டிக்கொண்டு குரங்கு போல் கையையும் காலையும் ஆட்டி நடனமாடினான். அதன் பிறகு அவன் புகையில் மறைந்து ஒரு காலி நாற்காலியில் போய் உட்கார்ந்துகொண்டான். சட்டைப்பையிலிருந்து சிகரெட் பெட்டியை வெளியில் எடுத்தான்.

மாலை வேளைகளில் ஒதுங்கி வாழ்வது பயனற்றது. எங்களில் ஒருவர் ஓட்டல் சிப்பந்தியிடம் சாராயம் எடுத்து வரச் சொன்னார். இதுவரை நடனமாடிய வாலிபன் தன்னையும் எங்களோடு சேர்த்துக்கொள்ளும்படி கேட்டுக் கொண்டான். இதை அவன் தன் புன்முறுவல் மூலமே தெரிவித்தான். என்னுடைய எண்ணத்தைக் கண்டறிய ஒரு வழியைக் கடைப்பிடித்தேன். அவனிடம், "தவறாக நினைக்காவிட்டால் தாங்கள் எந்த ஊரைச் சேர்ந்தவர்..." என்று பேச்சைத் தொடங்கினேன்.

அப்போது ரெஷமோர் விரல்களை மூடினான். மேஜையை ஓங்கி ஒரு குத்து விட்டான். இது என் பேச்சை முடிக்க இயலாமல் செய்தது. அவர் குறுக்கிட்டு, "மன்னிக்கவும். இந்த ஒரு கேள்வியைத்தான் யாரிடமும் கேட்க நான் விரும்புவதில்லை. ஒருவன் எந்த ஊரைச் சேர்ந்தவனாக இருந்தால் தான் என்ன? ஒருவனுடைய தபால் நிலைய முகவரியைக் கொண்டு அவனைச் சீர்தூக்கிப் பார்ப்பது நல்லதா? ஏன்? நான் பலதரப்பட்டவர்களைப் பார்த்திருக்கிறேன். கென்டிக்கர்கள் சாராயத்தை வெறுப்பார்கள். வர்ஜினியாவைச் சேர்ந்தவர்கள் போகாவினரின் சந்ததிகள் இல்லை. இந்தியாவைச் சேர்ந்தவர்கள் ஒரு நவீனம்கூட எழுதியதில்லை. மெக்ஸிகோ பகுதியினர் வெள்ளிப் பதக்கங்கள் பதித்த வெல்வெட் மேல் அங்கியை அணிவதில்லை. விசித்திர மனப்பான்மையுள்ள ஆங்கிலேயர்கள், ஆடம்பரச் செலவிற்குப் பெயர் போன அமெரிக்கர்கள், வஞ்சக நெஞ்சமுள்ள தெற்குப் பிராந்தியத்தினர், குறுகிய மனப்பான்மை கொண்ட மேற்கத்தியர்—இன்னும் எத்தனையோ பேர்களை நான் பார்த்திருக்கிறேன். மனிதன் மனிதனாகவே இருக்கட்டும்.



அவனை ஒரு பகுதியைச் சேர்ந்தவன் என்று முத்திரை குத்தி விட வேண்டாம்" என்றான்.

"மன்னிக்கவும். என்னுடைய ஆவல் ஒரு குறிக்கோளும் இல்லாதது அல்ல. எனக்குத் தெற்குப் பிராந்தியத்தவரைத் தெரியும். நடனப் பாடலை இசைக்கும்போது நான் உன்னிப்பாகக் கவனிப்பேன். அந்த இசையின் நாதத்தைக் கேட்டு உணர்ச்சிவசமாகக் கூடியவன் இந்த நகரத்திற்கும் நியூ ஜர்ஸிக்குமிடையே உள்ள பகுதியைச் சேர்ந்தவனாகவே இருப்பான் என்பதே என் எண்ணம். நான் என் எண்ணம் சரியானதா என்று சோதித்துப் பார்க்கவே இவரைக் கேட்க முற்பட்டேன். அச்சமயம் தாங்கள் குறுக்கிட்டு தங்களுடைய கொள்கையை விவரிக்கத் தொடங்கினீர்கள்."

இச்சமயம் அந்த வாலிபனே என்னிடம் பேசத் தொடங்கினான். அதன் மூலம் அவன் மனம் இயற்கையான வகையில் சென்றதை உணர்ந்தேன்.

அந்த வாலிபன் மேலும், "அந்த இசை எனக்கு ஒரு மயக்கும் வனதேவதையாகவே தோன்றுகிறது. எங்கள் ஊரில் வெகு நேர்த்தியான நடனப் பாடல்களைப் பாடுவார்கள்" என்றான்.

இது என் எண்ணத்தைத் தெளிவாக்கிவிட்டது. நான் ரெஷமோர் பக்கம் திரும்பினேன்.

என்னைப் பார்த்து ரெஷமோர், "நான் பன்னிரண்டு முறை உலகத்தைச் சுற்றி வந்திருக்கிறேன். பல விசித்திரமானவர்களை நான் பார்த்திருக்கிறேன். கெய்ரோ, எகிப்து, யோகஹாமா ஆகிய இடங்களில் பல நாட்கள் தங்கியிருக்கிறேன். ஷாங்காயிலுள்ள தேனீர் விடுதியில் எனக்காகப் பலர் காத்துக்கொண்டிருப்பார்கள். ரியோ ஜனிரோ அல்லது சீடலியில் எனக்கு எப்படி முட்டையை வேக வைத்துக் கொடுக்க வேண்டும் என்று பலருக்குத் தெரியும். அது ஒரு பரந்த பழைய உலகம். வீணாக ஏன் தெற்கு வடக்கு, அந்த ஊர் இந்த ஊர் என்று பேசுகிறீர்கள்?

விழுந்தது. அச்சமயம் வீட்டின் முன் நின்றிருந்தவன் வாயில் சுருட்டு இருந்தது. ஆனால், அது பற்றவைக்கப்பட வில்லை. அவன் சுருட்டைப் பற்றவைக்கும் நோக்கத்தோடு கையில் தீப்பெட்டியை வைத்துக்கொண்டிருந்தான். அவனைக் கண்டதும் போலீஸ்காரன் வேகமாக முன்னால் நடந்தான். அவன் அருகிலும் வந்து நின்றான்.

போலீஸ்காரனைக் கண்டதும் வீட்டின் முன் நின்றிருந் தவன், “ஒரு நண்பனை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் நாங்கள் இருவரும் இன்று இந்த இடத்தில் சந்திப்பதாகத் தீர்மானித்தோம். இது உங்களுக்கு வேடிக்கையாக இருக்கலாம். அப்படித் தானே தோன்றுகிறது? ஆமாம். ஆனால், உண்மை இதுதான். இந்த இடத்தில் முன்பு ஒரு ஓட்டல் இருந்தது. ஜோ என்பவன் இதை நடத்திக்கொண்டிருந்தான்” என்றான்.

“உண்மைதான். சுமார் ஐந்து ஆண்டுகளுக்கு முன் வரை அந்த ஓட்டல் இருந்தது. இப்போது இது பண்டக சாலையாக மாறிவிட்டது” என்றான் போலீஸ்காரன்.

அதுவரை கையில் தீப்பெட்டியுடன் நின்றிருந்தவன் குச்சியை எடுத்து உரைத்தான். குச்சி எரியத் தொடங் கியதும் வாயிலுள்ள சுருட்டைப் பற்ற வைத்தான். தீக் குச்சியின் வெளிச்சத்தில் அவனுடைய முகத்தை உற்றுக் கவனித்தான் போலீஸ்காரன். அவன் முகம் வெளுத் திருந்தது. கண்கள் கூர்மையான பார்வையுடன் குழி விழுந்தும் இருந்தன. வலது புருவத்தின் ஓரத்தில் ஒரு தழும்பு இருந்தது. கழுத்துப் பட்டையிலுள்ள தங்க ஊசி யில் பெரிய வைரக்கல் பதிக்கப்பட்டிருந்தது. அவன் வாயி லிருந்த சுருட்டை எடுத்துப் புகையை வெளியில் விட்டுக் கொண்டே பேசத் தொடங்கினான்.

“இன்று இரவுடன் இருபது ஆண்டுகளாகிவிட்டன. நானும் என் நண்பன் ஜிம்மியும் இந்த ஓட்டலில்தான் அன்றிரவு சாப்பிட்டோம். ஜிம்மியும் நானும் நெருங்கிய



நண்பர்கள். அப்போது எனக்குப் பதினெட்டு வயது. அவனுக்கு இருபது வயதாகியிருந்தது. அன்றைக்கு மறு நாள் என் அதிர்ஷ்டத்தைச் சோதனை செய்யப் போவதாக இருந்தேன். என்னால் ஜிம்மியை நியூயார்க் நகரத்திலிருந்து வெளியேற்ற முடியவில்லை. என்ன சொல்லியும் அவன் என்னுடன் வரச் சம்மதிக்கவில்லை. உலகத்திலேயே அவன் மகிழ்ச்சியுடன் இருக்க இந்த நகரம்தான் சிறந்தது என்று எண்ணினான். அதனால் நாங்கள் இருவரும் ஒரு தீர்மானத் திற்கு வந்தோம். இருபது ஆண்டுகளுக்குப் பிறகு இதே இடத்தில் இரவு பத்து மணிக்குச் சந்திப்பது என்று முடிவு செய்தோம். நாங்கள் எங்கு இருந்தாலும், எத்தகைய நிலையை அடைந்தாலும் சந்திப்பது என்று உறுதியாயிற்று. எங்கள் அதிர்ஷ்டத்திற்கு இருபது ஆண்டுகள் நிர்ணயம் செய்துகொண்டோம். அதற்குள் இருவர் வாழ்க்கையும் ஒரு நிலைக்கு வந்துவிடும் என்று நம்பினோம்.”

“விசித்திரமாக இருக்கிறதே. இரு நண்பர்களும் சந்திப் பதற்குக் குறிப்பிட்ட காலம் மிகவும் நீண்டதாகத் தோன்று கிறது. நல்லது. நீங்கள் பிரிந்து சென்ற பிறகு உங்கள் நண்பனைக் குறித்து ஏதும் அறியவில்லையா?”

“அறியாமல் என்ன? ஆரம்பத்தில் இருவரும் அடிக்கடி எங்கள் நலன்களைக் கடிதம் மூலம் தெரிவித்துகொண்டிருந் தோம். ஆனால், இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அது நின்று விட்டது. இருவருக்கும் ஒருவர் இருக்குமிடம் மற்றவருக்குத் தெரியாமல் போய்விட்டது. மேல் நாடுகள் மிகவும் நேர்த்தியானவை. நான் அங்கு என் வாழ்க்கையை நடத்தப் பாடுபட்டு வந்தேன். எப்படியோ நான் முன்னுக்கு வந்து விட்டேன். என் நண்பன் எப்படியிருக்கிறானோ? ஆனால், அவன் உயிருடன் இருந்தால் குறிப்பிட்ட நேரத்திற்கு வந்து என்னைச் சந்தித்தே தீருவான். இந்த நம்பிக்கை எனக்கு இருக்கிறது. உலகத்தில் அவனைப் போன்ற நம்பிக்கையான நண்பன் ஒருவன் கிடைப்பதே அரிது. ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பாலிருந்து இன்றிரவு அவனைச் சந்திக்க

வந்திருக்கிறேன். என் அருமை நண்பன் வந்தால் மகிழ்ச்சியடைவேன்'' என்றான்.

சிறிது நேரம் மௌனமாக இருந்தான். பிறகு சட்டைப் பையிலிருந்து கடிகாரத்தை எடுத்தான். வைரக் கற்கள் பதித்த அந்தக் கடிகாரத்தை உற்றுக் கவனித்தான். பிறகு, ''பத்து அடிக்க இன்னமும் மூன்று வினாடிகள் இருக்கின்றன. நாங்கள் இருவரும் சரியாகப் பத்து மணிக்கே இந்த இடத்திலிருந்து பிரிந்து சென்றோம்'' என்றான்.

''மேல் நாடுகளில் தாங்கள் ஏராளமாகப் பணம் திரட்டினீர்களா?'' என்று கேட்டான் போலீஸ்காரன்.

''ஆமாம், ஆனால் ஜிம்மியும் எனக்குத் தாழ்ந்தவனாக இருக்கமாட்டான். என் அளவு இல்லாவிட்டாலும் பாதியாவது பணம் திரட்டியிருப்பான். அவன் மிகவும் நல்லவன். தயாள குணமுள்ளவன். கடுமையாக உழைக்கக்கூடியவன். நேர்மையின் சிகரம் என்றே அவனைக் கூறலாம். என் திறமையினாலேயே நான் பணம் திரட்டினேன். நியூயார்க் நகரத்தில் வசிப்பவன்; அதிகமாகக் கவலைப்படவேண்டாம். ஆனால், மேல் நாடுகளிலோ கழுத்திற்கு நேராகக் கத்தி இருந்து வரும்.''

போலீஸ்காரன் கையிலிருந்த குறுந்தடியை ஒரு முறை சுழற்றினான். பிறகு இரண்டு அடி பின்னுக்கு நகர்ந்து நின்றான். ''நான் என் கடமையைச் செய்யப் போக வேண்டும். தங்களுடைய நண்பர் கட்டாயம் வந்து சந்திப்பாரென்று நம்புகிறேன். நண்பரை எதிர்பார்த்து நீங்கள் எவ்வளவு நேரம் காத்திருப்பீர்கள்?'' என்று கேட்டான்.

''அதிக நேரம் இருக்கமாட்டேன். அரை மணிக்குள் வந்தால் நல்லது. இல்லாவிட்டால் நான் போய்விடுவேன். ஜிம்மி உயிருடன் இருந்தால் கட்டாயம் என்னைச் சந்திக்க வந்தே தீருவான்.''



''நல்லது; வந்தனம்'' என்று கூறிவிட்டு போலீஸ்காரன் அங்கிருந்து புறப்பட்டான். ஒவ்வொரு கடையாகப் பார்த்துக்கொண்டே சென்றான்.

திடீரென்று காற்று வீசத் தொடங்கிற்று. குளிர் அதிகமாயிற்று. தெருவில் போவோர் கழுத்துப் பட்டையைத் தூக்கி விட்டுக்கொண்டார்கள். கைகளைச் சட்டைப் பையில் போட்டுக்கொண்டு வேகமாக நடந்தார்கள். ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பாலிருந்து நண்பனைச் சந்திக்க வந்தவனோ அமைதி இழந்தான். வாலிப வயதில் நண்பர்கள் செய்துகொண்ட ஒப்பந்தத்தை அவன் பூர்ணமாக நம்பினான். நண்பன் கட்டாயம் வருவான், சந்திக்கலாம் என்ற உறுதியுடன் சுருட்டைப் புகைத்துக்கொண்டிருந்தான்.

மேலும் இருபது வினாடிகள் கழிந்தன. அச்சமயம் அந்த வீதியில் உயரமாக ஒருவன் ஓட்டமும் நடையுமாக வந்து கொண்டிருந்தான். அவனது நீண்ட மேல் அங்கி காற்றில் ஊசலாடிற்று. குளிர்ந்த காற்று தாக்காமலிருக்க அவன் மேல் அங்கியின் கழுத்துப் பட்டையை தூக்கி விட்டுக்கொண்டிருந்தான். அவன் நேராக நண்பனை எதிர்பார்த்திருப்பவன் அருகில் வந்து நின்றான். படபடத்த குரலில், ''உங்கள் பெயர் பாப்தானே?'' என்று கேட்டான்.

''யார் ஜிம்மியா?'' என்று நண்பனை எதிர்பார்த்து நின்றிருந்தவன் கேட்டான்.

''ஆமாம்...கடவுளே!'' என்று சொல்லிக்கொண்டே நின்றிருந்தவன் கையைப் பற்றினான் வந்தவன். பிறகு, ''பாப், விதிதான் நம்மை ஒன்று சேர்த்தது. நீ உயிருடன் இருந்தால் கட்டாயம் உன்னைச் சந்திக்க முடியும் என்று நம்பினேன். நல்லது; நல்லது; ஹம். இருபது ஆண்டுகள்... நீண்ட காலம்; பழைய ஓட்டல் மறைந்தது. அதனால் நாம் மீண்டும் ஒன்றாக அந்த ஓட்டலில் சாப்பிட முடியாமல் போயிற்று. போகட்டும்; மேல் நாடுகளில் உன்னை எப்படி

நடத்தினுர்கள்? உன்னுடைய காலம் எப்படிக் கழிந்தது?'' என்றுன்.

''நான் கேட்டது அனைத்தையும் கொடுத்தார்கள். நீ அடியோடு மாறிவிட்டாய் ஜிம்மி. நீ இவ்வளவு உயரமாக வளர்ந்துவிடுவாய் என்று நினைக்கவே இல்லை!''

''இருபது வயது பூர்த்தியானதும் நான் திடீரென்று உயர்ந்துவிட்டேன்.''

''இங்கு நீ நல்லவிதமாகக் காலம் கடத்துகிறுயா?''

''ஓரளவு நல்லவிதமாகவே இருந்து வருகிறேன். நகரத்தின் முக்கியமான காரியாலயத்தில் வேலை செய்கிறேன். வா, சிறிது தூரம் போகலாம். உன்னிடம் ஏராளமாகப் பேசவேண்டி யிருக்கிறது.''

இருவரும் கைகோர்த்துக்கொண்டு தெருவில் நடக்கத் தொடங்கினர். மேல்நாடுகளுக்குச் சென்று ஏராளமாகப் பணம் திரட்டி வந்தவன் தன் பெருமையைச் சொல்லிக் கொண்டே நடந்தான். அவன் பணம் திரட்டிய விதத்தையும் விவரித்தான். மற்றவனே தலை குனிந்து அவன் சொல்வதை மௌனமாகக் கேட்டுக்கொண்டே நடந்தான்.

தெருவின் முனையில் ஒரு மருந்துக் கடை இருந்தது. அதில் எரிந்துகொண்டிருந்த விளக்கின் வெளிச்சம் தெருவையே பகல்போலாக்கியது. இருவரும் தெரு முனையை அடைந்ததும் விளக்கு வெளிச்சத்தில் ஒருவரை மற்றவர் உற்றுப் பார்த்துக்கொண்டனர். மேல் நாடுகளிலிருந்து வந்தவன் சட்டென்று நின்றுன். நண்பனின் கைப்பிடியிலிருந்தும் கையை விடுவித்துக்கொண்டான். பிறகு ஆத்திரம் நிரம்பிய குரலில், ''நீ ஜிம்மி இல்லை. இருபது ஆண்டுகள் கடந்துவிட்டன என்பது உண்மைதான். ஆனுல், இப்பொழுதும் என்னுல் ஜிம்மியை அடையாளம் தெரிந்துகொள்ள முடியும். நீளமாக இருக்கும் ஒருவனுடைய மூக்கு எந்தக் காலத்திலும் சப்பையாகிவிடாது'' என்றுன்.



''சில சமயங்களில் நல்ல மனிதனை மோசமானவனுகவும் காலம் மாற்றிவிடும்'' என்று சொல்லிக்கொண்டே உயரமானவன் அருகில் நெருங்கி வந்தான். பிறகு, ''நீ கைது செய்யப்பட்டிருக்கிறுய். சிகாகோ போலீஸாருக்கு நீ இங்கு வந்திருப்பது தெரிய வந்தது. அவர்கள் உன்னைக் கைது செய்யும்படி எங்களுக்குத் தந்தியடித்திருக்கிறுர்கள். நல்ல விதமாக வருகிறுயா? உதவிக்கு வேறு யாரையாவது அழைக்கலாமா? கலவரம் செய்யாமல் என்னுடன் வா. நாம் காவல் நிலையத்திற்குப் போவதற்கு முன் இந்தத் துண்டுக் கடிதத்தைப் படித்துவிடு'' என்று கூறி ஒரு துண்டுக் கடிதத்தைக் கொடுத்தான்.

மேல் நாடுகளிலிருந்து வந்தவன் விளக்கு வெளிச்சத்திற்குச் சென்று கடிதத்தைப் பிரித்தான். அவன் கைகள் நடுங்கவில்லை. மனம் தடுமாறவில்லை. அவன் கடிதத்தைப் படிக்கத் தொடங்கினுன். ஆனுல், படித்து முடித்ததும் உடல் முழுவதும் நடுங்கத் தொடங்கிற்று.

கடிதத்திலிருந்தது இதுதான்:

''நண்பா! நாம் குறிப்பிட்ட நேரத்திற்கு நான் அங்கு வந்து சேர்ந்தேன். நீ சுருட்டைப் பற்ற வைக்கத் தீக்குச்சியை உரைத்தபோது அதன் வெளிச்சத்தில் உன் முகத்தைப் பார்த்தேன். உடனே சிகாகோ போலீஸாருக்குத் தேவையான நபர் நீ என்பதை அறிந்துகொண்டேன். எக்காரணத்தாலோ என்னுல் உன்னைக் கைது செய்ய முடியவில்லை. அதனுல் நான் ரகசியப் போலீஸைச் சேர்ந்த ஒருவரைத் தேடிச் சென்றேன். அவரைக் கண்டு பிடித்து உன்னைக் கைது செய்யும் பணியை ஒப்படைத்தேன்.

ஜிம்மி.''

# 3. ஏழையின் ஆசை

குளிர் காலம் ஆரம்பமாகப் போவதை அறிவிக்க மரங்களில் உலர்ந்த இலைகள் உதிரத் தொடங்கின. பறவைகள் அமைதி இழந்து அங்கும் இங்கும் உலாவின. உட்கார்ந்திருந்த சோபியின் மடிமீதும் ஒரு உலர்ந்த இலை வந்து விழுந்தது. இதைப் பார்த்ததும் சோபி சிந்திக்கத் தொடங்கினான்.

பனிக்காலத்தை எங்கே கடத்துவது என்பதை அவன் தீர்மானிக்க வேண்டிய தருணம் வந்துவிட்டது. அதனால் அவன் அமைதி இழந்து எழுந்து உலாவத் தொடங்கினான்.

அவனுடைய ஆசைகள் அவ்வளவு அளவு மீறியதல்ல. கப்பல் பிரயாணம் செய்யவோ, வேறு ஊருக்குச் சென்று ஆனந்தமாகக் குளிர்காலத்தைப் போக்கவோ அவன் விரும்பவில்லை. அவனுடைய ஆசையெல்லாம் குளிர்காலமான மூன்று மாதங்களுக்குப் படுக்க இடம், உண்ண உணவு, உடுக்க உடை ஆகியவையே! இவை அனைத்தையும் அவனுக்குக் கொடுக்கக்கூடியது தீவுச் சிறைதான்.

சோபியின் சட்டைப் பையில் மூன்று பத்திரிகைகள் இருந்தன. முதல் நாள் இரவு பூங்காவில் படுத்திருந்தான். குளிர் அவன் எலும்புகளையே முறிப்பதாக இருந்தது.



அதனால் தீவுச் சிறை அவன் சிந்தனையில் வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

அவன் நகர மக்களின் தயாள குணத்தினால் வாழ்க்கை நடத்தி வந்தான். மக்கள் கொடுக்கும் தருமம் அவன் உணவுக்குத்தான் போதுமானதாக இருந்தது. கம்பளி ஆடை வாங்கவோ, இருக்க இடத்திற்கு வசதி செய்யவோ இயலவில்லை. அதனால் அவனுக்கு மக்களின் தயாள குணத்தைவிட சட்டமே சிறந்ததாகத் தோன்றியது. தயாள குணமுள்ளவர்களிடமிருந்து பெறும் ஒவ்வொரு செப்புக் காசும் அவனை அவமானப்படுத்துவதாக இருந்தது. அதே சமயம் சட்டத்தின் விருந்தாளியாகச் சென்றாலோ கவலையற்றிருக்கலாம். அதற்கென்று சில கட்டு திட்டங்கள் இருக்கின்றன. அவை ஒருவனுடைய தனிப்பட்ட வாழ்க்கையில் குறுக்கிடுவதில்லை.

தீவுச்சிறைக்குச் செல்ல சோபி தீர்மானித்தான். உடனே அவன் ஆவலை நிறைவேற்றிக்கொள்ளவும் முயற்சிக்கத் தொடங்கினான். அவன் எண்ணம் நிறைவேற பல வழிகள் இருக்கின்றன. அவற்றில் மிகவும் கௌரவமானது உயர் தரமான ஓட்டல் ஒன்றுக்குச் செல்வது, அங்கு மனம்போல் பலகாரம் சாப்பிடுவது, பிறகு கையில் காசில்லை என்று கூறுவது—இப்படிச் செய்வதால் உடனே அவன் போலீஸில் ஒப்படைக்கப்படுவான். விசாரணை நடைபெறும்; பிறகு தீவுச்சிறைக்கு அவனை அனுப்பிவிடுவார்கள்.

பூங்காவை விட்டு சோபி புறப்பட்டான். அவன் பிராட்வே பக்கமாகச் சென்றான். சிறிது தூரம் சென்றதும் ஆடம்பரமாக விளக்குகள் பொருத்தப்பட்ட பெரிய ஓட்டல் ஒன்று தென்பட்டது. இந்த ஓட்டலில்தான் பெரிய பணக்காரர்கள் வந்து இரவு வெகு நேரம்வரை தங்கி ஆடிப்பாடி மகிழ்ந்து செல்வார்கள்.

இந்த ஆடம்பர ஓட்டலினுள் செல்ல சோபி ஓரளவு தகுதியுள்ளவனாக இருந்தான். அவன் முகத்தை க்ஷவரம்

செய்து கொண்டிருந்தான். மேல் அங்கியும் நன்றாக இருந்தது. அவனால் ஓட்டலினுள் சென்று ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டால் போதுமானது. அவனுடைய ஆவல் நிறைவேறிவிடும். வெற்றி கிடைக்கும். அவன் மேல் அங்கி சொக்காய் முதலியவற்றைக் கண்டு ஓட்டல் சிப்பந்தி சந்தேகப்பட முடியாது

ஓட்டலைக் கண்டதும் உள்ளே சென்று என்ன சாப்பிடலாம் என்று சிந்தித்தான் சோபி. ஒரு பொறித்த வாத்து, உயர்தரமான ஒரு புட்டி சாராயம். பிறகு ஒரு டாலர் விலையுள்ள சுருட்டு. இது போதுமானது என்று தீர்மானித்தான். இவை அனைத்திற்கும் சேர்த்து ஆகக்கூடிய பணம் ஓட்டல்காரனை வஞ்சம் தீர்க்கப் போதுமானது. ஆனால், மாமிச உணவுமாத்திரமே அவன் விரும்பும் குளிர் கால இருப்பிடத்திற்கு அனுப்ப அதிகம் எனலாம்.

ஒரு முடிவுக்கு வந்ததும் சோபி மெள்ள நடந்து ஓட்டலின் வாயில் படியில் கால் எடுத்து வைத்தான். அவன் வந்ததை தலைமை சிப்பந்தி பார்த்துவிட்டான். சோபியின் நிஜார், பூட்ஸ் ஆகியவற்றின்மீது அவனுடைய பார்வை சென்றது. மறுகணம் பலம் பொருந்திய கைகள் சோபியைப் பற்றித் தெருவின் நடுபாகத்திற்குக் கொண்டு தள்ளின. சோபியின் துரதிர்ஷ்டம் அவனை விட்டு அகலவில்லை. அது அவனுக்கு வெற்றி ஏற்படுவதைக் கெடுத்துவிட்டது.

சோபி எழுந்து நடந்தான். அவன் விரும்பிய தீவுக்குப் போவது அவ்வளவு எளிதல்ல போலத் தோன்றிற்று. வேறு ஏதாவது வழியிலேயே முயற்சிக்க வேண்டும் என்று முடிவு செய்தான்.

ஆறுவது வீதிக்குச் சென்றான். அங்கு ஒரு கடை வெகு நேர்த்தியாக அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. பெரிய கண்ணாடிகள் பொருத்தப்பட்ட ஜன்னல்களில் விலை உயர்ந்த சாமான்களை மக்கள் பார்ப்பதற்காக வைத்திருந்தார்கள். இதைப் பார்த்ததும் சோபி ஒரு முடிவுக்கு வந்தான். தெருவி



லிருந்த பெரிய கல் ஒன்றை எடுத்துக் கண்ணாடியை நோக்கி வீசி எறிந்தான். கண்ணாடி சுக்கல் சுக்கலாக உடைந்தது. இந்த சப்தம் கேட்டு தெருவில் போய்க் கொண்டிருந்த மக்கள் ஓடிவந்து கூடினர். ஒரு போலீஸ்காரனும் அங்கு வந்து சேர்ந்தான். இச்சமயத்திலும் சோபி இரண்டு கைகளையும் நிஜார்பையில் விட்டுக்கொண்டு அங்கேயே நின்றிருந்தான். போலீஸ்காரனைக் கண்டதும் அவன் உதடுகளில் புன்னகை தவழ்ந்தது.

''கண்ணாடியை உடைத்தவன் எங்கே?'' என்று கேட்டான் போலீஸ்காரன்.

''என்னைப் பார்த்தாலே தெரியவில்லையா? நான்தான் செய்ததாகத் தோன்றவில்லையா?'' என்றான் சோபி. அவன் சொன்னது சந்தேகத்தை ஏற்படுத்துவதாக இல்லை. மேலும் ஒரு நண்பன் கூறுவதுபோலக் காணப்பட்டது.

போலீஸ்காரனுடைய உள்ளம் சோபி சொன்னதை ஏற்றுக் கொள்ள மறுத்தது. இத்தகைய காரியங்களைச் செய்தவர்கள் சட்டத்திற்குப் பயந்து அங்கிருந்து ஓடிவிடுவார்கள். வேடிக்கை பார்த்துக்கொண்டு நிற்கமாட்டார்கள். அச்சமயம் ஒருவன் வேகமாக ஓடிக்கொண்டிருப்பதை போலீஸ்காரன் பார்த்துவிட்டான். உடனே அவனைப் பின் தொடர்ந்து ஓடிச் சென்றான். சோபிக்கு இது ஏமாற்றத்தை அளித்தது. இரண்டாம் முறையாகவும் அவனுக்குத் தோல்வி ஏற்பட்டது.

அந்தக் கடைக்கு எதிர்ப்பக்கத்தில் ஒரு ஓட்டல் இருந்தது. அது அவ்வளவு உயர்தரமானது என்று கூறுவதற்கில்லை. ஆனாலும் ஓரளவு நல்ல உணவுவகைகளும் சாராயமும் கிடைக்கும். அந்த ஓட்டலினுள் சென்று வெற்றியடைய சோபி தீர்மானித்தான். உடனே அதற்கான முயற்சியையும் தொடங்கினான்.

ஓட்டலினுள் செல்ல அவனுடைய நிஜார், பூட்ஸ் ஆகியவை தடையாக இருக்கவில்லை. நேராக ஒரு நாற்

காலிக்குச் சென்று உட்கார்ந்து கொண்டான். போதுமான அளவு சாப்பிட்டான். சாராயமும் பருகினான். பிறகு சிப்பந்தியிடம் கையில் ஒரு செப்புக்காசும் இல்லை என்று கூறினான். "போலீஸ்காரரை அழைத்து வாருங்கள். என்னை அதிக நேரம் உட்காரவைக்காதீர்கள்" என்றான் சோபி.

"உனக்குப் போலீஸ்காரன் வேறு வேண்டுமா? வேண்டாம்" என்றான் சிப்பந்தி.

உடனே இரண்டு சிப்பந்திகள் வந்தனர். சோபியின் சட்டையைப் பற்றித் தூக்கினர். தெருவரை இழுத்துச் சென்று குப்பைத் தொட்டியில் தூக்கிப் போட்டனர். பிறகு அவர்கள் உள்ளே சென்றுவிட்டனர். சோபி எழுந்தான். ஆடையிலுள்ள மண், தூசி ஆகியவற்றைத் தட்டிக் கொண்டான். அப்போது அவன் கண்டு கொண்டிருந்த ஆனந்தக் கனவு கலைந்தது. அவனுடைய ஆசைத் தீவு வெகு தூரத்திலிருப்பதாகத் தோன்றியது. மருந்துக் கடையின் முன்னால் ஒரு போலீஸ்காரன் நின்றிருந்தான். அவன் சோபியைப் பார்த்து நகைத்தான்.

சோபி மெள்ள நடந்தான். மூன்று நான்கு கடைகளைக் கடந்து செல்லும்வரை அவனை விட்டு அச்சம் அகலவில்லை. யாராவது வந்து அவனைப் பற்றிக் கொள்வார்களோ என்று சந்தேகப்பட்டான். ஆனால், சிறிது நேரத்தில் அது மறைந்தது.

மேலும் சிறிது தூரம் சென்றபோது ஒரு யுவதி, கடையொன்றின் முன்னால் நின்று சாமான்களைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவளுக்குச் சற்று தூரத்தில் போலீஸ்காரன் ஒருவனும் நின்றுகொண்டிருந்தான்.

இதைக் கண்டதும் சோபிக்கு ஒரு எண்ணம் உதித்தது. அந்த யுவதியின் அருகில் சென்று அவளை மோதிக்கொண்டு செல்வதால் கட்டாயம் அவன் விரும்பும் குளிர்கால இருப்பிடத்திற்குச் செல்ல முடியும் என்று தீர்மானித்தான்.



யுவதியின் அருகில் சென்றான் சோபி. சட்டையின் கழுத்துப் பட்டையை மேலே தூக்கிவிட்டான். கைப்பித்தானை அவிழ்த்து மீண்டும் போட்டுக் கொண்டான். அவளையே முறைத்துப் பார்த்தான். இருமுவதுபோல் பாசாங்கு செய்தான். அவள் திரும்பிப் பார்த்தபோது புன்முறுவல் செய்தான். அவன் செய்வது முழுவதையும் போலீஸ்காரன் கவனித்துக் கொண்டிருக்கிறான் என்பதையும் அரைக் கண்ணால் பார்த்து அறிந்தான். அப்படியும் போலீஸ்காரன் அவனை ஒன்றும் செய்யவில்லை. கடைசியாகத் துணிவுடன் யுவதியின் அருகில் சென்று நின்றான். தலையிலிருந்து தொப்பியைக் கழட்டி கையில் வைத்துக் கொண்டு யுவதியை பார்த்து, "பிடல். என் வீட்டிற்கு வந்து ஆடிப்பாடி மகிழ்விக்க மாட்டாயா?" என்றான்.

அப்பொழுதும் போலீஸ்காரன் பார்த்துக்கொண்டே மௌனமாக நின்றிருந்தான். அவன் மாத்திரம் வந்து சோபியைக் கைது செய்திருந்தால் நலமாக இருக்கலாம். சோபி கற்பனை செய்து கொண்டிருந்த தேவலோகமும் கிட்டியிருக்கலாம். சோபியும் அவ்விதமே எண்ணியிருந்தான். அவனைப் போலீஸ் நிலையத்திற்கு அழைத்துச் சென்றுவிட்டதாகவும் கனவு கண்டான். ஆனால், நடந்தது வேறு விதமாகிவிட்டது.

அந்த யுவதி கையை நீட்டி சோபியின் கையைப் பற்றிக் கொண்டாள். "கட்டாயம் வருகிறேன். நீங்களும் என்னை மகிழ்விக்கவேண்டும். அதிருக்கட்டும். விரைவிலேயே நாம் எல்லாவற்றையும் பேசி முடிவு செய்யலாம். நம்மைப் போலீஸ்காரன் பார்த்துக் கொண்டிருக்கிறான்" என்றாள்.

மறுகணம் அந்த யுவதி அங்கிருந்து சென்றாள். போலீஸ்காரனை நோக்கி சோபி சென்றான். அவன் இனி தப்ப முடியாது என்றும் எண்ணினான். ஆனால், போலீஸ்காரனோ அவன் எண்ணத்திற்கு நேர்மாறாக நடந்துகொண்டான்.

மறுகணம் சோபி வேகமாக நடந்தான். அந்த யுவதியை அடித்துத் தள்ளிவிட்டு அங்கிருந்து ஓடினான். சுமார் நான்கு தெருக்களைக் கடந்த பிறகே அவன் நின்றான். தெருக்களில் பிரகாசமாக விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. ஆண்களும் பெண்களும் குளிர்காலம் ஆரம்பமானதை எடுத்துக் காட்டும் வகையில் கம்பள ஆடைகள் உடுத்திக்கொண்டு சென்றார்கள். திடீரென்று சோபிக்கு அச்சம் ஏற்பட்டது. ஏதோ ஒரு பயங்கரமான சக்தி அவனைக் கைது செய்வதிலிருந்து தடுப்பதாகத் தோன்றியது. இந்த எண்ணமே அவனுக்குக் குலைநடுக்கத்தை உண்டு பண்ணிற்று. அவன் சிறிது தூரம் நடந்தான். அப்போது ஒரு போலீஸ்காரன் கம்பம் ஒன்றில் சாய்ந்து கொண்டு நின்றிருப்பதைக் கண்டான். உடனே தலையிலிருந்த தொப்பியை இழுத்து விட்டுக்கொண்டான். தவறான வழியில் செல்பவனைப் போல் நடிக்கத் தொடங்கினான்.

மதுபோதையில் பிதற்றிக்கொண்டு செல்பவனைப்போல் உரக்கக் கத்தினான். தள்ளாடித் தாள்ளாடி நடந்தான். நடுத்தெருவிலேயே நடனமாடவும் தொடங்கினான் சோபி. வழியில் போவோர் வருவோரையும் தடுத்து நிறுத்தினான்.

போலீஸ்காரன் கையிலிருந்த குறுந்தடியைச் சுழட்டினான். பிறகு புன்முறுவல் செய்துகொண்டே பக்கத்திலிருந்த ஒரு கனவானிடம், "இந்தப் பையன்களே இப்படித் தான் கூக்குரலிட்டு ஊரைக் கூட்டுவார்கள். ஆனால், ஒரு தீங்கும் செய்யமாட்டார்கள். இத்தகையவர்களை ஒன்றும் செய்யக்கூடாது என்று மேலதிகாரிகள் எங்களுக்குக் கட்டளையிட்டிருக்கிறார்கள்" என்றான்.

போலீஸ்காரன் சொன்னதைக் கேட்டு சோபி திகைத்தான். அவன் தலையில் இடி விழுந்தது போலவும் தோன்றிற்று. அவன்மீது எந்த ஒரு போலீஸ்காரனும் கை வைக்க மாட்டானா? அவனுடைய கனவுத் தீவுக்குப் போகவே முடியாதா? சோபி கலங்கினான். தன் தொப்பியையும் ஆடையையும் சரி செய்து கொண்டான். குளிர்ந்த காற்று



வீசிக்கொண்டிருந்தது. அதிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள மேல் அங்கியை நன்றாக இழுத்துப் போட்டுக் கொண்டான்.

ஒரு சுருட்டுக் கடையில் ஆடம்பரமாக ஆடை உடுத்திக் கொண்டு ஒருவன் நிற்பதைக் கண்டான் சோபி. அவன் ஒரு விலை உயர்ந்த குடையைக் கடையின் வாயிலில் வைப்பதையும் பார்த்தான். சோபி மெள்ள அங்கு சென்றான். குடையை எடுத்துக்கொண்டு தெரு வழியே நடந்தான். சுருட்டுக் கடையினுள் சென்ற கனவான் வாயில் சுருட்டுடன் வெளியே வந்தான். குடையை எடுத்துக் கொண்டு சோபி செல்வதையும் பார்த்தான். உடனே அவனைப் பின் தொடர்ந்து வேகமாக நடந்தான். சோபியை நெருங்கியதும் அவன் கம்பீரமான குரலில், "என் குடை..." என்றான்.

சட்டென்று சோபி நின்றான். "அப்படியா?...அப்படியானால் நீங்கள் ஏன் போலீஸ்காரரை அழைக்கக்கூடாது? நான்தான் அதை எடுத்துக்கொண்டேன். உங்கள் குடை. போலீஸ்காரரைக் கூப்பிடுங்கள். அதோ நின்றுகொண்டிருக்கிறார்" என்றான்.

குடையின் சொந்தக்காரன் தயங்கினான். இந்தச் சமயமும் அதிர்ஷ்டம் அவனை மோசம் செய்துவிடுமோ என்று சோபியும் எண்ணினான். அதே சமயம் போலீஸ்காரன் அவர்கள் இருவரையும் வியப்புடன் பார்த்தான்.

குடைக்குச் சொந்தக்காரன் தணிவான குரலில், "ஹூம், நீங்கள் கூறுவது உண்மைதான். இந்தத் தவறு எப்படி நடந்தது தெரியுமா? இன்று காலை நான் ஒரு ஓட்டலில் இதைக் கண்டு எடுத்தேன். இது உங்களுடையது என்றால் மன்னித்து விடுங்கள். குடையை எடுத்துச் செல்லுங்கள்" என்றான்.

"என்னுடையதுதான்" என்று கர்வத்துடன் சொன்னான் சோபி.

குடையைவிட்டு அந்த கனவான் அங்கிருந்து சென்றான். போலீஸ்காரனும் தெருவை அடைத்துக்கொண்டு வரும் வண்டிக்கு வழி செய்து கொடுக்கவும், மக்கள் போக்கு வரத்துக்குத் தடங்கல் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளவும் வேகமாகச் சென்றான்.

நிலைமை சீர்திருந்தியதைக் கண்டு சோபி மகிழ்ச்சி யடையவில்லை. அவன் வெறுப்புடன் இரண்டு மூன்று தெருக்களைக் கடந்து சென்றான். அவனை நம்பிக்கை மோசம் செய்த குடையை ஒரு குப்பைத் தொட்டியில் போட்டான். அவ்வழியே வந்த போலீஸ்காரன் மீது முட்டி மோதினான். எப்படியாவது அவனைக் கைது செய்து அழைத்துச் செல்லவேண்டும் என்று எண்ணினான். ஆனால் போலீஸ்காரனே அவனை நாட்டின் அதிகாரி, அவன் தவறாக ஒன்றும் செய்யமாட்டான் என்று எண்ணி மௌனமாகப் போவதுபோலத் தோன்றியது.

கடைசியாக கிழக்குப் பகுதியிலுள்ள ஒரு பெரிய வீதிக்கு வந்து சேர்ந்தான் சோபி. அந்த வீதியில் ஒவ்வொரு வீட்டின் முன்பும் சிறு பூங்காவும், அதில் உட்கார்ந்து கொள்ள பலகையும் போடப்பட்டிருந்தது.

ஆனால், வழக்கத்திற்கு மாறாக சந்தடியற்ற தெரு முனையை அடைந்ததும் சோபி அப்படியே நின்றான். அங்கு ஒரு பழைய மாதாகோயில் இருந்தது. அதன் சுவர்கள் இடிந்தும், மேல் பூச்சுக் காரை அகன்றும் போயிருந்தது. மாதா கோயிலின் ஒரு ஜன்னல் வழியே மங்கலான ஒளி வந்து கொண்டிருந்தது. அங்கு பியானோ வாத்தியத்தில் துதிப் பாடல்களை யாரோ இசைத்துக் கொண்டிருந்தார்கள். அந்த இனிமையான நாதம் சோபியின் செவிகளில் பாய்ந்து அவனை அசைவற்று நிற்கச் செய்தது.

வானத்தில் சந்திரன் பிரகாசமாகக் காணப்பட்டான். வீதியில் அதிகமாக வண்டிகளோ மக்களோ தென்படவில்லை,



பறவைகள் கூண்டினுள் அடைபட்ட வண்ணம் மெள்ளக் கத்திக்கொண்டிருந்தன.

மாதா கோயிலும் துதிப் பாடலும் சோபியின் உள்ளத்தில் திடீரென்று மாறுதலை ஏற்படுத்திற்று. உடனே கடந்த காலத்தில் அவன் மோசமாக நடந்துகொண்டது, பயனற்ற ஆசைகள், நிறைவேற முடியாத எண்ணங்கள், அழிந்து போன நம்பிக்கைகள், கீழ்த்தரமான செய்கைகள் அனைத்தும் மனக் கண்முன் தோன்றின.

ஒரு கணம் அவன் உள்ளம் இந்த மாறுதலால் ஏற்பட்ட இன்பம், மகிழ்ச்சி ஆகியவற்றால் நிரம்பியது. அந்தக் கணம் அவன் தன்னையே மறந்தான். அதே சமயம் வெறிபிடித்த விதியை எதிர்த்துப் போராட அவன் மனம் துள்ளி எழுந்தது மோசமான வாழ்க்கையிலிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொண்டு நல்லவிதமாக வாழ வேண்டும். மீண்டும் மனிதனாகி கெட்ட சக்திகளை வென்று ஏதாவது ஒரு தொழிலைச் செய்யவேண்டும் என்று தீர்மானித்தான். அதற்கு இன்னமும் தருணம் இருந்தது. அவன் வாலிபனாகவும் இருந்தான். பழைய நல்ல ஆசைகளையும், சிறந்த வழக்கங்களையும் அவன் புதுப்பித்துக்கொண்டு அவ்விதமே நடக்கவும் செய்யலாம்.

புனிதமான துதிப் பாடல்கள் அவன் உள்ளத்தில் புரட்சி செய்து மாற்றியது. நாளை அவன் கீழ் மாவட்டத்திற்குச் சென்று ஏதாவது ஒரு வேலையைத் தேடிக்கொள்ளத் தீர்மானித்தான். கம்பளங்களை இறக்குமதி செய்யும் ஒரு வியாபாரி ஒரு சமயம் அவனுக்கு வண்டி ஓட்டும் வேலையைத் தருவதாகச் சொல்லியிருந்தான். அவனை நாளையே கண்டு பிடித்து வேலையில் சேர்த்துக்கொள்ளக் கேட்கவேண்டும் என்றும் எண்ணினான். இனி அவன் உலகத்தில் வேறு மனிதனாகவே வாழ்க்கை நடத்துவான்.

சோபி இவ்விதம் சிந்தித்துக் கொண்டிருக்கும்போது யாரோ அவனுடைய தோளில் கை வைப்பது போன்று

உணர்ந்தான். அவன் மெள்ளத் திரும்பிப் பார்த்தான். எதிரில் ஒரு போலீஸ்காரன் நின்றுகொண்டிருந்தான்.

"இங்கே என்ன செய்கிறாய்?" என்று போலீஸ்காரன் கேட்டான்.

"ஒன்றுமில்லை" என்றான் சோபி.

"அப்படியானால் என்னுடன் வா!" என்று அதிகாரத்துடன் கூறி சோபியை அழைத்துச் சென்றான் போலீஸ்காரன்.

* * *

மறு நாள் பயங்கர குற்றங்களை விசாரிக்கும் விசாரணை மன்றத்தில் மாஜிஸ்டிரேட், "மூன்று மாதம் தீவிலுள்ள சிறைக்கு அனுப்புக" என்று சோபிக்குத் தண்டனை அளித்தார்.

# 4. வில்லி ஜாக்ஸன்

முதலில் உங்களுக்குப் பார்க்கர், இரட்டைக் கூடமுள்ள அறையையே காட்டுவாள். அதில் எட்டு ஆண்டுகள் குடியிருந்தவனைப் பற்றியும், அறையின் சிறப்பையும் வசதிகளையும் விவரிப்பாள். அப்போது உங்களால் குறுக்கிடவே முடியாது. பிறகு நீங்கள் மருத்துவரோ, பல் கட்டுபவரோ இல்லை என்பதை அவளிடம் கூறுகிறீர்கள். உங்களை அந்த இரண்டு தொழில்களில் ஒன்றில் பெற்றோர் ஈடுபடுத்தாதது வருந்தத்தக்கது என்ற வகையில் அவள் பேச முற்படுவாள்.

அதன்பின் முதல் மாடியிலுள்ள அறைக்குப் போகிறீர்கள். அதற்கு எட்டு டாலர் வாடகை. ஆனால், பன்னிரண்டு டாலர் வாடகை கொடுக்கத் தகுதியானது என்று அவள் கூறுவதை நீங்கள் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். அதில் குடியிருந்த தோசன் பெர்ரி என்பவன் பெளோரிடாவுக்குப் போகும்வரை வாடகையை முன் கூட்டியே கொடுத்துவிடுவான் என்றும் கூறுவாள். நீங்களோ அதையும் விடக் குறைவான வாடகையில் அறை வேண்டும் என்று தயங்கிக்கொண்டே கூறுவீர்கள்.

பார்க்கருடைய வெறுப்பிலிருந்து நீங்கள் தப்பி விட்டால் உங்களை மூன்றாவது மாடியிலுள்ள ஸ்கெயிடரின்

பெரிய அறையைக் காட்ட அழைத்துச் செல்வாள். ஸ்கெயிடரின் அறை காலியாக இருக்கவில்லை. அவன் நாடகங்கள் எழுதுவான். நாள் முழுவதும் சிகரெட் பிடித்துக் கொண்டிருப்பான். ஆனால், அறை வேண்டும் என்று வரும் ஒவ்வொருவரும் அவனுடைய அறையைப் பாராட்டாமல் போகமாட்டார்கள். ஒவ்வொருவரும் வந்து அறையைப் பார்த்துச் சென்ற பிறகு அதைக் காலி செய்யச் சொல்வார்களோ என்ற பயத்தில் வாடகையில் சிறிதாவது பணத்தை அவன் கொடுக்காமல் போகமாட்டான்.

அதன் பிறகும் நீங்கள் சொக்காய் பையில் மூன்று டாலருடன் நின்றுகொண்டிருந்தால் பார்க்கர் மௌனமாக இருக்கமாட்டாள். உங்கள் ஏழ்மையைக் கண்டு அனுதாபம் காட்டமாட்டாள். அவள் கடுமையான குரலில், "கிளாரா" என்று அழைப்பாள். அவள் வந்ததும் உங்களை மேல் மாடியிலிருக்கும் அறைக்கு அழைத்துச் செல்வாள்.

அந்த அறையில் ஒரு இரும்புக் கட்டில், துணிகளை உலர வைக்கும் கொடி, ஒரு நாற்காலி ஆகியவையும், ஆடைகளை வைக்க அலமாரியும் இருக்கின்றன. அதனுடைய நான்கு சுவர்களும் உங்களுக்குச் சவப்பெட்டியைப் போலத் தோன்றலாம். நீங்கள் கையால் மார்பை அழுத்திக் கொண்டு பெருமூச்சு விட்டு மேலே பார்க்கலாம். கூரையிலுள்ள கண்ணாடியின் மூலம் நீங்கள் வானவீதியைக் காணலாம்.

'இரண்டு டாலர் வாடகை" என்று கிளாரா இனிமையான குரலில் கூறுவாள்.

ஒரு நாள் பார்க்கரின் இல்லத்திற்கு ஒரு அறை வேண்டும் என்று லீசன் வந்தாள். அவள் தன்னுடன் ஒரு டைப் அடிக்கும் யந்திரத்தையும் எடுத்து வந்திருந்தாள். லீசன் யுவதி. நல்ல அழகி.

அவளுக்குப் பார்க்கர் முதலில் இரட்டைக் கூடத்துடன் கூடிய அறையைக் காட்டினாள். "இந்த அலமாரிகள்



ஒன்றில் எலும்புக்கூடு, அல்லது மயக்க மருந்து, அடுப்புக்கரி ஆகிய எதையும் வைக்கலாம்..." என்றாள்.

உடனே லீசன், "நான் மருத்துவம் செய்பவளோ, பல் கட்டுபவளோ இல்லை" என்றாள்.

பார்க்கர் அவளை அனுதாபக் கண்களோடு பார்த்தாள். பிறகு இரண்டாவது மாடிக்கு அழைத்துச் சென்றாள்.

"எட்டு டாலரா? என்றால் இயலாது. பார்ப்பதற்கு நான் ஆடம்பரமாகத் தோன்றினாலும் மிகவும் ஏழை. குறைந்த வாடகையில் இருக்கட்டும். அது மாடியிலோ கீழோ எங்கு வேண்டுமானாலும் இருக்கலாம்" என்றாள் லீசன்.

ஸ்கெயிடரின் அறைக்கு லீசனும், பார்க்கரும் வந்து கதவைத் தட்டினர். உடனே ஸ்கெயிடர் துள்ளி எழுந்தான். தரையில் கிடந்த சிகரெட்டுத் துண்டுகளை மிதித்துக்கொண்டே வந்து கதவைத் திறந்தான்.

"மன்னிக்கவும். தாங்கள் உள்ளே இருப்பீர்கள் என்று நினைக்கவில்லை. இந்த அம்மாளை உங்கள் அறையைப் பார்க்கும்படி சொன்னேன்" என்று பார்க்கர் புன்முறுவல் செய்துகொண்டே சொன்னாள்.

"ஆஹா! நேர்த்தியான அறை" என்று புன்முறுவல் செய்துகொண்டே சொன்னாள் லீசன். தேவதைகளைப்போல அச்சமயம் அவள் காணப்பட்டாள்.

பார்க்கரும் லீசனும் சென்ற பிறகு ஸ்கெயிடர் தமது நாடகத்தில் வரும் உயரமும், கருத்த கூந்தலுமுடைய கதாநாயகியை அகற்றினான். அவளுக்குப் பதிலாகக் குள்ளமாகவும், பளபளவென்று மின்னும் கூந்தலும் குறும்புத்தனமும் உள்ளவளைக் கதாநாயகியாகச் சேர்த்தான்.

'அன்னா துள்ளிக் குதிப்பாள்' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான் ஸ்கெயிடர். பிறகு கால்களை மேலே தூக்கிப் போட்டுக்கொண்டு சிகரெட் புகையில் மறைந்து விட்டான்.

லீசனிடமுள்ள பணத்தின் அளவை அறிந்த பார்க்கர் உடனே கிளாராவை அழைத்தாள். கிளாரா வந்து லீசனை மாடிக்கு அழைத்துச் சென்றாள். மேல் மாடியிலிருந்த அறையைக் காட்டினாள். அவளை அறியாமல் அவளுடைய நா, "இரண்டு டாலர்கள்" என்றன.

"இந்த அறையையே எடுத்துக் கொள்கிறேன்" என்று கூறி லீசன் இரும்புக் கட்டிலுக்குச் சென்று அதில் உட்கார்ந்து கொண்டாள்.

* * *

ஒவ்வொரு நாளும் லீசன் வேலைக்குச் செல்லுவாள். இரவு அவள் டைப் அடித்துக் கொடுப்பதற்காகக் கையினால் எழுதப்பட்ட காகிதக் கட்டுகளை எடுத்து வருவாள். சில நாட்களில் அவள் இரவு வெகு நேரம்வரை வேலை செய்ய வேண்டியிருக்கும். அதன் பிறகு வீட்டின் மற்ற குடித்தனக் காரர்களுடன் மாடிப் படிகளில் உட்கார்ந்து கொள்வாள். அவளுடைய திட்டங்கள் நிறைவேற வேண்டும் என்பதற் காக மேல் மாடி அறையை வாடகைக்கு எடுத்துக் கொள்ள வில்லை. அவள் இளகிய உள்ளம் படைத்தவள். விசித்திர மான எண்ணமுடையவள். ஒரு சமயம் அவளை ஸ்கெயிடர் தமது மூன்று அங்க நாடகத்தைப் படித்துப் பார்க்கச் சொன்னான்.

மாடிப் படிகளில் லீசன் சிறிது நேரம் உட்கார அவகாசம் கிடைத்தால் அதைக் கண்டு அங்குள்ள ஆண்களில் சிலர் மகிழ்ச்சியடைவர். ஆனால், உயரமாகவும் பொதுப் பள்ளி யில் படித்தவளுமான லாங் மாடிப்படிகளில் உட்கார்ந் தாலோ பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்க வேண்டியது தான். ஒரு கடையில் வேலை செய்யும் டொரன் உட்கார்ந் தாலும் இதேபோலத்தான். அதே சமயம் லீசன் மாடியின் கடைசிப் படியில் உட்கார்ந்தால் ஆண்கள் அனைவரும் அவளைச் சூழ்ந்துகொண்டு விடுவார்கள்.



முக்கியமாக ஸ்கெயிடர் வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசாமல் வாழ்க்கையின் உண்மையான காதல் நாடகத் தில் பங்கு எடுத்துக்கொண்டிருந்தான். ஜூவருக்கு நாற்பத் தைந்து வயதிருக்கலாம். பருமனாக இருக்கும் அவன் ஒரு முட்டாள். வாலிப ஈவானோ லீசன் முன்னால் சென்று இருமுவான். அவனிடம் சிகரெட் பிடிப்பதை விட்டுவிடு என்று லீசன் சொல்லமாட்டாளா என்று ஏங்குவான். ஆண்கள், அவளை விசித்திரமானவள், மகிழ்ச்சிகரமானவள் என்று எண்ணினர். ஆனால், மாடிப்படிகளில் உட்காரும் மற்ற பெண்களோ பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தனர்.

* * *

வேனிற் காலத்தில் ஒரு நாள் மாலை லீசன் வானத் தைப் பார்த்தாள். உடனே அவள் மகிழ்ச்சியுடன் சிரித்துக் கொண்டே உரத்த குரலில், "அதோ வில்லிஜாக்ஸன். அவனை நான் இங்கிருந்தே பார்க்கலாம்" என்றாள்.

எல்லோரும் வானத்தைப் பார்த்தனர். சிலர் ஜன்னல் வழியாகவும் வானத்தை நோக்கினர்.

"அது அந்த நட்சத்திரம்" என்று லீசன் தனது மெல்லிய விரலால் சுட்டிக் காட்டினாள். பிறகு, "பெரியதாக இருப்ப தல்ல. அதற்குப் பக்கத்தில் நீல நிறத்துடன் பிரகாசித்துக் கொண்டிருப்பதுதான். ஒவ்வொரு நாள் இரவும் நான் என் அறையின் கண்ணாடி மூலமாக அதைப் பார்ப்பேன். அதற்கு நான் வில்லிஜாக்ஸன் என்று பெயர் வைத்திருக்கிறேன்!" என்றாள் லீசன்.

"ஹூம் உண்மைதான். லீசன், ஜோதிடக் கலை உனக்குத் தெரியும் என்று நான் நம்பவே இல்லை" என்றாள் லாங்.

"அந்த நட்சத்திரத்திற்கு வில்லிஜாக்ஸன் என்ற பெயர் பொருத்தமானது" என்று வாலிப ஈவான் சொன்னான்.

"பழைய ஜோதிடர்கள் எவ்விதம் அமைத்த போதிலும் என்ன பெயர் வைக்கவும் லீசனுக்கு உரிமை உண்டு" என்றான் ஜுவர்.

"இங்கிருந்து அது நன்றாகத் தெரியவில்லை. என் அறையிலிருந்து பார்க்க வேண்டும். கிணற்றின் அடி பாகத்திலிருந்தும் பகல் வேளைகளில் நட்சத்திரங்களைக் காணலாம். இது உங்களுக்குத் தெரியுமா? இரவு நேரங்களில் என் அறை நிலக்கரிச் சுரங்கம்போல இருக்கும். அப்போது ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் வைரக் கற்களைப்போல வில்லிஜாக்ஸன் வானத்தில் இருக்கும்" என்றாள் லீசன்.

அதன் பிறகு இரவு நேரங்களில் டைப்படித்துக் கொடுக்க கையெழுத்துப் பிரதிகளை லீசன் எடுத்துவராத நாட்களும் இருந்தன. காலையில் அவள் வேலை செய்வதற்குப் போவதற்குப் பதில் ஒவ்வொரு காரியாலயத்திற்குமாகச் சென்றாள். அங்கெல்லாம் அவளை உதவாக்கரை என்று காவலாளிகள் விரட்டினார்கள்.

மாலை வேளைகளில் லீசன் களைத்துப்போய் வீடு திரும்பும் நாட்களும் வந்தன. அவள் சாப்பிட்டுவிட்டு ஓட்டலிலிருந்து திரும்ப வேண்டிய நேரமும் அதுவேதான். ஆனால், அவள் சாப்பிட்டே இருக்கமாட்டாள்.

இவ்விதமே ஒரு நாள் அவள் ஒன்றும் சாப்பிடாமல் வீட்டிற்கு வந்தாள். அவள் கூடத்தில் அடி வைத்தாள். சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் ஜுவர் முன்னால் சென்றான். தன்னை மணக்கும்படி கேட்டுக்கொண்டான். அவனிடமிருந்து தப்பிச் செல்ல முயற்சி செய்தாள் லீசன். அவனே அவள் கையைப் பற்றிக் கொண்டான். லீசன் முரட்டுத்தனமாகக் கையை விடுவித்துக் கொண்டு அவனுடைய கன்னத்தில் அறை விட்டாள். பிறகு மெள்ள ஒவ்வொரு படியாக ஏறிச் சென்றாள். ஸ்கெயிடரின் அறையையும் கடந்து சென்றாள். அப்போது ஸ்கெயிடர் தன் நாடக கதா பாத்திரங்களுடன் உரையாடிக்கொண் டிருந்தான். மெள்ள



கம்பளம் விரிக்கப்பட்ட படிகளில் ஏறி தன் அறையை அடைந்தாள் லீசன்.

விளக்கை ஏற்றவோ ஆடையை மாற்றிக் கொள்ளவோ கூட அவளுக்குச் சக்தியிருக்கவில்லை. இரும்புக் கட்டிலில் அப்படியே சாய்ந்தாள். வானத்திற்கும் பூமிக்குமிடையேயுள்ள அந்த இருண்ட அறையிலிருந்து அவள் மெள்ளக் கண்களைத் திறந்தாள். புன்முறுவல் செய்தாள்.

வில்லி ஜாக்ஸன் அவள் எதிரே மின்னிப் பிரகாசித்துக் கொண்டிருந்தான். கண்ணாடியின் வழியாக அதனுடைய ஒளி உள்ளே பாய்ந்து வந்துகொண்டிருந்தது. அவளுக்கு என்று ஒரு உலகமே இருக்கவில்லை. அவள் இருள் நிறைந்த படுகுழியில் கிடந்தாள். நட்சத்திரத்தின் ஒளிதான் அவள் அறையில் படர்ந்திருந்தது. அந்த நட்சத்திரத்திற்கே அவள் பெயர் வைத்திருந்தாள். லாங் கூறியது உண்மையாக இருக்கலாம். அது வில்லி ஜாக்ஸன் இல்லை.

படுத்திருந்த லீசன் இரண்டு முறை கையைத் தூக்க முயற்சித்தாள். மூன்றும் முறையாக மெல்லிய விரல்களை உதடுகளின் அருகில் எடுத்துச் சென்றாள். வில்லி ஜாக்ஸனுக்காக அவற்றில் முத்தமிட்டாள். பிறகு அவளுடைய கை அசைவற்றுக் கீழே கிடந்தது.

"வந்தனம் ஜாக்ஸன். நீ லட்சக்கணக்கான மைல்களுக்கு அப்பால் இருக்கிறாய். ஆனால் நான் பார்க்கும் போதெல்லாம் நீ இருந்து வருகிறாய். உனக்கோ இங்கு இருளைத் தவிர வேறு எதுவும் பார்ப்பதற்கு இல்லை...லட்சக்கணக்கான மைல்கள்...வந்தனம் ஜாக்ஸன்" என்று அவளுடைய உதடுகள் முணுமுணுத்தன.

மறுநாள் காலை பத்து மணி ஆகியும் லீசனுடைய அறையின் கதவுகள் திறக்கப்படாமலிருப்பதை கிளாரா அறிந்தாள். மிகவும் கஷ்டப்பட்டுக் கதவைத் திறந்தாள். எல்லோருமாக லீசனை எழுப்ப முயற்சித்தனர்; இயலவில்லை.

அவர்களில் ஒருவன் மருத்துவசாலையின் மோட்டாருக்கா போன் செய்ய ஓடினுன்.

குறித்த நேரத்திற்கு மருத்துவசாலை மோட்டார் வந் சேர்ந்தது. அதனுடன் வந்த மருத்துவர், "என்ன நடந்தது என்று கேட்டார்.

"அவளுக்கு என்ன என்று எனக்குத் தெரியாது. அவ கீழே எடுத்து வரவும் எங்களால் இயலவில்லை. அவள் யுவதி லீசன் என்று பெயர். என் வீட்டில் இதுபோல..." என்று வீட்டின் சொந்தக்காரி பார்க்கர்.

"அவள் எந்த அறையில் இருக்கிருள்?" என்று மருத்துவர் கம்பீரமான குரலில் கேட்டார்.

"மேல் மாடியிலுள்ள அறை."

மருத்துவர் மாடிப்படிகளில் ஏறிச் செல்வதைக் கண் டால் அவருக்கு அந்த அறை நன்கு தெரியும் போலத் தோன்றிற்று. அவர் இரண்டு மூன்று படிகளாகத் தாவிச் சென்ருர். வீட்டுக்காரி பார்க்கரும் அவரைத் தொடர்ந்து மெள்ள சென்ருள். அவள் முதல் மாடியை அடைவதற்குள் மருத்துவர் இரண்டு கைகளிலும் லீசனைத் தூக்கிக்கொண்டு கீழே இறங்கிவிட்டார். அவர் சற்று நின்று பழக்கப்பட்ட தமது நாவைச் சிறிது அசைத்தார். ஆனுல் உரத்த குரலில் பேசவில்லை. பார்க்கர் உடனே ஆணியிலிருந்து ஒரு துணியை எடுத்துப் போர்த்தினுள். அதன் பிறகு உள்ளமும் உடலும் ஒடுங்கிவிட்டன. சில சமயங்களில் அவளுடைய விசித்திரமான நண்பர்கள், "மருத்துவர் என்ன சொன் ஞர்?" என்று கேட்கலாம்.

"அப்படியே இருக்கட்டும். நான் மன்னிக்கப்பட்டேன் என்று காதால் கேட்டாலே போதுமானது. மகிழ்ச்சியடை வேன்" என்று பதில் கூறலாம்.

மருத்துவர் கையில் லீசனை எடுத்துக்கொண்டே மோட் டாரில் ஏறினுர். அவளைக் கிடத்த படுக்கையிலும் விட



வில்லை. மோட்டாரைச் சுற்றி மக்கள் கூடிவிட்டனர். வேட்டை நாய்களைப் போல ஒவ்வொருவரும் மோப்பம் பிடிக்கத் தொடங்கினர். மருத்துவரின் முகமோ, அவரைச் சேர்ந்தவர்களில் யாரோ ஒருவர் இறந்துவிட்டது போல சோகமாக இருந்தது. அவர் கையில் லீசனை வைத்துக் கொண்டு உட்கார்ந்து, "வில்சன், காரைச் செலுத்து" என்று கார் ஓட்டியிடம் சொன்னுர்.

அவ்வளவுதான். இது கதையா? மறுநாள் காலை நான் பத்திரிகைகளைப் புரட்டினேன். அதில் காணப்பட்ட செய்தி நடந்த சம்பவத்தை அறிய சிறிது உதவியாக இருக்கலாம்.

"கிழக்குத் தெரு நாற்பத்தி ஒன்பதாம் இலக்க வீட்டி லிருந்து எடுத்து வந்த யுவதி வறுமையால் வாடி பட்டினி யுடன் இருந்திருக்கிருள்" என்று குறிப்பிட்டுக் கீழே கண்ட வாக்கியத்துடன் முடிவடைகிறது.

"மருத்துவசாலை மோட்டாரில் மருத்துவராக வந்தவர் வில்லியம் ஜாக்ஸன் என்ற மருத்துவர். அவர்தான் அந்த யுவதியைக் கவனித்து மருத்துவம் செய்து வருகிருர். அவள் குணமாகிவிடுவாள் என்று அவர் கூறுகிருர்."

# 5. தீரச் செயல்

சாப்பிட்ட பிறகு சுருட்டுப் பிடிப்பதற்காக உங்களுக்குப் பத்து நிமிஷங்கள் ஒதுக்கப்பட்டதாக நினைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் பிராட்வே தெருவில் சுருட்டுப் பிடித்துக் கொண்டே உலாவுவதாகவும் அச்சமயம் உங்கள் சிந்தனையை வேறு திசையில் மாற்ற ஒரு துக்ககரமான சம்பவம் நடந்ததாகக் கருதுங்கள்.

திடீரென்று ஒரு கை உங்கள் தோள்மீது வைக்கப் படுகிறது. நீங்கள் திரும்பிப் பார்க்கிறீர்கள். உங்கள் எதிரில் ஒரு அழகிய மங்கை இரண்டு மின்னும் கண்களால் பார்த்துக்கொண்டு நிற்கிறாள். அவள் அவசரமாக வெண்ணெய் தடவிய சூடான ரொட்டியை உங்கள் கையில் கொடுக்கிறாள். பிறகு பளபளவென்ற கத்திரியை வெளியே எடுக்கிறாள். அதைக்கொண்டு உங்கள் மேல் அங்கியிலுள்ள பித்தான் ஒன்றைக் கத்தரித்து எடுத்துக் கொள்கிறாள். பிறகு நன்றி தெரிவித்துவிட்டு வேகமாகத் தெரு வழியே செல்கிறாள். நீங்களும் அச்சத்துடன் அவளையே பார்த்துக் கொண்டு நிற்கிறீர்கள்.

இது வீரச் செயல். இதை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களா? மாட்டீர்கள். ஆத்திரமடைவீர்கள். கையில் கொடுக்கப்பட்ட ரொட்டியைக் கீழே போடுவீர்கள். இழந்த



பித்தானுக்காக முணு முணுத்துக்கொண்டே நடப்பீர்கள். தீரச் செயல்கள் புரியும் தன்மை மறையாதவரை நீங்கள் இவ்விதம் நடந்து கொள்வீர்கள்.

உண்மையான வீரச் செயல்கள் அதிகமாக இருக்க முடியாது. அப்படியே தீரச் செயல்கள் நடந்ததாக அச்சு வாகனம் ஏறி வெளிவரக்கூடிய செய்திகள் புதிதாகக் கற்பனை செய்யப்பட்டதாக இருக்கலாம். உண்மையான தீரச் செயலுக்கு ஒரு குறிக்கோளோ பலனை எதிர்பார்ப்பதாகவோ இருக்காது. கண்களுக்குப் புலப்படாத விதியைச் சந்திக்கவும் அதை வாழ்த்துவதாகவுமே இருந்து வரும். இதற்குச் சிறந்த உதாரணமாக ஆடம்பரமாகவும் வீணிலும் செலவு செய்யும் ஸ்டீனர், வீட்டிற்குத் திரும்பி வரும் சமயம் நடந்த சம்பவத்தையே கூறலாம்.

பெரிய நகரங்களில் காதலைப் பெற முயற்சிப்பவர்களுக்குக் காதலும் தீரச் செயலும் இரட்டை சகோதரிகளைப் போன்று இருந்துவரும். நாம் தெருவில் போய்க்கொண்டிருந்தால் இத்தகையவர்கள் இருபதிற்கும் மேம்பட்ட வகையில் மாறுவேடம் பூண்டு நம்மை உற்று நோக்குவார்கள். நாமும் என்ன என்று தெரியாமலே ஜன்னலைப் பார்ப்போம்.

சந்தடியற்ற அந்தத் தெருவில் ஒரு வீட்டிலிருந்து நடுநடுங்கச் செய்யும் வகையில் ஒரு அழுகுரல் கேட்கிறது. நாம் என்னவோ ஏதோ என்று பயந்து அந்த வீட்டின் முன்னால் செல்கிறோம். அச் சமயம் கதவு திறக்கப்படுகிறது. ஒரு அழகி புன்முறுவல் செய்துகொண்டே நம்மை வரவேற்கிறாள். உள்ளே வரும்படி அழைக்கிறாள். இன்னும் இதுபோன்று பல சம்பவங்களையும் கூறலாம்.

ஸ்டீனர் உண்மையான தீரன். எதிர்பாராததும் பெருமையை அளிக்கக்கூடியதுமான சம்பவங்களைத் தேடிச் செல்லாமல் அவனால் படுக்கவும் போக இயலாது. அவனைச் சுற்றி என்ன இருக்கிறது என்பதை அறிவதே அவனுடைய வாழ்க்கையின் குறிக்கோளாக இருந்து வந்தது. இந்த

உணர்ச்சியானது சில சமயங்களில் விநோதமான வழிகளில் அவனை இட்டுச் சென்றுவிடும். இவ்வித சம்பவங்களால் அவன் வாழ்க்கையில் இரண்டு இரவுகளைப் போலிஸ் நிலையத்தில் கழிக்க வேண்டியதாயிற்று. அப்படியும் மீண்டும் மீண்டும் அவன் மோசக்காரர்களின் வலையில் விழுந்து கொண்டே இருந்தான். அவர்களும் அவனிடம் பல வழிகளைக் கையாண்டு வந்தார்கள். அவனுடைய மனப்போக்கும் பணமுமே மோசக்காரரின் மனதைக் கவர்வதாக இருந்தது. ஆனால் தணிக்க முடியாத ஆர்வத்துடன் நடக்கும் ஒவ்வொரு சம்பவத்தையும் அவன் தனது தீரச் செயல்களின் வரிசைக் கணக்கில் வைத்தான்.

ஒரு நாள் மாலை ஸ்டீனர் நகரத்தின் மத்திய பாகத்திலுள்ள தெரு ஒன்றில் போய்க்கொண்டிருந்தான். தெருவில் இரண்டு ஓரங்களிலும் மக்கள் திரளாகப் போய்க்கொண்டிருந்தார்கள்.

தீரச் செயல்களில் நாட்டமுள்ள வாலிப ஸ்டீனர் தெருவின் இரு பக்கங்களையும் பார்த்துக்கொண்டே நடந்தான். அவன் ஒரு பியானோ வாத்தியக் கடையில் விற்பனையாளனாகப் பணி புரிந்துகொண்டிருந்தான். காதல் சோதனை என்ற நூல் அவனுடைய வாழ்க்கையில் மிகவும் செல்வாக்குப் பெற்றிருந்தது. அதனால் அப் புத்தகத்தில் கூறப்பட்ட நடை உடைகளைப் பின்பற்றி வந்தான்.

ஸ்டீனர் நடந்துகொண்டிருக்கும்போது ஒரு ஓட்டலுக்கு முன்னால் பற்கள் நரநரவென்று கடிக்கும் சப்தம் அவன் கவனத்தைக் கவர்ந்தது. அவன் திரும்பிப் பார்த்த சமயம் ஒரு கடையின் முன் பாகத்தில் கண்ணாடிப் பெட்டி ஒன்றிலிருந்த பொம்மைப் பற்கள் கடித்துச் சப்தம் எழுப்புவதை அறிந்தான். அவன் கவனத்தைக் கவர்ந்த இரண்டாவது பொருள் பல் வைத்தியரின் விளம்பர மின்சார விளக்குகள். வாசலில் உயரமும் பருமனுமான ஆபிரிக்கா தேசத்து மனிதன் ஒருவன் ஆடம்பரமாக ஆடை உடுத்தி நின்றுகொண்



டிருந்தான். அவ்வழியே செல்பவர்களுக்கு அவன் பெயர் அட்டை ஒன்றைக் கொடுத்துக் கொண்டிருந்தான்.

இவ்விதமாக பல் வைத்தியர்கள் விளம்பரம் செய்வது ஸ்டீனருக்குப் பழக்கமானது. எப்பொழுது அவன் அந்தப் பக்கமாக வந்தாலும் ஆபிரிக்கா தேசத்தவனிடமிருந்து விளம்பர அட்டையை வாங்காமல் போய்விடுவான். ஆனால் இன்று ஆப்பிரிக்கா தேசத்தவனோ ஸ்டீனரின் கையில் ஒரு அட்டையைத் திணித்துவிட்டுப் புன்முறுவல் செய்தான். அதை அவன் தனது வெற்றியாகவும் கருதினான்.

ஸ்டீனர் சிறிது தூரம் சென்றதும் அட்டையை அலட்சியமாகப் பார்த்தான். பிறகு ஆச்சரிய மேலீட்டால் அவன் அதைப் பல முறை திருப்பித் திருப்பிப் பார்த்தான். அட்டையின் ஒரு பக்கத்தில் ஒன்றும் இருக்கவில்லை. மற்றொரு பக்கத்தில் மையினால் "பச்சைக் கதவு" என்று எழுதப்பட்டிருந்தது. அவன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஆபிரிக்கா தேசத்தவன் கொடுத்த அட்டையை ஒருவன் வீசி எறிந்து சென்றான். ஸ்டீனர் அதை எடுத்தான். அதில் பல் வைத்தியரின் விளம்பரம் அச்சடிக்கப்பட்டிருந்தது.

பியானோ விற்பனையாளன் ஸ்டீனர் தெருவின் ஒரு மூலையில் நின்று ஆலோசித்தான். பிறகு தெருவின் குறுக்கே சென்றான். மேல் பக்கத்திலிருந்து வருபவர்களுடன் சேர்ந்துகொள்ளச் சிறிதுதூரம் நடந்தான். மீண்டும் பல் வைத்தியன் கடைப்பக்கமாக மக்கள் கூட்டத்துடன் வந்தான். ஆபிரிக்கா தேசத்தவனைப் பார்க்காமலே இரண்டாம் முறையாக அவனைக் கடந்து செல்லும்போது அலட்சியமாக ஒரு அட்டையைப் பெற்றான். பத்து அடி தூரம் சென்று அட்டையைப் பார்த்தான். அதில் மையினால் "பச்சைக் கதவு" என்று எழுதப்பட்டிருந்தது. தரையில் நான்கு அட்டைகளுக்கும் அதிகமாகக் கிடந்தன. அவை ஒவ்வொன்றும் பல் வைத்தியனுடைய விளம்பரம் அச்சடிக்கப்பட்டதாக இருந்தன,

தீரச் செயலில் நாட்டமுள்ள ஸ்டீனர் இரண்டு முறை முயற்சித்தான். இரண்டு முறையும் அவனுக்குக் கேள்விக் குறியைக் கிளப்புவதாக விவகாரம் இருந்தது.

ஸ்டீனர் மீண்டும் மெள்ள அந்த ஆபிரிக்கா தேசத்தவன் நின்று அட்டைகளைக் கொடுக்குமிடத்தை நோக்கி நடந்தான். இச்சமயம் அவன் ஆபிரிக்கா தேசத்தவனிடமிருந்து அட்டையைப் பெறக்கூடாது என்று எண்ணினான். ஆனால் அந்த காட்டுமிராண்டிக் குணமுள்ள ஆபிரிக்கா தேசத்தவன் திடமாக நின்றுகொண்டு அட்டையைக் கொடுத்து வந்தான். கணத்திற்கு ஒரு முறை நாடகக் கொட்டகையைச் சேர்ந்தவனைப் போல கரகரத்த குரலில் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தான். ஸ்டீனர் அவனிடமிருந்து அட்டையைப் பெற்றது மாத்திரமல்ல. அவனுடைய அலட்சியமான பார்வையையும் ஏற்க வேண்டியதாயிற்று.

அந்தப் பார்வை ஸ்டீனரைத் தட்டி எழுப்பியது. அது மாத்திரமல்ல; அவன் முக்கியமாகத் தேவைப் படுகிறான் என்று அந்தப் பார்வை கூறியதுபோலிருந்தது. வாலிப ஸ்டீனர் அங்கேயே நின்று தீரச் செயல்கள் புரிய அந்தப் பகுதியில் என்ன இருக்கிறது என்று ஆராய்ந்தான். அவனுடைய பார்வையில் எதிரே யிருந்த ஐந்து அடுக்கு மாடி வீடும், அதன் அடிப்பாகத்தில் ஒரு சிறு ஓட்டலும் இருப்பது தென்பட்டது.

வீட்டின் அடிப்பாகம் பூட்டப்பட்டிருந்தது. அதில் கம்பளமோ வேறு ஏதோ சேமித்து வைக்கப்பட்டிருக்கலாம். முதல் மாடியில் பல் வைத்தியரின் மின்சாரப் பெயர்ப் பலகை தொங்கிக் கொண்டிருந்தது. இரண்டாவது மாடியில் சோதிடன், உடை தயாரிப்பவன், சங்கீத வித்வான், வைத்தியன் ஆகியோர் இருப்பதற்கு அடையாளமாக அவர்கள் பெயர்ப் பலகைகள் காணப்பட்டன. அதற்கும் மேலேயுள்ள மாடி அறைகளின் ஜன்னல்களிலும் வாயில்களிலும் பட்டுத் திரைச் சீலைகள் தொங்கிக்கொண்டிருந்தன. அங்கு பலர் குடியிருப்பது தெரிய வந்தது.



அனைத்தையும் நன்றாக ஆராய்ந்த பிறகு ஸ்டீனர் அந்த வீட்டின் மாடிப் படிகளில் ஏறத் தொடங்கினான். எல்லாவற்றிற்கும் மேலேயுள்ள மாடியை அடைந்தான். அங்கு அருகாமையிலுள்ள கூடத்தையும் பார்த்தான். மங்கலான விளக்கு ஒன்று கூடத்தில் எரிந்துகொண்டிருந்தது. அதன் ஒரு பகுதியில் பச்சைக் கதவு ஒன்று தென்பட்டது. ஒரு கணம் ஸ்டீனர் தயங்கினான். மறுகணம் ஆபிரிக்கா தேசத்தவன் கொடுத்த அட்டையின் ஆணைக்குக் கீழ்ப் படிந்தான். பிறகு நேராக பச்சைக் கதவுள்ள அறையை நோக்கி நடந்தான். அதை நெருங்கியதும் கதவை மெள்ளத் தட்டினான்.

கதவைத் தட்டும்போது அவன் உண்மையான வீரச் செயல்கள் புரிபவனைப் போன்ற உணர்ச்சியைப் பெற்றான். அந்தப் பச்சைக் கதவுகளுக்குப் பின்னால் என்னதான் இருக்கக்கூடாது? ஏமாற்றிக் கேலி செய்பவர்களின் நாடகம் நடைபெறலாம். வஞ்சகமானவர்கள் தங்கள் வலையை விரித்து வைத்திருக்கலாம். துணிவுடன்கூடிய காதலின் அழகும் காணப்படலாம். அபாயம், மரணம், காதல், ஏமாற்றம், முட்டாள்தனம்—ஏதாவது ஒன்று ஏற்படலாம்.

அறையினுள்ளிருந்து கசமுசவென்று துணியின் அசைவுச் சப்தம் மெள்ளக் கேட்டது. கதவு மெள்ளத் திறக்கப் பட்டது. இருபது வயதுகூட நிரம்பாத ஒரு அழகி கதவின் அருகில் காணப்பட்டாள். அவளுடைய முகம் வெளுத்திருந்தது. அவள் தள்ளாடிய வண்ணம் கதவைப் பிடித்துக் கொண்டு நின்றிருந்தாள். ஒரு கணத்திற்குமேல் அவளால் நிற்க இயலவில்லை. கைப்பிடியைத் தளர்த்தினாள். மறு கணம் கீழே சாயத் தொடங்கினாள். ஸ்டீனர் அவளைப் பார்த்துக்கொண்டு நிற்கவில்லை. உண்மையான வீரனைப் போல் பாய்ந்து சென்று அவளைப் பற்றிக்கொண்டான். அவளை இரு கரங்களாலும் தூக்கி, அறையினுள்ளிருந்த கட்டிலுக்குக் கொண்டு கிடத்தினான். தலையிலிருந்த தொப்பியைக் கழட்டி அவளுக்கு விசிறினான். மெள்ள அவள் கண்

திறந்தாள். அவளுடைய அழகிய முகமும், கண்க[ளு]ம் ஸ்டீனரின் மனதைக் கவரும் மங்கையருள் ஒருத்தி என்பதை எடுத்துக் காட்டின. அவனுடைய தீரச் செயலுக்கு அவ[ள்] தகுந்த பரிசாகத் தோன்றினாள். ஆனால் அவளுடைய மு[கம்] வாடி வெளுத்திருந்தது.

யுவதி அமைதியாக அவனைப் பார்த்துப் புன்முறுவ[ல்] செய்தாள். "மயக்கம் வந்து விழுந்துவிட்டேன் அல்லவா?" என்று மெல்லிய குரலில் கேட்டாள் யுவதி. பிறகு, "யா[ர்] தான் மூன்று நாட்கள் ஒன்றும் சாப்பிடாமலிருந்தா[ல்] மயக்கமடைய மாட்டார்கள்?" என்று கேட்டாள்.

"நல்லது. நான் வரும்வரை பொறுமையாக இ[ரு]" என்று வேகமாக வெளியே சென்றான் ஸ்டீனர். மாடிப் ப[டி]களில் மடமடவென்று இறங்கினான்.

இருபது நிமிடங்களுக்குள் இரண்டு கைகளி[லு]ம் பொட்டலங்களுடன் திரும்பி வந்து சேர்ந்தான். கீ[ழே] இருந்த ஒட்டலில் அவள் சாப்பிடுவதற்காகப் பல தின்ப[ண்]டங்களை வாங்கி வந்திருந்தான். பிறகு மேஜையை அருகி[ல்] இழுத்துப் போட்டு அதன்மீது எல்லாவற்றையும் பரப்பி வைத்தான். அவன் ரொட்டி வெண்ணெய், பலகாரம் ஆகியவற்றுடன் ஒரு புட்டியில் சூடான தேனீரும் வாங்கி வந்திருந்தான்.

"ஆகாரமில்லாமல் படுத்திருப்பது முட்டாள்தனம். இவ்விதம் செய்யக்கூடாது; இந்தா சாப்பிடு, தேனீர் ஊற்ற கோப்பை இருக்கிறதா?" என்று கேட்டான் ஸ்டீனர்.

"ஜன்னலுக்கு அருகிலுள்ள அலமாரியில் இருக்கிறது" என்றாள் யுவதி.

கோப்பையை எடுத்துக்கொண்டு ஸ்டீனர் திரும்பி வந்த சமயம் மேஜைமீதிருந்த ரொட்டி முதலியவற்றை அவள் சாப்பிட்டுக்கொண்டிருந்தாள்; அதைக் கண்டு மகிழ்ச்சியடைந்து தேனீரை ஊற்றிப் பருகச் சொன்னான் ஸ்டீனர்.



பிறகு ஒரு நாற்காலியை இழுத்து அவள் அருகில் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான். அவள் சாப்பிடுவதைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

சாப்பிட்டதும் யுவதிக்குச் சிறிது உணர்வு வந்தது. அவள் தன் கதையைச் சொல்லத் தொடங்கினாள். அது தினமும் நடைபெறும் ஆயிரக்கணக்கான கதைகளைப் போலவே இருந்தது அவள் ஒரு கடையில் வேலை செய்து கொண்டிருந்தாள். வேலையில் ஏற்பட்ட தவறுகளுக்காக அவளுக்கு அபராதம் விதிக்கப்பட்டது. அத்துடன் அவளுக்கு உடல்நலமில்லாமல் போய்விட்டது. அதனால் அவள் வேலையை இழந்தாள்; நம்பிக்கையும் மறைந்தது.

"இதையெல்லாம் பார்க்கும்போது......" என்றான் ஸ்டீனர்.

"அது மிகவும் பயங்கரமானது" என்றாள் யுவதி.

"இந்த நகரத்தில் உனக்கு உறவினரோ, நண்பர்களோ இல்லையா?"

"இல்லை."

"எனக்கும் உலகத்தில் ஒருவரும் இல்லை. நான் தனி மனிதன்" என்று தன்னை அறியாமல் சொன்னான் ஸ்டீனர்.

"இதைக் கேட்க மகிழ்ச்சியாக இருக்கிறது" என்று யுவதியும் சொன்னாள்.

அவள் சொன்னதைக் கேட்டு ஸ்டீனர் மகிழ்ச்சியடைந்தான். அவனுடைய லாபகரமான எண்ணத்தை அவளும் ஆதரிக்கிறாள் என்று தீர்மானித்தான்.

திடீரென்று அவளுடைய கண் இமைகள் மூடிக் கொண்டன. அவள் ஒரு பெருமூச்சு விட்டாள்.

"எனக்குத் தூக்கம் வருகிறது; அதுவே எனக்கு நன்மை செய்யும் என்று தோன்றுகிறது" என்றாள் யுவதி.

பருகினன். சுருட்டு ஒன்றை வாங்கி பற்றவைத்துக்கொண்டு வெளியே வந்தான். தனது ஆடைகளைச் சரிசெய்து கொண்டான். பிறகு ஒரு விளக்குக் கம்பத்தினடியில் வந்து நின்று, "எல்லாம் ஒன்றுதான். விதிதான் அவளைக் கண்டுபிடிக்கவும் சந்திக்கவும் இவ்விதம் செய்திருக்கிறது. இவ்விதமே நான் நம்புகிறேன்" என்றான்.

உண்மையான காதலர்களையும், வீரதீரச் செயல்கள் புரிபவர்களைப் போலவும் ஸ்டீனர் நடந்த சம்பவத்திற்கு ஒரு முடிவு கட்டினன்.

# 6. ஓவியத்திற்குப் பின்னல்!

நிலைக் கண்காட்சியில் அன்று நான் பார்த்த ஓவியம் ஐயாயிரம் டாலருக்கு விற்பனையாகி விட்டது. அந்த ஓவியத்தை வரைந்தவன் வாலிபன். அவன் பெயர் கிரப். மேற்குப் பகுதியைச் சேர்ந்த அவனுடைய உணவு வகைகளும், கொள்கைகளுமே பிரத்யேகமானவை. உணவு வகைகள் காலம், இடம் ஆகியவற்றிற்கேற்ப ஒத்துப் போகக் கூடியவை என்று அவன் திடமாக நம்பினன். அந்த ஓவியத்தின் மறைவில் ஒரு கதை இருக்கிறது. அதனல் அதை எழுத வீட்டிற்குச் சென்றேன். கிரப்பின் கொள்கைகள்—ஆனல் அது கதையின் ஆரம்பம் அல்ல.

மூன்று ஆண்டுகளுக்கு முன்னல் ஆங்கில சாலை ஒன்றிலுள்ள சிப்பராஸின் ஓட்டலில் நான், கிரப், பில் என்ற கவிஞன் ஆக மூவருமாகச் சாப்பிட்டோம். எங்களுக்கு அங்கு கணக்கு இல்லை. கையில் பணம் இருக்கும்போது சிப்பராஸ் எடுத்துக் கொள்வான். நாங்கள் கையில் பணம் கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும் எங்களுக்கு சிப்பராஸிடம் நம்பிக்கை இருந்தது.

நாங்கள் ஓட்டலினுள் சென்றோம். சாப்பாட்டிற்குக் கட்டளையிட்டோம். சாப்பிட்டோம். சிப்பராஸின் சிடுசிடு

வென்ற முகத்தில் எங்களுக்கு நம்பிக்கை இருந்தது. முக
சிடுசிடுவென்றிருந்தாலும் அவன் ஒரு இளவரசனோ
மடையனோ அல்லது ஒரு கலைஞனோ இல்லை. அவன் மிகவு
பழைய நாற்காலி ஒன்றின்மீது உட்கார்ந்திருப்பான்
அவனுடைய கருப்புக் கண்ணாடி அணிந்திருப்பான். நாங்கள்
எப்போதாவது சாப்பிட்டுவிட்டுப் பணம் கொடுக்காமல்
போய்விடுவோம். அவ்விதம் நாங்கள் செய்த ஒரு சமயம்
நான் திரும்பி அவனைப் பார்த்தேன். அவன் எங்களுக்குப்
பின்னால் உரக்கச் சிரித்துக் கொண்டிருந்தான். நாங்கள்
சில சமயங்களில் சாப்பிட்டதற்குப் பணம் அப்போது
கொடுக்காவிட்டாலும் அப்படியே இருந்து விடமாட்டோம்.
கையில் பணம் இருக்கும் சமயம் கொடுத்துவிடுவோம்.

ஆனால் நாங்கள் முக்கியமாக சிப்பராஸின் ஓட்டலுக்குப் போவதற்கு மில்லியே காரணமாகும். அவள் அந்த ஓட்டலில் வேலை செய்து வந்தாள். கிரப்பின் கொள்கைக்கு எடுத்துக் காட்டாக அவள் கால நிலைக்கேற்ப தன்னை மாற்றி அமைத்துக் கொள்ளக் கூடியவளாக இருந்தாள். மில்லி நல்ல அழகி. வேலையில் சுருசுருப்பாக இருக்கக் கூடியவள். எத்தனை பேர் வந்தாலும் சளைக்காமல் அவர்களுக்குத் தேவையானவற்றைக் கேட்டு உடன் கொண்டுகொடுப்பாள். ஆயிரக்கணக்கான ஈக்களைக் கையால் வீசி விரட்டுவதுபோல் பலர் கேட்ட பொருள்களை ஒரே சமயத்தில் கொண்டு கொடுத்து அனைவரையும் வாயடைக்கச் செய்துவிடுவாள்.

எங்களால் கண்டுபிடிக்கப்பட்ட தேவதையான மில்லி கம்பீரமான தோற்றமுடையவள். அவளை பணிவுடனேயே பின்பற்ற வேண்டும். சட்டையின் கையை அவள் எப்போதும் முழங்கைக்கு மேலேயே மடித்து விட்டுக்கொண்டிருப்பாள். வீரர்களான எங்கள் மூன்று பேரையும் ஒரே சமயத்தில் இரண்டு கைகளாலும் தூக்கிச் சென்று ஜன்னலுக்கு வெளியே வீசிப் போட்டுவிடுபவளைப்போல் காணப்படுவாள். எங்களுக்கும் அவளுக்கும் வயதில் சில ஆண்டுகளே வித்தியாசப்படலாம். அப்படியும் அவள் வேற்றுமையின்றியும்,



எளிமையாகவும் ஒரு தாயைப் போன்றும் ஆரம்பத்திலிருந்தே எங்களைக் காப்பாற்றி வந்தாள். ஓட்டலிலுள்ள உணவு வகைகள் அனைத்தையுமே எங்கள் முன்னால் கொண்டு வைத்துச் சாப்பிடச் செய்வாள். எதற்கும் அவள் சோர்வடைய மாட்டாள். அவளுடைய குரல் வெள்ளி மணியின் நாதத்தைப் போன்றிருக்கும். அவள் சிரிக்கும்போது வாயிலுள்ள முத்துப் போன்ற பற்கள் அனைத்தும் நன்றாகத் தெரியும். அப்போது அவள் உதய சூரியனைப்போல் காணப்படுவாள். அவளை வெளியில் எங்கும் காணவே முடியாது; நான் பார்த்ததும் கிடையாது. சனிக்கிழமையன்று ஓட்டல்காரனிடம் ஊதியமாகச் சில டாலர்களைப் பெறுவாள். அதுவும் எதிர்பாராமல் கிடைக்கும் பரிசைக் கண்டு மகிழ்ச்சியடையும் குழந்தையின் தன்மையிலேயே வாங்கிக் கொள்வாள்.

ஓட்டல் முதலாளி சிப்பராஸுக்கும், மில்லிக்கும் விதிதான் ஒரு பிணைப்பை ஏற்படுத்தியிருந்தது. அதைத் தவிர வேறு ஒன்றுமிருக்கவில்லை. இதைக் குறித்து நாங்கள் பேசத் தொடங்கியபோது கிரப், ''மில்லிக்கு ஏதோ ஒரு அதிர்ஷ்டம் வரப் போகிறது. அது அவளை இங்கிருந்து அழைத்துச் சென்றால் நாமும் சிப்பராஸும் ஒரு அருமையான தோழியை இழந்தவர்களாவோம்'' என்றான்.

''அவள் உடல் பருத்துவிடலாம்'' என்றான் பில்.

''இரவு பள்ளிக்குச் சென்று கல்வி கற்று சீர்திருந்தி விடலாம்'' என்றேன் நான்.

''ஒரு நாள் சிப்பராஸின் ஓட்டலுக்கு லட்சாதிபதி ஒருவன் விஸ்கானிலிருந்து வருவான். அவன் மரம்வெட்டியாகவும் முட்டாளாகவும் முரடனாகவும் இருப்பான். மில்லியை அவன் மணந்துகொள்வான்'' என்று திடமாகச் சொன்னான் கிரப்.

''அது நடக்க முடியாதது'' என்றான் பில்.

''கட்டாயம் நடந்தே தீரும்.''

"லட்சாதிபதி மரம்வெட்டி'' என்று கூறிப் பெருமூச்சு விட்டேன்.

"அதுவும் விஸ்கானிலிருந்தே வருவான்'' என்றான் கேலியாக பில்.

கொடுமையான விதி மில்லியைத் தொல்லைப்படுத்தலாம் என்று நாங்கள் ஒப்புக் கொண்டோம். சில விவகாரங்கள், நாம் நினைப்பதற்கு மாறாக நடந்துவிடுகின்றன. மில்லியைப் போன்ற சிலர் மரம்வெட்டிகளின் மனதைக் கவர்பவர்களாக இருந்தார்கள். ஒன்றுக்கும் உதவாத சிலருக்கு அதிர்ஷ்ட தேவதை தன் இ நகரங்களையும் தாராளமாக நீட்டி உதவுவதைப் பார்த்திருக்கிறோம்.

ஆனால் அவ்விதம் ஏதாவது நடைபெற்றால் நாங்கள் மில்லியை இழந்துவிடுவோம் என்பதில் சந்தேகமே இல்லை. அவளை இழந்துவிடுவோமோ என்று ஏங்கவும் தொடங்கினோம்.

கால நிலைக்கேற்ப தன்னை மாற்றிக் கொள்ளும் குணத்தை நாங்கள் விரும்பியதாலேயே அவ்விதம் ஏங்கத் தொடங்கினோம். பணம், மாகாணப் பற்று ஆகியவை காரணமாக அவளை அளித்துவிட எங்களால் இயலாது. நாங்கள் மில்லியையும் அவளுடைய இனிமையான குரலையும் மரங்களைக் கொலை செய்யும் ஒருவனுடன் ஒப்பிட்டுச் சிந்திக்கத் தொடங்கினோம். அவளை அத்தகையவனுக்கு அளிக்க முடியாது. அவள் சிப்பராஸின் ஓட்டலுக்கே சொந்தமானவாள்.

எங்களுக்கு ஏற்பட்ட அச்சத்தைத் தீர்க்கதரிசனம் என்றே கூறவேண்டும். அன்று மாலையே வில்லியைக் கவர்ந்து செல்ல விதியானது முன்னமேயே முடிவு செய்திருந்த முட்டாள் மரம்வெட்டி ஒருவன் வந்து சேர்ந்தான். ஆனால் அவன் விஸ்கானிலிருந்து வரவில்லை. அலாஸ்காவிலிருந்து வந்திருந்தான்.



அச்சமயம் நாங்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். அந்த மரம்வெட்டி எங்கள் மேசைக்கே வந்து சேர்ந்தான். அவனை நாங்கள் ஒரு உதாரணமானவனாகக் கருதி ஏற்றுக்கொண்டோம். சிறிது நேரம் பேசிய பிறகு நாங்கள் ஒருவருக்காக மற்றவர் உயிரையே கொடுக்கக்கூடிய நண்பர்களாகி விட்டோம்.

அவனுடைய ஆடைகள் அழுக்குப் படிந்திருந்தன. முகத்தில் தாடி வளர்ந்திருந்தது. தலையிலும் உடம்பிலும் புழுதி படிந்திருந்தது. அவன் வடக்கு நதிப் பக்கத்திலிருந்து அப்போதுதான் வந்திருந்தான். அவனுடைய மேல் அங்கியிலிருந்து உரைபனி படிந்திருப்பதைக் கண்டேன். அவன் மேஜையின் அருகில் உட்கார்ந்து தனது தொழில், செல்வம் ஆகியவை குறித்துப் பேசத் தொடங்கினான்.

"இருபது லட்சம் டாலருக்குப் பாங்கிப் பத்திரங்கள் இருக்கின்றன. தினமும் ஆயிரம் டாலருக்கு மேல் வருமானம் வருகிறது. இப்போது நல்ல உணவாக நான் உண்ண வேண்டும். எனக்குப் பசியாக இருக்கிறது. சாப்பிடாமல் என்னால் ரயிலுக்குப் போக இயலாது. நான் உங்களுக்கு வாங்கிக் கொடுப்பதைக் குறித்து ஏதும் நினைக்காதீர்கள். உங்களுக்கு என்ன தேவையோ அதை வாங்கிக் கொள்ளுங்கள்'' என்றான் அந்த அலாஸ்காவைச் சேர்ந்த மரம்வெட்டி.

பிறகு மில்லி தன் கரங்களில் நூற்றுக்கணக்கான உணவு வகைகளை எடுத்துக் கொண்டு வந்து எங்கள் மேஜைமீது வைத்தாள். அப்போது அவள் உதடுகளில் புன்முறுவல் தவழ்ந்து கொண்டிருந்தது. அலாஸ்கா மரம்வெட்டி திறந்த வாய் மூடாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவளுக்காக வைர நகைகளையும், பட்டு ஆடைகளையும் அவன் வாங்கத் திட்டமிடுகிறான் என்பதை தோற்றத்திலிருந்தே அறியலாம்.

கடைசியாக கொடிய நாகம் நஞ்சைக் கக்கத் தொடங்கிற்று. லட்சாதிபதியான மரம்வெட்டி அலாஸ்காவின்

சுரங்கத்தில் வேலை செய்பவன் என்ற போர்வையில் மறைந்து எங்கள் மில்லியைக் கவர்ந்து செல்லவும், கால நிலைக்கேற்ப தன்னை மாற்றிக் கொள்ளும் தன்மையை நாசமாக்கவும் வந்திருந்தான்.

கிரப்தான் முதலில் வேலை செய்யத் தொடங்கினன். அவன் எழுந்து லட்சாதிபதி மரம்வெட்டியின் அருகில் சென்று அவனுடைய முதுகில் தட்டிக் கொடுத்தான். "எழுந்திருங்கள். முதலில் போய் சாராயம் பருகலாம். அதன் பிறகு வந்து சாப்பிடலாம்" என்று உரத்த குரலில் கூறினன். அவனுடைய ஒரு கையைப் பற்றித் தூக்கினன். பில்லும் நானும் மற்ருெரு கையைப் பற்றித் தூக்கினேம். அவனை ஓட்டலிலிருந்து சாராயக் கடைக்குத் தள்ளிக் கொண்டு சென்ருேம்.

அங்கு அவன் பலவிதமாகப் பேசத் தொடங்கினன். "என் பணத்திற்குத் தகுந்த பெண் அவள்தான். என்னுடைய பணத்தைக் கொண்டு அவள் வாழ்க்கை பூராவும் இன்பமாகக் காலம் கழிக்கலாம். அவளைப்போன்ற நேர்த்தியான பெண்ணை நான் பார்த்ததே கிடையாது. என்னுடைய பணத்தைப் பார்த்தால் அவள் தடை சொல்லவே மாட்டாள். இது நிச்சயம்" என்ருன்.

"மேலும் சிறிது சாராயம் பருகுங்கள். மேற்குப் பகுதியைச் சேர்ந்தவர்கள் நன்கு சாராயம் பருகுவார்கள் என்று நினைத்தேன்" என்ருன் குட்டிச்சாத்தானைப்போல் புன்முறுவல் செய்துகொண்டே கிரப்.

கிரப் தன் கையிலிருந்த கடைசிச் செப்புக்காசையும் செலவழித்தான். பிறகு எங்கள் இருவரிடமும் பொறுப்பை ஒப்படைத்தான். நாங்களும் எங்கள் விருந்தாளிக்காகக் கடைசி செப்புக் காசையும் செலவு செய்ய முற்பட்டோம்.

எங்கள் ஆயுதங்கள் அனைத்தும் செலவழிந்துவிட்டன. ...ப்போதும் அந்த மரம்வெட்டி மில்லியை விடவில்லை. ...வளைக் குறித்தே பிதற்றிக்கொண்டிருந்தான். அவனுடைய



பணத்தின் பெருமையை விவரித்தான். அவனே பணத்தைச் சட்டைப் பையிலிருந்து எடுத்து மேஜையில் போட்டான். கடைசியாக நாங்கள் அவனுடைய ஆயுதங்களைக் கொண்டே அவனைப் போர்க்களத்திலிருந்து அடித்துத் துரத்த முற்பட்டோம். பெருமளவு வெற்றியும் பெற்ருேம். அவனை ஒரு வண்டியில் ஏற்றிக்கொண்டு வெகு தூரத்திலுள்ள தங்கும் விடுதிக்குச் சென்ருேம். அங்கு ஒரு அறையை வாடகைக்கு எடுத்தோம். அதில் அவனைக் கொண்டு போய்க் கிடத்தி நன்ருகப் போர்த்தினேம். அவனை அங்கேயே விட்டு நாங்கள் வெளியில் வந்தோம்.

"அவன் மீண்டும் சிப்பராஸின் ஓட்டலைக் கண்டு பிடிக்கவே முடியாது. நாளை கண் விழித்து எழுந்ததும் வேறு இடத்தில் இருப்பதை அறிவான். நம்முடைய மில்லி கால நிலைக்கேற்ப மாற்றி அமைத்துக் கொள்ளும் தன்மை—காப்பாற்றப்பட்டது" என்ருன் கிரப்.

நாங்கள் மூவரும் மீண்டும் சிப்பராஸின் ஓட்டலுக்குத் திரும்பி வந்தோம். சாப்பிட்டோம். மில்லியை நடுவில் நிறுத்திவிட்டு ஆடிப் பாடி மகிழ்ந்தோம்.

இந்த சம்பவம் மூன்று ஆண்டுகளுக்கு முன்னல் நடந்தது. இந்தக் காலத்திற்குள் எங்கள் மூவரையும் அதிர்ஷ்ட தேவதை சிறிது கண்களைத் திறந்து பார்த்தது. எங்களால் முன்போல ஆடம்பரமாக சிப்பராஸின் ஓட்டலுக்குப்போய் வர இயலவில்லை. எங்கள் மூவரின் பாதைகளும் வெவ்வேருகிவிட்டன. கிரப், மில் ஆகிய இருவரையும் அதன் பிறகு சந்திக்கவே இல்லை. சந்திக்கவும் இயலாமல் போய் விட்டது.

ஆனல் அன்று ஒரு ஓவியம் ஐந்தாயிரம் டாலருக்கு விலை போயிற்று என்று முன்பு கூறியுள்ளேன். அந்தப் படத்திற்குக் கொடுத்திருந்த தலைப்பே என் சந்தேகங்கள் அனைத்தையும் போக்கிவிட்டது. ஓவியங்களைக் கண்டு ரசிக்கும் அனைவரும் அந்தப் படத்தின் முன்னல் சென்று நின்ருர்கள்,

ஆனால் நான் ஒருவன்தான் அந்த ஓவியத்திலிருந்த மங்கையை யார் என்று கண்டுகொண்டேன். இவ்விதமே நான் நம்புகிறேன். ஓட்டலில் எனக்கு அன்போடு தன் கரங்களில் உணவு வகைகளைக் கொண்டு கொடுக்கும் மில்லிதான் அவள் என்பதை அறிந்தேன்.

நான் கிரப்பைக் காண வேகமாகச் சென்றேன். அவனைச் சந்தித்தேன். அவனுடைய கண்கள் முன் போலவே இருந்தன. தலை மயிர் அதிக நீளமாக வளர்ந்திருந்தது. ஆனால் அவனுடைய ஆடைகளோ சிறந்த தையற்காரனால் தைக்கப்பட்டிருந்தன.

''எனக்கு நீ என்று தெரியாமல் போயிற்று'' என்றேன்

''அந்தப் பணத்தில் நாங்கள் பிரோனிக்ஸில் ஒரு மாளிகையை வாங்கியிருக்கிறோம். மாலை ஏழு மணிக்கு எப்போது வேண்டுமானாலும் வா'' என்றான் கிரப்.

''நல்லது; நீ அன்று லட்சாதிபதி மரம்வெட்டியைத் துரத்த எங்களை ஏவிவிட்டாயே. அது காலநிலைக்கேற்ப மாற்றிக் கொள்ளும் தன்மைக்காக மாத்திரம் இல்லை தானே?'' என்று கேட்டேன்.

''ஆமாம். அந்த ஒரு காரணத்திற்காக மாத்திரம் அல்லதான்'' என்றான் கிரப்.

## நாயின் நினைவுக் குறிப்புகள்

இலக்கியத்திற்கு ஒரு பிராணி தன்னால் இயன்ற தொண்டு செய்ததை மனிதர்களாகிய நீங்கள் படிக்கும் போது, உங்களில் யாருக்காவது அதிர்ச்சி ஏற்படும் என்று நான் நினைக்கவில்லை. கிப்ளினும் மற்றும் நல்ல மனிதர்கள் பலரும் பிராணிகளால் தங்களைக் குறித்து நல்ல ஆங்கிலத்தில் விவரிக்க முடியும் என்று கூறியிருக்கிறார்கள். பழைய மாதப் பத்திரிகைகளைத் தவிர எந்த ஒரு பத்திரிகையும் பிராணிகளின் கதையில்லாமல் இப்போது வெளிவருவதே இல்லை.

பியர்னோ கரடி, ஸ்னகோநாகம், தமனோ புலி ஆகியவை போல என்னுடைய எழுத்தில் திகைக்கக்கூடியது ஏதாவது இருக்குமா என்று பார்க்க வேண்டியதில்லை. மேலும் நியூயார்க் நகரத்தில் ஒரு மாடி வீட்டின் மூலையில் பட்டுப் பஞ்சணையில் படுத்துறங்கும் மஞ்சள் நிற நாயிடம் பேச்சுக் கலையில் திறமையை எதிர்பார்க்கவும் கூடாது.

நான் மஞ்சள் நிற நாய்க் குட்டியாகப் பிறந்தேன், பிறந்த ஆண்டு, தேதி, இடம், எந்தக் குடியைச் சேர்ந்தவன். எனது எடை ஆகிய எதுவுமே தெரியாது. ஒரு வயதான மாது கடையில் என்னை வைத்துக்கொண்டு பிராட்வே தெருவிலும்,

இருபத்திமூன்றாவது வீதியிலும் நின்றிருந்தாள். அவள் என்னை ஒரு பருமனாக இருந்த பெண்மணிக்கு விற்க முயற்சித்துக் கொண்டிருந்தாள். எனக்கு முதன் முதலாகத் தெரிந்தது இதுதான். வயதான மாது என்னைக் குறித்துப் பெருமையாகப் பேசினாள். என்னுடைய இனம் இது அது என்று கூறினாள். பருத்த பெண்மணி தனது பணப்பையைப் பல வகையிலும் சோதித்தாள். பேரம் பேசினாள். கடைசியில் ஏதோ ஒரு முயற்சிக்கு வந்தாள். அந்தக் கணத்திலிருந்து நான் அவளுடைய செல்லக் குழந்தையாகி விட்டேன். என் அருமை வாசகர்களே, இருநூறு பவுண்ட் எடையுள்ள ஒருத்தி உங்களைக் கையில் எடுத்து முகத்துடன் முகம் சேர்த்துக் கொஞ்சியது உண்டா?

ஏதோ ஒரு இன மஞ்சள் நிற நாய்க்குட்டியான நான் முன்பின் தெரியாத சடை நாயாக வளர்ந்து வந்தேன். அது பூனையும் நாயும் கலந்த ஒரு இனமாகக் காணப்பட்டது. ஆனால் என் எஜமானி எதற்காகவும் கவலைப்பட்டது கிடையாது. அவள் என்னை ஏதோ ஒரு கலப்பு இனத்தைச் சேர்ந்தவனாகவே கருதி வந்தாள்.

வீட்டைப் பற்றிக் கூறுகிறேன். நியூயார்க் நகரத்தில் அது சாதாரணமான வீடு. முன் பக்கத்து ஹாலில் சலவைக் கற்கள் பதித்திருந்தார்கள். முதல் மாடியில் வழவழவென்ற கருப்புக் கல் தரையில் புதைக்கப்பட்டிருந்தது. எங்களுடையது மூன்று மாடி வீடு. மாடிகளை அவள் வாடகைக்கு விட்டிருந்தாள்.

என்னால் அந்த பருத்தப் பெண்மணியின் கணவனுக்காக வருந்தாமல் இருக்க முடியாது. அவன் குள்ளமாக இருப்பான். என்னைப் போலவே அவனது முகத்திலும் உடலிலும் மயிர் அளவுக்கு மீறி வளர்ந்திருந்தது. மனைவியின் அடிமையா?— அவனிடம் அதற்கேற்ற குணங்கள் அத்தனையும் இருந்தன. பாத்திரங்களைக் கழுவிச் சுத்தம் செய்வான். என் எஜமானி சொல்வதைக் கேட்டான். மாலை வேளைகளில் என் எஜமானி



சாப்பிடும் சமயம் என்னை வெளியில் உலாவ அழைத்துப் போகும்படி கணவனிடம் கூறுவாள்.

பெண்கள் தனியாக இருக்கும்போது அவர்கள் பொழுதை எவ்விதம் கழிக்கிறார்கள் என்பதை அறிந்தால் ஆண்கள் கலியாணமே செய்துகொள்ள மாட்டார்கள். வீட்டில் வேலைகள் அப்படியே கிடக்கும். துணிகள் துவைக்காமல் மலைபோல போடப்பட்டிருக்கும். எங்கும் குப்பையும் கூளமுமாகக் காணப்படும். ஆனால் வீட்டுப் பெண்மணியோ பக்கத்து வீட்டுக்காரியுடன் மணிக்கணக்காக நின்று வம்பளந்து கொண்டிருப்பாள்; அல்லது பழைய கடிதங்களைப் படிப்பாள். அக்கம் பக்கத்து வீட்டார் என்ன செய்கிறார்கள் என்று கதவு சந்தின் வழியாகப் பார்த்துக் கொண்டிருப்பாள். கணவன் வீடு திரும்ப இருபது வினாடி இருக்கும்போது அவர்கள் வீட்டைக் கவனிப்பார்கள். எல்லாவற்றையும் சரி செய்துவிட்டு தையல் வேலையில் ஈடுபட்டிருப்பார்கள். அதை அவர்கள் வெகுநேரமாகச் செய்வது போலவும் நடிப்பார்கள்.

அந்த வீட்டில் நான் நாய் வாழ்க்கை வாழ்ந்தேன். பெரும்பாலும் நான் மூலையில் படுத்துக் கொண்டிருப்பேன். பருமனான என் எஜமானி பொழுதை வீணாகக் கழிப்பதைக் கவனித்துக் கொண்டிருப்பேன். சில சமயங்களில் தூங்குவேன். அப்போது நான் பூனைகளை விரட்டிச் செல்வது போலவும் வயதான மாதர்களைக் கண்டு குரைப்பதாகவும் கனவு காண்பேன். அதன் பிறகு என் எஜமானி என்னை ஒரு தட்டுத் தட்டுவாள். என்னுடைய மூக்கில் முத்தமிடுவாள். ஆனால் என்னால் என்ன செய்ய முடியும்? வாசனையை ஒரு நாயால் அனுபவிக்க முடியாது.

நான் என் எஜமானியுடைய கணவனுக்காக வருந்தினேன். அவனும் நானும் வெளியே செல்லும்போது மக்கள் எங்களையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பார்கள். நாங்கள் இருவரும் தெருவின் முனைவரை போவோம். எளியவர்கள்

வசிக்கும் அந்த இடத்தை அடைந்து மேட்டின்மீது ஏறி இறங்குவோம்.

ஒரு நாள் மாலை நாங்கள் இருவரும் உலாவிக்கொண்டிருந்தோம். அப்போது நான் பெரிய வேதாந்தியைப் போலக் காணப்பட்டேன். அவனே திருமண நாள் அன்று வாத்தியம் வாசித்தவனைக் கொலை செய்து விடுபவன் போலத் தோற்றமளித்தான். அவனை ஒரு முறை பார்த்து என் போக்கில் பேசத் தொடங்கினேன்.

''ஏன் அவ்விதம் வருத்தத்துடன் பார்க்கிறாய்? அவள் உன்னை முத்தமிடுவதில்லை. அவளுடைய மடியிலும் நீ உட்காருவதில்லை. காதல் கதைகளையும் பேசியது கிடையாது. நீ நாயாக இல்லாததற்கு உன்னைப் பாராட்ட வேண்டியது தான்'' என்றேன்.

திருமணத்தால் வேதனையடைந்த அவன் என்னைப் பார்த்தான். அவனுடைய முகத்தில் அறிவின் திறன் காணப்பட்டது.

''ஏன் நாயே, நீ நல்ல நாய். உன்னால் பேச முடியும் போலக் காணப்படுகிறாய். அது என்ன நாய்—பூனை'' என்றான் அவன்.

பூனை! அது பேசுமா!

ஆனால் அவனால் புரிந்துகொள்ள இயலவில்லை. பிராணிகளின் பேச்சை மனிதர்களால் புரிந்துகொள்ள முடியாது. நாய்களும் மனிதர்களும் ஒருவருடன் ஒருவர் நூல்களின் வாயிலாகவே பேசிக்கொள்ளலாம். அது ஒன்றுதான் இருவருடைய உள்ளக் கிடக்கையையும் வெளியிட இருக்கிறது.

எங்களுடைய கூடத்திற்கு எதிரில் ஒரு மாது வசித்து வந்தாள். அவளிடம் கருப்பு நிறக் குள்ள நாய் ஒன்று இருந்தது. அந்த மாதின் கணவன் கருப்பு நாயை வெளியில் அழைத்துச் செல்வான். ஆனால் அவன் எப்போதும் மகிழ்ச்சியுடனேயே காணப்படுவான். ஒரு நாள் அந்தக் கருப்பு



நாயின் மூக்கைத் தீண்டினேன். விவகாரத்தை விளக்கிச் சொல்லத் தள்ளினேன்.

நான் கருப்பு நாயைப் பார்த்து, ''இதோ பார். உண்மையான மனிதன் எல்லோர் முன்னிலையிலும் ஒரு நாயிடம் போலியாகக் கொஞ்ச மாட்டான். அது இயற்கையானதும் இல்லை. கண்டவர்களை நேசிக்க விரும்பும் அவனைப் பார்க்கவே பிடிக்கவில்லை. ஆனால் உன் எஜமானன் தினமும் துடுக்காக நடந்து கொள்பவனைப்போல் வருகிறான். கத்துக்குட்டி ஜாலவித்தைக்காரனைப்போல் நடிக்கிறான். அவன் எப்படி இதைச் செய்கிறான்? அவன் இதை விரும்புகிறான் என்று என்னிடம் சொல்லாதே'' என்றேன்.

''அவனா?'' என்று ஆரம்பித்தது கருப்பு நாய். ''அவன் இயற்கையாகக் குணம் ஏற்பட அதைக் கையாள்கிறான். அதில் அவன் தோல்வியடையச் செய்கிறான். நாங்கள் இருவரும் வெளியில் புறப்படும்போது ஆரம்பத்தில் ஒரேயடியாக வெட்கமடைவான். சிறிது நேரமாகி சாராயக் கடையை அடைந்துவிட்டாலோ ஒன்றின் முடிவையோ, அல்லது நாய் பூனை—எதையுமோபற்றி அவன் அக்கறை கொள்வதில்லை. அந்த நிலையத்தின் தானே திறந்து மூடும் கதவினால் என் வாலில் இரண்டு அங்குல நீளம் போய் விட்டது.''

அந்தக் கருப்பு நாய் கூறியவை என்னை சிந்தனை செய்யும்படி ஆக்கிவிட்டது.

ஒரு நாள் மாலை ஆறு மணிக்கு என் எஜமானி கணவனை எனக்கு உற்சாகமூட்டும் பணியைச் செய்வதற்குத் தயாராகும்படி கட்டளையிட்டாள். அதுவரை நான் அதை மறைத்து வைத்திருந்தேன். ஆனால் அவளோ என்னை அதற்காகவே அழைத்தாள். கருப்பு நாயை ரோமம் இல்லாதது என்று அழைத்தார்கள். அதைவிட நான் பருமனாக இருப்பதாக என் உடல் ரோமத்தைக் கண்டு எண்ணினேன்,

மக்கள் அரவமற்ற தெருவை அடைந்து கவர்ச்சிகர மான சாராயக் கடையின் முன் வந்ததும் நான் என் எஜமானனை இழுத்தேன். பந்தய நாயைப்போல் நான் நிலையத்தின் வாயிலை நோக்கிப் பாய்ந்தேன்.

"ஏன் என்னுடைய இழிநிலையை மறைக்கிறாய். என்னைச் சாராயம் பருகும்படி கூறுகிறாயே! என் பூட்ஸ் தேயாதிருக்க நான் எவ்வளவு தந்திரங்கள் செய்திருக்கிறேன் தெரியுமா? என்னால் முடியும் என்று நம்புகிறேன். நான் செய்ய..." என்று பேச்சை இழுத்தான்.

அவன் மனதைக் கவர்ந்துவிட்டேன் என்பது எனக்குத் தெரியும். அவன் சாராயக் கடையினுள் சென்று ஒரு மேஜையருகில் உட்கார்ந்து கொண்டான். நண்பன் வருவதற்காக ஒரு மணி நேரம் காத்துக்கொண்டிருந்தான். அவனுக்கு அருகில் நான் உட்கார்ந்திருந்தேன். என் வால் பக்கம் சாராயக் கடை சிப்பந்தி ஒருவன் நின்றிருந்தான்.

சாராயம் தீர்ந்தது. ரொட்டி மாத்திரமே இருந்தது. அப்போது மேஜையின் காலில் கட்டியிருந்த என் சங்கிலியை அவிழ்த்தான். என்னை வெளியில் அழைத்து வந்து கழுத்துப் பட்டையையும் நீக்கினான். பிறகு, "அருமை நாயே, நல்ல நாயே. போ. இனி அவளால் உன்னை முத்தமிட முடியாது. சொல்லவே வெட்கமாக இருக்கிறது. போ. ஏதாவது வண்டியில் அகப்பட்டுக்கொண்டு ஒழிந்து போ" என்று என்னை விரட்டினான்.

நான் அவனைவிட்டுப் போக மறுத்தேன். அவனுடைய கால்களைச் சுற்றி சுற்றி வந்து விளையாடினேன். மகிழ்ச்சி மேலிட்டவர்களைப்போல் குரைத்துக் கூத்தாடினேன். "போடா முட்டாள்! முட்டை திருடுபவன், பொருள்களைக் கொள்ளையடிப்பவன், உன்னைவிட்டுப் போக நான் விரும்ப வில்லை என்பது தெரியவில்லையா? நீயும் நானும் ஒரு வீட்டில் வளரும் குழந்தைகள் அல்லவா? ஏன் முன்போல இருவரும் நேசமாக இருக்கக் கூடாது?" என்றேன் நான்.



நான் சொன்னதை அவன் புரிந்துகொள்ளவில்லை என்று நீங்கள் கூறலாம். ஆனால் அவன் புரிந்துகொண்டான். ஒரு கணம் நின்று சிந்தித்தான். "நாயே, நாம் ஒரு சிலருக்காக இந்த உலகத்தில் வாழவில்லை. பலருக்காக வாழ்கிறோம். அந்த வீட்டை நான் இனி எப்போதாவது பார்த்தால் அவ்வளவுதான். நீ போனாலும் அவ்விதமே ஒழிந்து விடுவாய். இது வெறும் வாய்ப் பேச்சு அல்ல. இதை நான் உறுதியாகக் கூறுகிறேன்" என்றான்.

ஒருவித கட்டுப்பாடும் இருக்கவில்லை. நான் என் எஜமானனைப் பின் தொடர்ந்து சென்றேன். ஜெர்ஸி போகும் வழியில் ஒரு புதியவளிடம் என் எஜமானன், "நானும் என் நாயும் மலைக்குச் செல்கிறோம்" என்றான்.

ஆனால் என்னை ஆனந்தக் கடலில் ஆழ்த்தியது இதுதான். எஜமானன் நான் கூக்குரலிடும்வரை என் இரு காதுகளையும் பற்றி இழுத்ததுதான்: "குரங்கு மூஞ்சி, எலிவால், பக்கத்து வீட்டு நண்பனின் மகனே. மஞ்சள் நிற நாயே. உன்னை என்னவென்று அழைக்கப் போகிறேன் தெரியுமா?" என்றான்.

"நேர்த்தியான நாய்" என்று அழைக்கலாம். இவ்விதமே நான் நினைத்தேன்.

"உன்னை நான் என் செல்வம் என்று அழைக்கப் போகிறேன்."

அவன் இப்படிக் கூறியதும் எனக்கு ஐந்து வால் இல்லையே என்று ஏங்கினேன். அப்படியும் நான் அந்த நேரத்தில் என் மகிழ்ச்சியை வெளியிட ஒரு வாலாலேயே ஐந்து வால் உள்ளதைப்போலவே போதுமான அளவு ஆட்டினேன்.

# 8. பணமும் காதலும்

வயதான அந்தோணி ஒரு சமயம் பிரபல ஏரோதா சோப் தயாரிப்பாளனாக இருந்தான். அதன் சொந்தக்காரனும் அவனே தான். அவன் வாசகசாலை அறையின் ஜன்னலின் அருகில் நின்று வெளியே பார்த்துக்கொண்டிருந்தான். அவனுடைய வீட்டிற்கு வலது பக்கத்து வீட்டுக்காரன் ஜோன். அவனும் பிரபல சோப் வியாபாரிதான். வழக்கம் போல அவன் அந்தோணியின் வீட்டைப் பார்த்து மூக்கை உறிஞ்சி, புருவத்தை நெறித்துக்கொண்டே தயாராக இருந்த மோட்டாரில் ஏறினான்.

மாஜி சோப் தயாரிப்பாளன் அந்தோணி உடனே, ''ஒன்றும் செய்யாதிருக்கக்கூடாது. அடுத்த வேனிற் காலத்திற்குள் என் வீட்டிற்கு சிவப்பு வெள்ளை, நீலநிற வர்ணம் பூசியாக வேண்டும். அதன் பிறகு அவனுடைய நீண்ட மூக்கு எவ்வளவு மேலே போகிறது பார்க்கலாம்'' என்று சொல்லிக் கொண்டான். பிறகு அறையின் வாயில்வரை சென்றான். எப்போதுமே அவன் ஒருவரை அழைக்க மணியை அசைக்க விரும்பமாட்டான். அதனால் அங்கு நின்று உரத்த குரலில், ''மிக்'' என்று அழைத்தான்.

வேலைக்காரன் மிக் வந்ததும், ''ரிச்சர்ட்டை வெளியே போவதற்குமுன் இங்கு வரச் சொல்'' என்றான்.



அந்தோணியின் மகன் ரிச்சர்ட். வாலிபன். அவன் தகப்பனார் கட்டளைப்படி வந்தான். அந்தோணி கையிலிருந்த செய்திப் பத்திரிகையை ஒரு பக்கமாக வைத்துவிட்டு மகனைப் பார்த்தான். பிறகு ஒரு கையில் நரைத்த தலையைத் தடவிக் கொண்டான். மற்றொரு கையால் சாவிக்கொத்து நிறைந்த சட்டைப் பையைத் தடவினான். தொண்டையைக் கனைத்துச் சரி செய்துகொண்டு, ''ரிச்சர்ட், நீ உபயோகிக்கும் சோப்பிற்கு எவ்வளவு பணம் கொடுக்கிறாய்?'' என்று கேட்டான்.

கல்லூரிப் படிப்பை முடித்துக்கொண்டு ரிச்சர்ட் வீட்டிற்கு வந்து ஆறு மாதங்களே ஆகின்றன. தகப்பனாரின் கேள்வி அவனைத் திகைக்கச் செய்தது. அவன் அவ்விதம் கேட்பான் என்று ரிச்சர்ட் நினைக்கவில்லை. அதனால் அவன் தட்டுத் தடுமாறி, ''பன்னிரண்டு சோப்புகள் ஆறு டாலர்'' என்றான்.

''உன் ஆடைகளுக்கு எவ்வளவு செலவாகிறது?''

''ஆறு டாலர் என்றுதான் நினைக்கிறேன்.''

''இப்போது நீ பெரியவனாகிவிட்டாய். வாலிபர்கள் தாங்கள் உபயோகிக்கும் பன்னிரண்டு சோப்புகளுக்கு இருபத்தி நான்கு டாலர் கொடுக்கிறார்கள் என்று அறிகிறேன். மேலும் அவர்கள் ஆடைகளுக்காக மாத்திரம் நூறு டாலருக்கும் அதிகமாகச் செலவு செய்கிறார்களாம். அவர்களைப் போல் செலவு செய்ய உனக்கும் போதுமான அளவு பணம் இருக்கிறது. அப்படியும் நீ நியாயமாகவே செலவு செய்கிறாய். நான் பழைய ஏரோதா சோப்பையே உபயோகிக்கிறேன். அதை நான் மூட நம்பிக்கையால் உபயோகிக்கவில்லை. ஆனால் தயாரிக்கப்படும் சோப்புகளிலேயே அது சிறந்தது. நீ ஒரு சோப்பிற்கு பத்து சென்ட் அதிகமாக விலை கொடுக்கிறாய் என்று வைத்துக்கொள். அப்போது மோசமான வாசனைப் பொருள்களுக்கும் காகிதங்கள் போட்டுச் சுற்றியிருப்பதற்குமே அளிப்பதற்காகத் தீர்மானித்துக்

கொள். ஆனால் உங்கள் காலத்து வாலிபர்களுக்கு ஐம்பது செண்டே எல்லாவற்றையும் செய்துவிடும். நீ ஒரு சீமான். ஒருவன் சீமானாக மூன்று தலைமுறை பிடிக்கும் என்று கூறுகிறார்கள். பணமானது நாம் நினைப்பதைச் செய்யும். அதுவே உன்னை ஒரு சீமானாக்கியது. மரியாதையற்ற என் இருபக்கத்து வீட்டுக்காரர்களும் எதிலும் என்னுடன் ஒத்துப் போக மாட்டார்கள். மேலும் நான் அவர்கள் வீட்டிற்கு மத்தியில் வீட்டை வாங்கியதால் இரவில்கூடத் தூங்க மாட்டார்கள்'' என்றான் அந்தோணி.

''பணத்தால் செய்ய முடியாத சில விவகாரங்களும் இருக்கின்றன'' என்றான் ரிச்சர்ட் கவலையுடன்.

''அப்படிச் சொல்லாதே. என்னுடைய பணம் ஒவ்வொரு சமயமும் பணமாகவே இருந்து வந்தது. பணத்தால் செய்ய முடியாதது எது என்று அகராதியைப் புரட்டிப் பார்த்து விட்டேன். மேலும் பார்க்கவேண்டியதை அடுத்த வாரத்திற்காக ஒதுக்கி வைத்திருக்கிறேன். பணத்தினால் எதை வாங்க முடியாது, சொல் பார்க்கலாம்?''

''பணத்தினால் ஒன்றை மாத்திரம் வாங்கவே முடியாது. சமூகத்தில் பிரத்யேகமாகவுள்ளவர்களிடையே பணத்தைக் கொண்டு மாத்திரம் ஒருவன் நட்புக் கொண்டுவிடவோ அவர்கள் சங்கத்தில் சேர்ந்துவிடவோ இயலாது.''

''அப்படியா? இயலாதா? எங்கே உன் சமூகத்தில் பிரத்யேகமாகவுள்ளவர்கள் சங்கம் இருக்கிறது? அங்குள்ளவர்களில் பிரயாணத்திற்குப் பணம் கொடுக்க இல்லாத ஒருவனைச் சொல்லு!''

ரிச்சர்ட் பெருமூச்சு விட்டான்.

''நான் இந்த விவகாரத்திற்குத்தான் வரப் போகிறேன். அதற்காகவே உன்னை அழைத்தேன். உன் மனதில் ஏதோ போராட்டம் நடந்துகொண்டிருக்கிறது. இதை நான் இரண்டு வாரங்களாகக் கவனித்து வருகிறேன். என்ன சொல்லு? இருபத்தி நான்கு மணி நேரத்திற்குள் ஒரு கோடி



டாலர் ரொக்கத்தையும், நிலபுலன்களையும் என் கைவசப் படுத்தி விடுவேன் என்று நினைக்கிறேன். அது உன் காதல் விவகாரமாக இருந்தால் கடலில் ராப்பெலர் கப்பல் தயாராக இருக்கிறது; இன்னும் இரண்டு நாட்களில் புறப்படப் போகிறது.''

''உங்கள் யூகம் மோசமானதல்ல. குறி தவறாமல் அடித்துவிட்டீர்கள்.''

அந்தோணி மிகவும் ஆவலோடு, ''அவள் பெயர் என்ன?'' என்று கேட்டான்.

ரிச்சர்ட் அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்தான். அவனுடைய கொடுமையான தகப்பனார் அனுதாபம் காட்டுபவராகவும் துணைவராகவும் மாறியிருந்தார். அவனுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாகிவிட்டார்.

''ஏன் நீ அவளிடம் கேட்கவில்லையா? உன்னைப்பற்றித் தெரிந்தால் அவள் துள்ளிக் குதிப்பாள். உனக்குப் பணம், அழகு—எல்லாம் இருக்கின்றன. நீயும் நேர்மையானவன். உன் கைகள் அழுக்குப் படாமல் இருக்கின்றன. அதில் ஏரோதா சோப் படவில்லை. நீ கல்லூரியில் படித்திருக்கிறாய். ஆனால் அவள் அதை அவ்வளவாகப் பொருட்படுத்தமாட்டாள்'' என்றான் அந்தோணி.

''இவற்றைக் கூறவும், அவளைப் பற்றி அறியவும் எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை'' என்றான் ரிச்சர்ட்.

''சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக்கொள். பூங்காவில் உலாவ அவளை அழைத்துச் செல். அல்லது மாதா கோயிலுக்கு அவளுடன் போ.''

''உயர்ந்த சமூகக் கட்டுத் திட்டங்கள் உங்களுக்குத் தெரியாது அப்பா. அவள் அந்த சமூகச் சக்கரத்தில் ஒருத்தி. அதுதான் அவளைச் சுழற்றி வருகிறது. ஒவ்வொரு நாளில் ஒவ்வொரு கணமும் அவளுக்கு முன்னதாகவே நிர்ணயிக்கப்படுகிறது. அவளை நான் அடைந்தே தீரவேண்டும்

அப்பா. இல்லாவிட்டால் இந்த ஊரே இருள் சூழ்ந்ததாகி விடும். என்னால் இதை எழுதவும் முடியாது. ஒன்றைச் செய்யவும் முடியாது.''

''ஹூம், என்னிடமுள்ள பணம் அனைத்தையும் செலவு செய்தாலும் அவளுடன் நீ தனித்து ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் பேச சந்தர்ப்பத்தை ஏற்படுத்த முடியாதா?'' என்று கேட்டான் அந்தோணி.

''இவ்வித எண்ணத்திற்குக் காலம் கடந்துவிட்டது. நாளை மறுநாள் பிற்பகல் அவள் ஐரோப்பாவிற்குப் பயண மாகிறாள். அங்கு அவள் இரண்டு ஆண்டுகள் தங்கப் போகிறாள். நாளை மாலை அவளை நான் தனிமையில் சில வினாடிகளை சந்தித்துப் பேசலாம். இப்போது அவளுடைய அத்தை வீட்டில் இருக்கிறாள். அங்கு நான் போக முடியாது. ஆனால் நாளை இரவு எட்டரை மணிக்கு ரயில்வே நிலையத்தில் வண்டி எடுத்துச் சென்று அவளைச் சந்திக்க அனுமதிக்கப்பட் டிருக்கிறது. அங்கிருந்து நாங்கள் நேராக நாடகக் கொட்ட கைக்குச் செல்வோம். அங்கு எங்களுக்காக இடம் பதிவு செய்துகொண்டு அவளுடைய தாயார் காத்திருப்பாள். அந்தச் சூழ்நிலையில் இடையேயுள்ள ஆறு ஏழு நிமிஷங் களுக்குள் நான் சொல்ல வேண்டிய அனைத்தையும் அவளுக் குச் சொல்லிவிட முடியுமா? இயலாது. மேலும் அதன் பிறகும், நாடகக் கொட்டகையிலும் அவளுடன் பேச எனக்கு எங்கே சந்தர்ப்பம் இருக்கப் போகிறது? ஒன்றும் கிடையாது. உங்கள் பணத்தினால் இந்த ஒன்றைமாத்திரம் செய்யவே முடியாது. ஒரு வினாடியைக்கூட நாம் பணத்தின் மூலம் பெற இயலாது. அவ்விதம் செய்ய இயலும் என்றால் பணக்காரர்கள் அதிக காலம் வாழலாம். அவள் கப்பல் பிரயாணம் தொடங்குவதற்கு முன் பேச வேறு சந்தர்ப்பமே கிடையாது'' என்று வருத்தத்துடன் சொன்னான் ரிச்சர்ட்.

''நல்லது ரிச்சர்ட்; போ. இப்போது கவலையில்லாமல் சங்கத்திற்குப் போய் வா. உன் கவலைக்குக் காரணமானதைச் சொன்னதைக் கேட்டு மகிழ்ச்சியடைகிறேன். ஆனால் பணம்



என்ற தெய்வத்திற்கு மறக்காமல் தூபம் போட்டு வா. பணத்தினால் ஒரு வினாடியையும் வாங்க முடியாது என்று தானே கூறுகிறாய்? நல்லது. விதியானது எல்லாவற்றையும் பணத்தின் மூலம் செய்து உன் வீட்டின் முன்னாலேயே கொண்டு நிறுத்திவிடலாம்.''

அன்றிரவு அந்தோணியின் சகோதரியும் ரிச்சர்ட்டின் அத்தையுமான லென் வந்தாள். பணச் சுமையைத் தாங் காமல் அவள் அவதிப்படுபவள். அவள் வந்தபோது அந்தோணி மாலை செய்திப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தான். அந்தோணியிடம் அவள் ரிச்சர்ட்டின் காதல் விவகாரத்தை எடுத்துச் சொன்னாள்.

''அவன் எல்லா விவகாரத்தையும் சொன்னான். என் பணம் முழுவதும் அவனுக்காகச் செலவு செய்யத் தயாராக இருக்கிறேன் என்று கூறினேன். அதன் பிறகு அவன் பணத்தைக் கேவலமாகப் பேசத் தொடங்கினான். பணத் தினால் ஒன்றும் செய்ய முடியாது என்றான். சமூகத்தின் கட்டுத் திட்டங்களைக் கோடிக் கணக்கான பணம் செலவு செய்தாலும் சிதைக்க முடியாதாம்'' என்று அந்தோணி சொன்னான்.

''அந்தோணி, பணத்தைப்பற்றி நீ பெரிதாக நினைக்கக் கூடாது. உண்மையான நேசத்தின் முன் பணம் ஒன்றுமே இல்லை. காதல் மிகுந்த சக்தி வாய்ந்தது. அவன் முன்ன தாகவே சொல்லியிருந்தால் அவள் நம் ரிச்சர்ட்டை மணக்க மறுக்கவே மாட்டாள். ஆனால் இப்பொழுது காலங்கடந்து விட்டதாகவே கருதுகிறேன். அவ்விடம் தன் மன நிலையை வெளியிட ரிச்சர்ட்டிற்குத் தருணமே இல்லை. உன்னுடைய பணம் முழுவதாலும்கூட ரிச்சர்ட்டிற்கு மகிழ்ச்சியை ஏற் படுத்த இயலாது.''

* * *

மறு நாள் காலை அத்தை லென் ஒரு பழைய பொன் மோதிரத்தை எடுத்தாள். அதை ரிச்சர்ட்டிடம் கொடுத்து,

''இன்றிரவு இதை அணிந்துகொள். உன் தாயார் இதை என்னிடம் கொடுத்து வைத்திருந்தாள். காதல் விவகாரத்தில் இது நன்மையைச் செய்யும் என்று கூறினாள். மேலும் உனக்கு யாரிடமாவது காதல் ஏற்பட்டால் அச்சமயம் உன்னிடம் கொடுக்கும்படியும் கேட்டுக் கொண்டாள்'' என்றாள்.

ரிச்சர்ட் அந்த மோதிரத்தை வாங்கினான். தன்னுடைய விரலில் அணிந்துகொள்ள முயற்சித்தான். எந்த விரலிலும் அது பொருந்தவில்லை. அதனால் அதை எடுத்து உள் சட்டைப் பையில் போட்டுக் கொண்டான். பிறகு வண்டிக்காக டெலி போன் செய்தான்.

* * *

ரயில் நிலையத்தில் எட்டரை மணி ஆகி இரண்டு நிமிடத்திற்கு, காதலி லாஸ்டரியைச் சந்தித்தான் ரிச்சர்ட்.

''தாயாரையும் மற்றவர்களையும் காத்திருக்க வைக்கக் கூடாது'' என்றாள் லாஸ்டரி.

வண்டியில் ஏறிக் கொண்டதும் வண்டிக்காரனிடம், ''வாலஸ் தியேட்டருக்கு உன்னால் முடிந்த வேகத்தில் போ'' என்றாள்.

வண்டி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. முப்பத்தி நான்காவது தெருவை வண்டி அடைந்ததும் ரிச்சர்ட் வண்டிக்காரனிடம் சிறிது நிறுத்தச் சொன்னான். பிறகு லாஸ்டரிடம், ''மோதிரம் விழுந்துவிட்டது; அது என் தாயாருடையது; என்னால் அதை இழக்க முடியாது. அதிக நேரம் உன்னைக் காக்க வைக்க மாட்டேன். மோதிரம் விழுந்த இடம் எனக்கு நன்றாகத் தெரியும்'' என்று கூறி வண்டியை விட்டு இறங்கினான்.

ஒரு நிமிஷத்திற்குள்ளாகவே மோதிரத்துடன் திரும்பி வந்தான் ரிச்சர்ட்.



அந்த ஒரு நிமிஷத்திற்குள் ஒரு பெரிய வண்டி வந்து அவர்களுடைய வண்டிக்கு முன்னால் நின்றது. ரிச்சர்ட்டின் வண்டிக்காரன் அதைக் கடந்து செல்ல முயற்சித்தான். ஆனால் ஒரு பெரிய பார வண்டி அதன் பக்கத்தில் வந்து கடந்து செல்ல முடியாத வண்ணம் செய்துவிட்டது. வலது பக்கம் போக வண்டிக்காரன் முயன்றான். மரச் சாமான்கள் ஏற்றிய வண்டி அந்தப் பக்கத்திலிருந்தது. பின்னுக்கும் போக முடியாமல் பல வண்டிகள் வந்து நின்றுவிட்டன. ரிச்சர்ட்டின் வண்டியின் நாலா பக்கங்களிலும் வண்டிகளும் குதிரைகளும் நின்று வழியை மறித்துவிட்டன.

பெரிய நகரங்களிலுள்ள தெருக்களில் சில சமயம் இப்படியே வண்டிகள் வந்து நின்று போக வழியில்லாமல் செய்துவிடுவது வழக்கம்.

''வண்டியை ஏன் வேறு திசையில் செலுத்தக்கூடாது? நேரமாகிவிடுமே'' என்றாள் லாஸ்டரி.

ரிச்சர்ட் வண்டியின்மீது ஏறி நின்று நாலா பக்ககங்களிலும் பார்த்தான். எங்கும் வண்டிகள் சங்கிலித் தொடர் போல் வழியை மறித்துக்கொண்டு நின்றிருந்தன. எவ்வளவு முயன்றும் வண்டிகள் வேகமாகப் போக இயலவில்லை. ஆயிரக்கணக்கான மக்கள் தெருவின் இரண்டு பக்கங்களிலும் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர்.

''என்மீது கோபம் வேண்டாம். ஆனால் நாம் நன்றாக வழி மறிக்கப்பட்டு விட்டோம் என்று தெரிகிறது. வண்டிகள் அனைத்தும் போய் நமக்கு வழி கிடைக்க ஒரு மணி நேரமாவது பிடிக்கலாம் என்று தோன்றுகிறது. இந்தத் தொல்லைக்கு நானே காரணம். மோதிரத்தை நான் கை தவறிக் கீழே போட்டிராவிட்டால்...'' என்றான் ரிச்சர்ட்.

''எங்கே மோதிரத்தைக் கொடுங்கள் பார்க்கலாம். நடந்தது நடந்துவிட்டது; அதைப்பற்றி இனி பேசிப் பயன் இல்லை. நாடகத்திற்குப் போவது இயலாத காரியம்'' என்றாள் லாஸ்டரி.

* * *

இரவு பதினேரு மணிக்கு யாரோ அந்தோணியின் வீட்டுக் கதவைத் தட்டினுன்.

அச்சமயம் அந்தோணி ஒரு வீரதீரச் செயல்கள் படக் கதைப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தான். கதவு தட்டும் சப்தத்தைக் கேட்டு, ''உள்ளே வாருங்கள்'' என்ருன்.

அத்தை லென் உள்ளே வந்தாள். அவள் நரைத்த கூந்தலையுடைய தேவதையைப் போலக் காணப்பட்டாள். ''அவர்கள் திருமண ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். அந்தப் பெண் ரிச்சர்டை மணக்கச் சம்மதித்துவிட்டாள். நாடகக் கொட்டகைக்கு அவர்கள் போகும் சமயம் வழியில் தடங்கல் ஏற்பட்டுவிட்டது. அவர்களுடைய வண்டி அங்கிருந்து புறப்பட இரண்டு மணி நேரமாயிற்றும்.

''இனி பணத்தைப்பற்றிப் பெருமையாகப் பேசாதே அந்தோணி. உண்மையான காதலுக்கு உதவியாகவும் காரணமாகவும் இருந்தது ஒரு சிறு மோதிரம்தான். அதன் மூலமே நம்முடைய ரிச்சர்ட் வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக மாறியது. வண்டி போக முடியாமல் பல வண்டிகளுக் கிடையே சிக்கிக் கொண்டதால் ரிச்சர்ட் தன் காதலியிடம் மனம் விட்டுப் பேசினுன். காரியமும் வெற்றிகரமாக முடிந்தது. உண்மையான காதலுடன் பணத்தை ஒப்பிட்டுப் பார்க்கும்போது அது ஒன்றுமே இல்லை'' என்ருள் லென்.

''நல்லது; பையன் எதை விரும்பினுனே அதை அடையப் போவதைக் கேட்டு மகிழ்ச்சியடைகிறேன். அவனுடைய மகிழ்ச்சிக்காக நான் எவ்வளவு பணம் வேண்டுமானுலும் செலவு செய்யத் தயார் என்று சொன்னேன்...''

''ஆனுல் உன்னுடைய பணம் என்ன நன்மையைச் செய்தது?''

''லென், என்னுடைய கப்பற் கொள்ளைக்காரன் மோச மான ஆபத்தில் சிக்கிக் கொண்டுவிட்டான். அவனுடைய கப்பல் உடைந்துவிட்டது. அவனுக்குத்தான் ஆழ்கடலில்



மூழ்கும் பணத்தின் மதிப்பு தெரியும். இந்த அத்தியாயத்தை நான் படித்து முடிக்க வேண்டும். அதற்காக என்னை விட்டுப் போ'' என்ருன் அந்தோணி.

இந்த இடத்தில் கதை முடிந்துவிட வேண்டும். வாசகர்களாகிய நீங்கள் விரும்பிய விதமே கதையை இத்துடன் முடித்துவிட வேண்டியதுதான். ஆனுல் உண்மையைக் கண்டறிய இவற்றின் அடிபாகத்திற்கே நாம் போக வேண்டியிருக்கிறது.

மறுநாள் கெல்லி என்பவன் அந்தோணியின் வீட்டிற்கு வந்தான். அவனைத் தாமதமின்றித் தனது படிப்பறைக்கு அழைத்துச் சென்ருன் அந்தோணி.

''நல்லது'' என்று கூறி பாங்கின் செக் புத்தகத்தை எடுத்துக் கொண்டான் அந்தோணி. பிறகு, ''அது சிறந்த சோப்...ஹூம் ஐந்தாயிரம் டாலர் பெற்றுக்கொள்'' என்ருன்.

''என் கையிலிருந்தே முன்னூறு டாலர் கொடுத்திருக் கிறேன். திட்டத்திற்கு மேல் அதிகம் செலவாகிறது. பார வண்டிகள், வாடகை கோச்சுகள் ஆகியவற்றை ஐந்து டாலர் வீதம் அமர்த்தினேன். பெரிய வண்டிகள் பத்து டாலர். மோட்டார்கள் ஒவ்வொன்றிற்கும் பத்து டாலர். சாமான் ஏற்றுபவர்களுக்குத் தலா இருபது டாலர். போலீஸ்காரர்கள் என்னைப் பலமாகத் தாக்கிவிட்டார்கள். அவர்களில் இருவருக்கு ஐம்பதும், மற்ற இருவருக்கு இருபது, இருபத்தைந்து டாலரும் கொடுத்தேன். அந்த வண்டிகள் கண்காட்சியின்போது வில்லியம் இல்லாதது நல்லதாயிற்று. பொருமையில் அவன் உள்ளம் உடைந்துவிட நான் விரும்ப வில்லை. முன்பே நான் ஒத்திகை செய்து பார்த்துக் கொள்ளவும் இல்லை. எல்லோரும் ஒரு கணத்தில் வந்து கூடி விட்டனர். வண்டிகள் போய் வழி சரியாக முடிய இரண்டு மணி நேரமாயிற்று'' என்ருன் கெல்லி.

"பதின்மூன்றுயிரம். அவ்வளவுதானே கெல்லி?" என்று கேட்டு செக்கில் எழுதி அவனிடம் கொடுத்தான் அந்தோணி. "உன்னுடைய ஆயிரமும், முன்னூறு டாலர்களும் இந்தக் கணக்கில் சேர்க்கப்படவில்லை. பணத்தின்மீது உனக்கு வெறுப்பில்லையே?" என்று கேட்டான்.

"எனக்கா? ஏழ்மை என்பதைக் கண்டு பிடித்தானே அவனை நான் நேசிக்கிறேன்!" என்று கூறிவிட்டு செக்கைப் பெற்றுக்கொண்டு புறப்பட்டான் கெல்லி.

அறையின் வெளிப்புறத்தை அடைந்த கெல்லியைத் திரும்ப அழைத்து, "அந்தக் கூட்டத்தில் நீ எங்காவது ஆடைகளே இல்லாத ஒரு பருத்த பையன் கையில் வில் அம்புடன் இருந்ததைப் பார்த்தாயா?" என்று கேட்டான் அந்தோணி.

"இல்லை; நான் பார்க்கவில்லை. அப்படியே அவன் இருந்தாலும் நான் அவனைப் பார்க்கப் போவதற்குள் போலீஸ்காரர்கள் அவனைப் பிய்த்து எடுத்திருப்பார்கள்" என்றுன் கெல்லி.

"அந்தத் துடுக்குக்காரப் பையன் கையில் அகப்பட மாட்டான் என்று நினைத்தேன். நல்லது; போய் வா" என்றுன் அந்தோணி.

# 9. ஜோதிட பலன்

ஒரு நாள் டாபினும் நானும் கோனித் தீவுக்குச் சென்றோம். எங்கள் இருவரிடமும் நான்கு டாலர்கள் இருந்தன. டாபின் கவலையடைந்திருந்தான். அதை மாற்ற எங்காவது போக வேண்டியது அவசியமாயிற்று. அவனுடைய காதலி கெடிமோஹனர் மூன்று மாதங்களுக்கு முன் அமெரிக்காவுக்குப் புறப்பட்டாள். அவளிடம் அவளே சேமித்து வைத்த இருநூறு டாலர், டாபினுடைய நிலம், கால்நடைகள் ஆகியவற்றை விற்றதால் கிடைத்த நூறு டாலர் ஆக முன்னூறு டாலர் இருந்தது. அவள் வருவதாக எழுதிய கடிதத்திற்குப் பிறகு அவளைக் குறித்து ஒரு செய்தியும் இல்லை; அவளும் வந்து சேரவில்லை. செய்திப் பத்திரிகைகளில் டாபின் விளம்பரம் செய்தான். அதனுலும் ஒரு பயனும் ஏற்படவில்லை.

அதனுல் நானும் டாபினும் கோனித் தீவிற்குச் சென்றோம். அங்கு சுற்றிப் பல காட்சிகளைக் கண்டாவது அவனுடைய கவலை தீராதா என்று எண்ணினேம். ஆனல் இளகிய மனதையுடையவன்; கோழை! அவனுக்கு ஏற்பட்ட வருத்தம் அவன் உடலையே பாதித்தது. பலூன்களைக் கண்டு மகிழ்ச்சியடைவதற்குப் பதில் அழத் தொடங்கினுன்; சினிமாப் படத்தைக் கண்டு மனம் புழுங்கினுன்; சாராயம்

மாத்திரம் எங்கு வேண்டுமானுலும் பருகுவான். அங்கு சந்திப்பவர்களிடம் உரையாடுவதிலும் முரட்டுத்தனமாக நடந்துகொள்வதிலும் அவனுக்குச் சிறிது மன ஆறுதல் இருந்தது.

அதனுல் நான் அவனை அதிக மக்கள் நடமாட்ட மில்லாததும் அவனுடைய மனதைக் கவரக்கூடியதாகவு முள்ள இடங்களைவிட்டு வேறு வழியாக நடத்தி அழைத்துச் சென்றேன். அவன் ஆறு அடிக்கும் அதிக உயரமாக இருப்பான். அவனுடைய கண்களில் மனிதத் தன்மை நிரம்பியிருக்கும்.

ஒரு இடத்தை அடைந்ததும் டாபின், "இங்குதான் மனதைத் தேற்றக் கூடியவள் இருக்கிருள். கை ரேகைகளைப் பார்த்துச் சொல்வதில் அவள் திறமையானவள். அவளிடம் கையைக் காட்டி என்ன சொல்கிருள் பார்க்கலாம்" என்றுன் டாபின்.

இயற்கையில் அதற்கு மாருகவுள்ளவற்றை டாபின் விரும்பக்கூடியவன். கருப்பு நிறப் பூனை, அதிர்ஷ்ட எண்கள் ஆகியவற்றுடன் காலநிலை குறித்துப் பத்திரிகைகளில் வெளி யாகும் செய்திகளையும் அவன் கண்மூடித்தனமாக நம்பினுன்.

நாங்கள் ரேகையைப் பார்த்து ஜோதிடம் கூறுபவள் இருக்குமிடத்திற்குச் சென்றேம். அங்கு மர்மமான வகை யில் சிவப்புத் துணி கட்டியிருந்தது. இருப்புப் பாதையைப் போன்று பல தாறுமாருன கோடுகளையுடைய கைகளின் படங்களும் மாட்டப்பட்டிருந்தன. வீட்டின் முன்புறம், "ஜுஜு சீமாட்டி, எகிப்து தேசத்துக் கைரேகை ஜோதிட நிபுணி" என்ற பெயர்ப் பலகை தொங்கிக் கொண்டிருந்தது.

வீட்டினுள் பருத்த மாது ஒருத்தி இருந்தாள். அவள் சிவப்பு நிற ஆடை உடுத்தியிருந்தாள். அவற்றில் பலவித உயிரினங்களின் உருவங்கள் வர்ண நூல்களால் பொறிக்கப்



பட்டிருந்தன. டாபின் அவளுக்குப் பத்து சென்ட் பணம் கொடுத்துவிட்டு, தன் கைகளில் ஒன்றை அவள் முன் நீட்டினுன். ஜோதிடம் கூறுபவள் அவனுடைய கையைப் பற்றி அதிலுள்ள கோடுகளைச் சோதனை செய்தாள். பிறகு, "ஐயா, உங்கள் கைரேகை உங்களுடைய அதிர்ஷ்டத்தைக் காட்டு..." என்றுள்.

டாபின் குறுக்கிட்டு, "அதிருக்கட்டும்; சொல்லுங்கள்" என்றுன் ஆத்திரமாக.

"உங்களுடைய துன்ப நாட்களிலேயே என்னைக் காண வந்துள்ளதாக ரேகை கூறுகிறது. மேலும் பல துன்பங்கள் வரலாம். வீனஸ் மேடு நீங்கள் ஒருத்திமீது காதல் கொண் டிருப்பதைக் காட்டுகிறது. உங்கள் காதலியினுலேயே உங்களுக்குத் தொல்லைகள் இருக்கின்றன" என்றுள் ஜுஜு சீமாட்டி.

"கெடிமோஹனரைக் குறித்தே அவள் இப்படிக் கூறு கிருள்" என்று என்னிடம் மெல்லிய குரலில் சொன்னுன் டாபின்.

"நடந்த துன்பங்களுக்கும் தொல்லைகளுக்கும் அளவே இருக்காது; அவற்றை மறக்கவும் இயலாது. ரேகையின் அமைப்பிலிருந்து உங்கள் காதலியின் பெயர் கெ, மோ என்ற எழுத்துக்களைக் கொண்டதாக இருக்கலாம்" என்றுள் ஜுஜு சீமாட்டி.

"என்ன, கேட்டாயா?" என்று என்னிடம் மெல்லிய குரலில் சொன்னுன் டாபின்.

"இதோ பாருங்கள். கருத்த ஆண், ஒல்லியான பெண் ஆக இருவராலும் உங்களுக்குத் தொல்லை ஏற்படலாம். வெகு விரைவிலேயே பண நஷ்டம் உண்டாகும். ஒருவன் குறுக் கிடுவான். அவனுல் உங்களுக்கு நன்மை ஏற்படும். அவனைக் கண்டதுமே அவனுடைய வளைந்த மூக்கைக் கொண்டு அடையாளம் தெரிந்து கொள்வீர்கள்."

''அவன் பெயரைக் கூற முடியுமா? எனக்கு அதிர்ஷ்டத்தைக் கொடுக்கும் அவனைக் கண்டதும் வாழ்த்துவதற்கு உதவியாக இருக்கும்'' என்ருன் டாபின்.

''அவன் பெயர்'' என்று டாபினுடைய கை ரேகைகளை உன்னிப்பாகக் கவனித்தாள் ஜுஜு சீமாட்டி. பிறகு, ''ரேகைகளின் மூலம் அவன் பெயரை அறிய முடியவில்லை; ஆனால் இந்த நீண்ட ரேகை தெரிவிப்பது இதுதான். அவனுடைய பெயரில் எங்காவது 'ஒ' என்ற எழுத்திருக்கலாம்; வேறு ஒன்றும் சொல்வதற்கில்லை; போய் வாருங்கள்; வழியை மறைத்துக்கொண்டு நிற்காதீர்கள்'' என்ருள் ஜுஜு சீமாட்டி.

வெளியில் வந்து நாங்கள் நடக்கும்போது, ''அவள் கூறியது ஆச்சரியமாக இல்லையா?'' என்ருன் டாபின்.

நாங்கள் வரும் வழியில் ஒரு கருத்த மனிதன் வாயில் சுருட்டுடன் வந்துகொண்டிருந்தான். அவன் தன் கையிலிருந்த சுருட்டால் டாபினின் காதில் சுட்டுவிட்டான். உடனே டாபின் அவனைப் பற்றி கழுத்தில் ஒரு குத்து விட்டான்; பக்கத்தில் வந்துகொண்டிருந்த பெண்மணிமீது போய் அவன் விழுந்தான். சச்சரவு அதிகமாகி போலீஸ் வருவதற்குள் நான் டாபினை அங்கிருந்து தந்திரமாக அழைத்துக்கொண்டு சென்றேன்; டாபின் மகிழ்ச்சியுடன் இருக்கும்போது ஏதாவது தொல்லை கொடுப்பான்.

படகில் ஏறிச் செல்லும்போது படகோட்டி, ''யாருக்காவது அழகான ஒரு வேலைக்காரி வேண்டுமா?'' என்று உரத்த குரலில் கேட்டான்.

டாபின் தான் குற்றவாளி என்பதை உணர்ந்தான்; அதற்காக அவன் வருந்தத் தொடங்கும் சமயம் சட்டைப் பையிலிருந்த பணம் காணுமல் போனதை உணர்ந்தான். பணத்தை யார் எடுத்தார் என்பதை அறிய இயலவில்லை; சச்சரவு நடந்தபோது யாரோ அவன் உள் சட்டைப் பையிலிருந்த பணத்தைக் களவாடியிருக்கிருர்கள்; அதனுல் நாங்கள் உட்கார்ந்து நடப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தோம். நாங்கள் புறப்பட்டதிலிருந்து இதுவரை இப்போதுள்ளதைப்போல் டாபின் அதிகமாக வருத்தப்பட்டுக்கொண்டு இருந்ததே இல்லை.



படகின் மேல் தளத்தில் ஒரு பெண்மணி காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளுடைய ஆடையும் நகை அலங்காரமும் விசித்திரமாக இருந்தது. டாபின் அவள் உட்கார்ந்திருக்கும் பக்கமாகச் சென்ருன். அவனை அறியாமலேயே பெண்மணியின் காலை மிதித்துவிட்டான். மது அருந்திய சமயம் பெண்களிடம் மிகவும் மரியாதையாக நடந்துகொள்ளும் டாபின் அப்போது மாறிவிட்டான். தலையிலிருந்த தொப்பியைக் கழட்டி அவளிடம் மன்னிப்புக் கேட்க முற்படுவதுபோல் குனிந்தான்; ஆனுல் மன்னிப்புக் கேட்காமல் தொப்பியை வீசி எறிந்தான். அதைக் காற்று தூக்கிச் சென்று தண்ணீரில் போட்டது.

டாபின் திரும்பி வந்து உட்கார்ந்துகொண்டான்; அவனுக்கு அடிக்கடி விரோதிகள் தோன்றிக்கொண்டேயிருந்தனர். அதனுல் அவன் முகம் எப்படியிருக்கிறது என்று பார்த்தேன்; எதிரே தென்படும் சிறந்த ஆடையுடுத்தியவனை அடிக்க முற்படுபவனுகவும் படகைச் செலுத்தும் பொறுப்பை ஏற்பவனுகவும் காணப்பட்டான்.

திடீரென்று டாபின் என் கையைப் பற்றி உணர்ச்சிவசத்தால் தட்டுத் தடுமாறி, ''ஜான்! நாம் என்ன செய்கிருேம் தெரியுமா? நாம் தண்ணீரின்மீது பிரயாணம் செய்கிருேம்'' என்ருன்.

''இப்பொழுதுதான் நீ உன் சுயநிலைக்கு வந்திருக்கிருய்; நாம் இன்னும் பத்து நிமிஷங்களுக்குள் படகை விட்டுக் கரை இறங்கப் போகிருேம்'' என்றேன்.

''அதோ பார், அந்த பலகைமீது உட்கார்ந்திருக்கிருளே ஒல்லியான மாது; என் காதைச் சுட்டானே கருத்த மனிதன், அவனை நினைவிருக்கிறதா? என்னுடைய ஒரு டாலர் அறுபத்து

''முடியாது; உங்கள் விருப்பத்திற்கேற்ப என் பெயரில் எங்காவது அந்த எழுத்தைச் சேர்த்துக்கொள்ளுங்கள்'' என்ருன் மேக்ஸிமஸ்.

''நல்லது! இவன் பெயர் ஜான்; என் பெயர் டாபின்!''

''மகிழ்ச்சி! தெரு முனையில் சந்தித்து என் பெயரைக் கேட்டதுடன் அதை எழுத்துப் பிரித்துக் கூறச் சொன்னீர்களே; அதற்கு என்ன காரணம்...தெரிவிக்க முடியுமா?''

''இரண்டு காரணங்கள் இருக்கின்றன'' என்று டாபின் காரணம் சொல்லத் தொடங்கினன். ''என் கைரேகையை ஒரு எகிப்து தேசத்துப் பெண்மணி பார்த்தாள். அவள் கூறிய வண்ணம் முதலில் கருப்பு நிற ஆண் ஒல்லியான பெண் ஆகியவர்களால் எனக்குத் தொல்லை ஏற்படும் என்பது நடந்தது. என் பணம் பறி போகும் என்ருள்; அவ்விதமே என்னிடமிருந்த ஒரு டாலர் அறுபத்தைந்து சென்ட் பறி போயிற்று.''

மேக்ஸிமஸ் புகை பிடிப்பதை நிறுத்திவிட்டு என்னைப் பார்த்தான். ''நீங்கள் சொல்வதற்கு ஏதாவது இருக்கிறதா? உங்களைப் பார்க்கும்போது இவருடைய நண்பர் என்று தோன்றுகிறது'' என்ருன்.

''ஒரு குதிரை லாடம் மற்ருென்றைப் போலிருக்கிறது; அதேபோல என் நண்பனுடைய கைரேகையைப் பார்த்து ஜோதிடம் சொன்னதற்கும் உங்கள் தோற்றத்திற்கும் ஒற்றுமை இருக்கிறது. அவ்விதம் இல்லாவிட்டால் என் நண்பனுடைய கைரேகை வேறு விதமாக இருக்கவேண்டும்'' என்றேன் நான்.

அந்த வழியாக போலீஸ்காரன் வருவதை வளைந்த மூக்கையுடைய மேக்ஸிமஸ் பார்த்துவிட்டான். உடனே அவன், ''உங்கள் இருவருடன் சற்று நேரம் நல்ல விதமாகப் பொழுதைப் போக்கியதற்கு நன்றி. வந்தனம்; வருகிறேன்'' என்று கூறி வாயில் சுருட்டை வைத்துப் புகைத்துக் கொண்டே தெருவில் வேகமாக நடக்கத் தொடங்கினன்.



ஆனல் டாபினும் நானும் அவனை விடவில்லை; நாங்கள் இருவரும் அவனுடைய இரு பக்கங்களிலும் நடந்து சென்ருேம்.

சிறிது தூரம் சென்றதும் மேக்ஸிமஸ் தொப்பியைப் பின்னுக்குத் தள்ளி விட்டுக்கொண்டு ஆத்திரத்துடன் பேசத் தொடங்கினன். ''என்ன? என்னைப் பின்தொடர்ந்து வருகிறீர்களா? உங்களைச் சந்தித்தது மகிழ்ச்சிகரமானது என்பதில் சந்தேகமே இல்லை. ஆனல் நான் தனியே செல்ல விரும்புகிறேன்; என் வீட்டிற்குப் போகவேண்டும்'' என்ருன்.

''அப்படியே செய்யுங்கள்! நீங்கள் உங்கள் வீட்டிற்குச் செல்லுங்கள்; நான் உங்களுடைய வீட்டின் வாயிலில் உட்கார்ந்திருக்கிறேன். நீங்கள் காலை வெளியே வரும்வரை காத்திருக்கிறேன். கருப்பு நிற ஆண், ஒல்லியான பெண் ஆகியோரால் ஏற்பட்ட தொல்லைகள், பணம் பறி கொடுத்தது ஆகியவை கைரேகை பார்த்தவள் கூறியதனல் ஏற்பட்டதா இல்லையா என்பதை உங்கள் மூலம்தான் அறிய வேண்டும்'' என்ருன் டாபின்.

''இது வேடிக்கையாக இருக்கிறதே'' என்று கூறி மேக்ஸிமஸ் என் பக்கம் திரும்பி, ''இவரை நீங்கள் நல்ல விதமாக வீட்டிற்கு அழைத்துப் போகமாட்டீர்களா?'' என்று கேட்டான்.

''நான் சொல்வதைச் சற்று கவனமாகக் கேளுங்கள்'' என்று அவனிடம் எல்லாவற்றையும் விவரிக்கத் தொடங்கினேன். ''என் நண்பன் நல்ல உணர்வுடனேயே இருக்கிருன். அவன் சாராயம் பருகியிருப்பதால் தவருக நடக்கலாம் என்று நினைக்க முடியும். ஆனல் உண்மை அப்படியில்லை. அவனுக்கு ஜோதிடத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது. அதைக் கூறுகிறேன்'' என்று ஜுஜு சீமாட்டி டாபினுடைய கைரேகையைப் பார்த்துச் சொன்னதைத் தெரிவித்தேன். பிறகு நடந்தவற்றையும் கூறினேன். அதன் பிறகு, ''ஜோதிடம் சொல்பவர்கள்

நியூயார்க் நகரத்திலேயே வளைந்த மூக்கையுடைய உங்களைப் பயன்படுத்திக் கொள்கிருர்கள் என்று நினைக்கிறேன். ஆனுல் டாபினுடைய கைரேகை உங்களையே குறிப்பிடு கிறது என்பதில் சந்தேகமே இல்லை. அதனுல் உங்களிடம் அவன் பரிசோதனையை நடத்தி அதன் பலனை அறியும்வரை அவனுக்கு நான் உதவி செய்தே தீருவேன்'' என்றேன்.

மேக்ஸிமஸ் இதைக் கேட்டதும் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு பலமாகச் சிரிக்கத் தொடங்கினுன். பிறகு என்னையும் டாபினையும் முதுகில் தட்டிக் கொடுத் தான். "நான் உங்களைத் தவருக எண்ணிவிட்டேன். என் மூலம் நன்மை ஏற்படும் என்பதை நான் எப்படி எதிர் பார்க்க முடியும்? ஒன்றுக்கும் உதவாத நிலையிலேயே என்னைக் கண்டீர்கள். அருகாமையில் ஒரு ஓட்டல் இருக்கிறது. அங்கு போய் சிறிது நேரம் ஆனந்தமாகப் பொழுதைப் போக்கலாம்'' என்ருன்.

என்னையும் டாபினையும் அழைத்துக் கொண்டு அருகா மையிலிருந்த ஓட்டலுக்குச் சென்ருன் மேக்ஸிமஸ். மூவரும் உட்கார்ந்ததும் சாராயம் தருவித்தான். சட்டைப் பையி லிருந்து பணத்தை எடுத்து மேஜைமீது வைத்தான். எங்கள் இருவரையும் தன் சகோதரர்களைப்போல அன்புடன் பார்த்தான். எங்களுக்குச் சுருட்டும் கொடுத்தான்.

டாபினுக்கு அதிர்ஷ்டத்தைக் கொண்டு கொடுக்கப் போகும் மேக்ஸிமஸ் பேசத் தொடங்கினுன். "என்னை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டியது முக்கியமல்லவா? வாழ்க்கையில் என்னை எழுத்தாளன் என்று அழைப்பார்கள். வெளிநாடுகளில் நான் இரவு வேளைகளில் சுற்றித் திரிவேன். மனிதர்களின் மனப்போக்கையும் வானுலகத்தின் உண்மை யையும் அறிய முற்படுவேன். நீங்கள் என்னைச் சந்தித்த சமயம் நான் இரவின் பிரதான ஒளியில் மேன்மையடைந்திருக்கும் சாலையைப் பார்த்துச் சிந்தித்துக்கொண்டிருந்தேன். ஒரேயடியாக மாற்றம் ஏற்படுவதில் கவிதையும் கலையும் இருக்கிறது. சந்திரனே சலிப்பைத் தரும் கருத்தற்ற



பாதையில் செல்கிறது. ஆனுல் இதெல்லாம் சொந்தக் கருத்தாகும். இலக்கிய விவகாரத்திலோ எல்லாம் எதிரிடை யானவை. நான் வாழ்க்கையில் கண்ட விசித்திரமான வற்றைப் புத்தகமாக எழுத எண்ணியிருக்கிறேன்.''

"உங்கள் புத்தகத்தில் என்னைக் குறித்தும் எழுது வீர்களா?'' என்று டாபின் கேட்டான்.

"எழுதமாட்டேன். நான் ஒருவனே அனுபவிப்பேன். அச்சடிப்பதைக் கட்டுப்படுத்தக் காலம் பக்குவமடைய வில்லை. நம்பத்தகாததாக இருப்பதைக் காணலாம். மகிழ்ச்சியை நான் ஒருவனே அனுபவிக்க விரும்புகிறேன். அந்த மகிழ்ச்சி என்ற மதுவை நானே பருகப்போகிறேன். ஆனுல் உங்களை நான் வாழ்த்துகிறேன். என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். உண்மையிலேயே உங்களுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டவனுகிறேன்.''

"உங்களுடைய பேச்சு...'' என்று டாபின் பெருமூச்சு விட்டு, மேஜையைக் குத்தினுன். பிறகு, "உங்களுடைய பேச்சு என் பொறுமையைச் சோதிப்பதாக இருக்கிறது. வளைந்த உங்கள் மூக்கின் மூலம் எனக்கு நன்மை ஏற்படும் என்று கூறப்பட்டது. ஆனுல் நீங்களோ பயனற்றவராக இருக்கிறீர்கள். உங்கள் நூல்களைக் குறித்துக் கூறுவது ஒரு ஓட்டையின் வழியாகக் காற்று வீசுவது போலிருக்கிறது. என் கைரேகை பொய் கூறியதாகக் கருதுகிறேன். ஆனுல் கருத்த ஆண், ஒல்லியான பெண்...'' என்ருன்.

"என்ன, தோற்றத்தைக் கண்டு நீங்கள் தவருன கருத்தைக் கொண்டு விட்டீர்களா? என் மூக்கு அதன் போக்கிலேயே ஒன்றைச் செய்யும். மீண்டும் கோப்பை களைச் சாராயத்தால் நிரப்பலாம். தவருன கருத்து கொள்ளக்கூடியவர்களைத் திருத்துவது நல்லது. இல்லா விட்டால் அவர்கள் கெட்டு விடுவார்கள்.''

இலக்கியவாதியான மேக்ஸிமஸ் என்னைப் பொறுத்த வரை நல்லவன். எல்லா வகையிலும் எங்களைக் கௌரவப் படுத்தினுன். ஆனுல் டாபினே கண்கள் சிவக்க மௌன மாகச் சாராயம் பருகிக்கொண்டே இருந்தான்.

நாங்கள் மெள்ள வெளியேறி வந்தோம். அப்போது பன்னிரண்டு மணியாகிவிட்டது. மூவரும் தெருவின் ஒரு பக்கத்தில் நின்றோம். மேக்ஸிமஸ் தன் வீட்டிற்குச் செல்வதாகவும் எங்களையும் அந்தப் பக்கமாக வரும்படியும் சொன்னான். நாங்கள் பக்கத்துத் தெருவிலுள்ள, சுற்றி இரும்புக் கிராதிகளுடன் கூடிய பெரிய கல் வீட்டின் அருகில் வந்து சேர்ந்தோம். மேக்ஸிமஸ் அதன் பக்கத்து வீட்டின் முன்னால் சென்று நின்று மாடியிலுள்ள ஜன்னலைப் பார்த்தான். அங்கு ஒரே இருட்டாக இருந்தது.

"இதுதான் இந்த ஏழையின் இல்லம். மாடி ஜன்னலின் குறிப்பிலிருந்து என் மனைவி தூங்கிவிட்டாள் என்று அறிகிறேன். அதனால் உங்களைச் சிறிது கௌரவிக்க விரும்புகிறேன். வீட்டின் அடிப்பாகத்தில் சமையலறையும் உணவு உண்ணும் கூடமும் இருக்கிறது. அங்கு உணவுப் பொருள்களும் சாராயமும் இருக்கலாம். சாப்பிடவும், சாராயம் பருகவும் நீங்கள் வருவதை முழுமனதுடன் வரவேற்கிறேன். உங்களுக்கு ஒரு மாற்றத்தை ஏற்படுத்துவது என் கடமையாகும்" என்றான் மேக்ஸிமஸ்.

மேலும் சாப்பிடவோ, சாராயம் பருகவோ எங்கள் வயிற்றில் இடமே இல்லை. ஆனால் டாபினோ அந்த வீட்டில் உணவு உண்பதாலும் சாராயம் பருகுவதாலும் தன் கைரேகை வாக்களித்த அதிர்ஷ்டம் கிட்டலாம் என்று எண்ணினான்.

"மெள்ளப் படிகளில் இறங்குங்கள்" என்றான் வளைந்த மூக்கையுடைய மேக்ஸிமஸ். பிறகு, "நான் மேலே உள்ள கதவின் வழியாக உள்ளே போய் உங்களை உள்ளே அழைக்கிறேன். சமையலறையில் புதிதாக வந்த வேலைக்காரப் பெண் ஒருத்தி இருக்கிறாள். அவளிடம் நீங்கள் இங்கிருந்து போவதற்குள் உங்களுக்கு நல்ல காபியாகத் தயாரிக்கச் சொல்கிறேன். சிறந்த முறையில் காபி தயாரிக்கும் கெடி மோஹனர் இந்த ஊருக்கு வந்து மூன்று மாதங்களே ஆகின்றன. வாருங்கள், அவளைக் கீழே அனுப்புகிறேன்" என்றான்.

# 10. மனமிருந்தால்...!

மார்ச் மாதத்தில் ஒரு நாள். வேண்டாம், வேண்டாம். நீங்கள் கதை எழுத விரும்பினால் இவ்விதம் கதை ஆரம்பிக்கவே வேண்டாம். இதைவிட மோசமான ஆரம்பமே இருக்க முடியாது. கற்பனையே இல்லாதது, சலிப்பையும், வெறுப்பையும் அளிக்கக்கூடியது. பல குழப்பங்களை ஏற்படுத்தக் கூடியது. ஆனால் இந்தச் சம்பவத்திற்கு இவ்விதத் தொடக்கம் அனுமதிக்கப்படுகிறது. இதற்கு முக்கிய காரணம் இருக்கிறது. பின்னால் வரும் பகுதிகளில் வாசகர்கள் நினைத்துப் பார்க்கவும் முடியாத வகையில் அளவுக்கு மீறி விவரமாகக் கூறப் போகிறேன்.

சாராஹ் தனது விலைப்பட்டியலைக் கண்டு அழுது கொண்டிருந்தாள்.

நியூயார்க் நகரத்துப் பெண் ஒருத்தி பலகார வகைகளின் பட்டியலைப் பார்த்துக் கண்ணீர் பெருக்குகிறாள் என்றால் அதைக் குறித்துச் சிறிது சிந்தித்துப் பாருங்கள்.

அவளுக்கு விருப்பமான பலகாரம் தீர்ந்துவிட்டது. அல்லது உபவாச காலத்தில் ஐஸ் கிரீம் உண்பதாகத் தீர்மானித்திருந்தாள்; அல்லது அவள் வெங்காயம் கொண்டு வரும்படி கட்டளையிட்டிருந்தாள்; அல்லது

அப்போதுதான் அவள் நாடகக் கொட்டகையிலிருந்து வந்திருக்கிறுள். நீங்கள் எவ்விதம் வேண்டுமானுலும் அவள் அழுவதற்கான காரணத்தைக் குறித்து எண்ணலாம். ஆனல் உங்கள் எண்ணம் முழுவதும் தவறு என்று கூறுகிறேன். கதை ஆரம்பமாகிவிட்டால் நீங்கள் இதை ஒப்புக்கொண்டு விடுவீர்கள்.

"உலகம் ஒரு சிப்பி; அதை என் வாளால் திறந்தேன். அதில் நான் நினைத்ததற்கும் மேலாக எனக்குப் பயன் கிடைத்தது" என்று ஒரு சீமான் அறிவித்தான். ஒரு சிப்பியை வாளைக் கொண்டு திறப்பது அவ்வளவு கடினமான காரியமல்ல. ஆனல் இந்த உலகத்திற்குரிய ஒன்றை யாராவது டைப் அடிக்கும் யந்திரத்தின் மூலம் திறந்ததைப் பார்த்திருக்கிறீர்களா?

சாராஹ் நன்ருக டைப் அடிப்பாள். அவளுக்குச் சுருக்கெழுத்து தெரியாது. அதனல் அவளுக்குக் காரியாலயங்களில் பணி புரியும் சந்தர்ப்பம் இல்லாமல் போய் விட்டது. அவள் எந்த ஒரு குறிப்பிட்ட காரியாலயம் என்று வேலை செய்யாமல் தனிப்பட்ட முறையில் பலருக்கு டைப் அடித்துக் கொடுத்து வந்தாள்.

சாராஹ்வின் நேர்த்தியானதும், எல்லாவற்றிற்கும் சிகரம் போன்ற போராட்டமும் ஷெலன்பர்க் ஓட்டலின் பலகார வகைகளின் விலைப்பட்டியலை டைப் அடித்துக் கொடுப்பதுதான். சாராஹ் குடியிருந்து வரும் வீட்டிற்குப் பக்கத்திலேயேதான் அந்த ஷெலன்பர்க் ஓட்டல் இருக்கிறது. ஒரு நாள் மாலை அந்த ஓட்டலில் சாராஹ் சாப்பிட்டாள். பிறகு மேஜைமீது வைக்கப்பட்டிருந்த பலகார விலைப்பட்டியலைக் கையில் எடுத்துக்கொண்டு சென்ருள். அந்த விலைப்பட்டியல் ஆங்கிலமா, ஜெர்மன் மொழியா, என்ன பலகாரம், அதன் விலை என்ன என்று புரியாத வகையிலும் தாறுமாருகவும் கையால் எழுதப்பட்டிருந்தது.

மறுநாள் சாராஹ் ஓட்டலின் சொந்தக்காரனிடம் நேர்த்தியாக டைப் அடிக்கப்பட்ட பலகார விலைப்பட்டியல் அட்டை ஒன்றைக் கொண்டு காட்டினுள். அதன் தலைப்பில், "இன்றைய பலகார வகைகள்"; முடிவில், "மேல் அங்கி, குடை ஆகியவற்றிற்கு நாங்கள் பொறுப்பாளி அல்ல" என்று குறிப்பிட்டிருந்தாள்.

ஓட்டல் சொந்தக்காரன் ஷெலன்பர்க் அப்படியே பிரமித்துப் போனுன். அந்த இடத்திலேயே அவன் நாட்டின் உண்மையான குடிமகனுக மாறினுன். சாராஹ் அவனிடம் விடை பெற்றுப் போவதற்குமுன் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டாள். காலை, மதியம், மாலை ஆக தினமும் மூன்று வேளைக்கும் இருபத்தியோரு மேஜைகளிலும் வைக்க மாறுதல்களுக்கேற்ப பலகார வகைகளின் விலைப்பட்டியலை சாராஹ் டைப் அடித்துக் கொடுக்கவேண்டும். அதற்குப் பதிலாக சாராஹ் இருக்குமிடத்திற்கு அவளுக்காக மூன்று வேளையும் பலகாரம் சாப்பாடு முதலியவற்றை வேலைக்காரன் மூலம் அனுப்பிவிட வேண்டும். ஒவ்வொரு நாள் மாலையிலும் சாராஹ் வந்து ஓட்டல்காரனிடம் மறுநாள் பலகார வகைகளைக் கேட்டுக் குறித்துக்கொண்டு செல்ல வேண்டும். இதுதான் அவர்களுக்கிடையே ஏற்பட்ட ஒப்பந்தமாகும்.

இந்த ஒப்பந்தத்தால் இருவருக்குமே திருப்தி ஏற்பட்டு
வந்தது. இப்பொழுது ஓட்டலுக்கு வருபவர்களுக்கு
என்ன பலகாரம் என்பது நன்கு தெரியலாயிற்று. காலநிலை
பனி, மழை ஆக எந்தக் காலமாக இருந்தபோதிலு
சாப்பாடும் பலகாரங்களும் சாராஹ் பெற்று வந்தாள்.

தினக் குறிப்புப் புத்தகம் வேனிற் காலம் வ
போகிறது என்பதைத் தெரிவித்தது. வேனிற்காலம் அ
காலத்தில் வருகிறது. ஜனவரி மாதத்து உரை பனி தெ
களில் விடாப்பிடியாக இன்னமும் பரவியிருந்தது. டிசப்
மாதத்துப் பாடல்களையே இன்னமும் இசைக் கருவி
வாசித்து வந்தன. ஈஸ்டர் பண்டிகைக்கான ஆடைகளை வ

ஆண்கள் முப்பது நாள் குறிப்புக்களைத் தயாரித்தார்கள். இந்த சம்பவங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது நகரம் இன்னமும் பனிக் காலத்தின் பிடியிலேயே இருக்கிறது என்பதை அறியலாம்.

ஒரு நாள் மாலை சாராஹ் தன் விசாலமான கூடமுள்ள படுக்கை அறையில் குளிரால் நடுங்கினாள். ஷெலன்பர்க் ஓட்டலின் பலகார வகை விலைப் பட்டியலைப் படிப்பதைத் தவிர அவளுக்கு வேறு வேலை இருக்கவில்லை. அவள் ஒரு பழைய நாற்காலியில் உட்கார்ந்து ஜன்னல் வழியே வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள். சுவரில் மாட்டப் பட்டிருந்த நாள் குறிப்பு, "சாராஹ், இதோ வேனிற்காலம். என்னைப் பார். என்னுடைய எண்கள் இதை உனக்குப் புலப்படுத்தும். உன் உருவம் மிகவும் அழகானது. வெகு நேர்த்தியான முகத் தோற்றத்தைப் பெற்றிருக்கிறாய். அது வேனிற் காலத்தைப் போன்றது. நீ ஏன் வருத்தந்தோய்ந்த முகத்துடன் வெளியே பார்த்துக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டது.

வீட்டின் பின்புறத்திலேயே சாராஹ்வின் அறையிருந்தது. ஜன்னலின் வழியாகப் பார்க்கும்போது கல் வீட்டின் இடை வழியே அடுத்த தெருவிலுள்ள பெட்டி தயாரிக்கும் தொழிற்சாலை தெரிந்தது. ஆனால் வீட்டின் சுவர்கள் வெள்ளை அடித்ததுபோல் உறைபனியால் மூடப் பட்டிருந்தது. சாராஹ் ஒரு குறுகலான தெருவைப் பார்த்தாள். செர்ரி, லெம் ஆகிய மரங்கள் அந்தக் குறுகிய தெருவை தம் இலைகளால் மறைத்துக் கொண்டிருந்தன.

வேனிற் காலம் வருவதைக் கண்கூடாகவும் பார்க்கலாம். காதாலும் கேட்டு அறியலாம். மரங்கள் இலைகளை உதிர்த்துத் துளிர் விடத் தொடங்கும்; மலர்கள் மலர ஆரம்பிக்கும். பறவைகள் இனிமையாகப் பாட முற்படும். வெளியேறும் பனிக்காலமும் வேனிற்கால மங்கையை வரவேற்கத் தயாராக இருக்கும். ஆனால் பழமையான பூமியின் விருப்பமான உறவினன் நேராக வந்து அவற்றினிடம் தன்



புதிய மனைவியின் செய்தியைக் கூறுவான். "நீங்களாக நினைக்காதவரை மாற்றாந்தாயின் குழந்தைகளே இல்லை."

கடந்த வேனிற்காலத்தில் சாராஹ் தன் கிராமத்திற்குச் சென்றாள். அங்கு ஒரு குடியானவனைக் காதலித்தாள்.

(நீங்கள் கதை எழுதும்போது பின்னோக்கிச் செல்லாதீர்கள். அது மோசமான கலை. உற்சாகத்தைக் குறைத்துவிடும். முன்னோக்கியே செல்ல வேண்டும்.)

சன்னி புருக் பண்ணையில் சாராஹ் இரண்டு வாரம் தங்கினாள். அங்கு பிராங்கிலின் என்ற விவசாயினுடைய மகன் வால்டரைக் காதலிக்கக் கற்றுக் கொண்டாள். விவசாயிகள் காதலிப்பார்கள், திருமணம் செய்து கொள்வார்கள். பிறகு குறுகிய காலத்திற்குள் கைவிட்டு விடுவார்கள். ஆனால் வாலிப வால்டர் நவீன கால விவசாயி. மாட்டுக் கொட்டடியிலேயே அவனுக்கு டெலிபோன் வசதி இருந்தது. அடுத்த ஆண்டு கானடா தேசத்தில் கோதுமை எவ்விதம் பயிராகும், ஒரு குறிப்பிட்ட நாளில் உருளைக் கிழங்கைப் பயிர் செய்யத் தொடங்கினால் என்ன பலன் கிடைக்கும் என்பதை அவன் தவறாமல் கணக்கிட்டுச் சொல்லுவான்.

மலர்கள் பூத்துக் குலுங்கும் மரங்கள் நிறைந்த ஒரு தெருவிலேயே வால்டர் அவளைச் சுற்றித் திரிந்தான். அவளுடைய மனதையும் கவர்ந்தான். இருவரும் ஒன்றாகச் சேர்ந்து உட்கார்ந்ததும் சாராஹ்வின் கூந்தலைப்பற்றிப் புகழ்ந்து பேசத் தொடங்கினர். சாராஹ்வினுடைய அழகை வால்டர் பாராட்டினான். அவர்கள் உட்கார்ந்திருந்த மரத்தின் அடியில் ஒரு கல்லை நட்டாள் சாராஹ். பிறகு தலையிலிருந்த ஓலைத் தொப்பியைக் கையில் எடுத்து ஆட்டிக் கொண்டே வீட்டிற்குத் திரும்பினாள்.

வேனிற்காலம் ஆரம்பமாகும் சமயமே இருவரும் மணந்துகொள்ள வேண்டும் என்று வால்டர் கூறினான். சாராஹும் தன் டைப் அடிக்கும் யந்திரத்தை வேலை வாங்க நகரத்திற்குத் திரும்பினாள்,

அச்சமயம் வாயிலிலுள்ள மணி அசைக்கப்பட்டது. வீட்டுக்காரி யாருக்கோ பதில் சொன்னாள். சாராஹ் காது கொடுத்துக் கேட்டாள்.

கம்பீரமான குரல் ஒன்று கேட்டது. சாராஹ் தன்னையே மறந்தாள்; கையிலிருந்த புத்தகத்தைக் கீழே தவற விட்டாள். அறையின் கதவைத் திறக்க ஓடினாள்.

நீங்கள் இதற்கான காரணத்தை யூகித்து உணர்ந்திருக்கலாம். சாராஹ் கதவைத் திறந்துகொண்டு மாடிப் படிகளுக்கு வந்தாள். இரண்டு மூன்று என்று படிகளில் தாவி இறங்கினாள்.

வீட்டின் முன் கூடத்தில் நின்றுகொண்டிருந்த வாலிபன் வால்டரைப் பார்த்து, ''நீங்கள் ஏன் எனக்குக் கடிதம் எழுதவில்லை?'' என்று கேட்டாள்.

''நியூயார்க் அழகான பெரிய நகரம். ஒரு வாரத்திற்கு முன் நான் இங்கு வந்தேன். உன்னுடைய பழைய முகவரிக்குச் சென்றேன். அன்று வியாழக்கிழமை என்று நினைக்கிறேன். வெள்ளிக்கிழமை துரதிர்ஷ்டம் பிடித்த நாளாகி விட்டது. ஆனால் அவை போலீஸ் உதவியுடன் உன்னைத் தேடத் தடுத்துவிடவில்லை'' என்றான் வால்டர்.

''நான் வீடு மாறியதை உங்களுக்கு எழுதியிருந்தேனே?''

''அந்தக் கடிதம் எனக்குக் கிடைக்கவில்லை.''

''அப்படியானால் நான் வசிக்கும் இடத்தை எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?''

வேனிற் காலத்தைப்போல் வாலிப குடியானவன் புன்முறுவல் செய்தான்.

''சற்றுமுன் பக்கத்து ஓட்டலுக்குச் சென்றேன். இந்தக் காலத்தில் எனக்குச் சில காய்கறிகளின்மீது விருப்பம் ஏற்பட்டது. நான் நன்றாகவும், தெளிவாகவும் டைப் அடிக்கப்பட்டிருந்த பலகார விலைப் பட்டியலை உன்னிப்பாகக் கவனித்தேன், காய்கறிகளின் அடியில் என் பார்வை



சென்றதும் நான் நேராக ஓட்டல் சொந்தக்காரன் இருக்குமிடத்திற்கு ஓடினேன். அவன் உன்னுடைய முகவரியைக் கொடுத்தான்.''

''காய்கறி வகைகளைப் பற்றி எனக்கு நன்றாக நினைவிருக்கிறது.''

''உன் டைப் அடிக்கும் யந்திரத்தில் 'வா' என்ற எழுத்து தவறாக விழுந்துவிட்டது போலிருக்கிறது.''

''அப்படி ஒன்றுமில்லையே'' என்று திடமாகச் சொன்னாள் சாராஹ்.

வால்டர் தன் சட்டைப் பையிலிருந்து பலகார விலைப் பட்டியல் அட்டையை எடுத்தான். எந்தப் பகுதியில் தவறாக டைப் அடிக்கப்பட்டதோ அதைக் காட்டினான்.

அந்த அட்டையைப் பார்த்ததுமே அன்று மாலை அவள் டைப் அடித்தது என்பதை உணர்ந்தாள் சாராஹ். அட்டையின் மேல் பக்கத்தில் இன்னமும் அவள் உதிர்த்த கண்ணீர் உலராமல் இருந்தது. ஆனால் எந்த வரிகளுக்கிடையே தவறு நடந்திருக்கிறதோ அதற்கு அவர்களுடைய மகிழ்ச்சிகரமான கனவே காரணமாகும். அந்தக் கனவின் நினைவிலேயே விரல்களும் வேலை செய்திருக்கின்றன.

காய்கறிகளுக்கிடையே டைப் அடிக்கப்பட்டிருந்தது இதுதான்:

''அன்புமிக்க வால்டர். வேக வைத்த முட்டை.''

# 11. வசிய மருந்து

நீல விளக்கு மருந்துக் கடை நகரத்தின் கீழ்பாகத்தில் பவரித் தெருவுக்கும் முதல் சாலேக்கும் இடையே இருக்கிறது. இரண்டு தெருக்களின் மத்தியில் உள்ள தூரம் அதிகமாக இல்லே. நீல விளக்கு அடையாளம் வாசனேப் பொருளோ, ஐஸ்கிரீமுக்கு உபயோகிக்கும் ஒருவகை ரசாயனமோ விற்பதைக் காட்டுவ்தாக எண்ண வேண்டாம். நீங்கள் வலியைப் போக்கும் மருந்தைக் கேட்டால் அங்கு உங்களுக்குக் கட்டாயம் இனிப்புப் பண்டத்தைக் கொடுக்க மாட்டார்கள்.

நீல நிறமானது வேலேயை எளிதாக்கக்கூடியது. பல மருந்து வகைகளே அது பதனப்படுத்துகிறது. தற்போது மாத்திரைகள் அதற்கான பலகைகளில் வைத்துத் தயாரிக்கப்படுகின்றன. பிறகு கைபடாமல் புட்டிகளில் நிரப்பி மூடியிட்டு அட்டைப் பெட்டியில் வைத்து அழகாகக் கொடுக்கிருர்கள். மருந்துக் கடை தெருவின் ஒரு ஓரத்தில் இருந்தது. மேலும் அது விளேயாட்டாக ஓடி ஆடித் திரியும் குழந்தைகளுக்கு இருமல் மருந்து, மற்றும் பல நோய்களுக்கான மருந்துகளேக் கொடுக்கத் தயாராக இருப்பதுபோல் காணப்பட்டது.

நீல விளக்கு மருந்துக் கடையில் ஐகி என்பவன் இரவு நேரங்களில் மருந்து கலந்து கொடுப்பவனுகவும், வாடிக்கைக்



காரர்களுக்கு நண்பனுகவும் இருந்து வந்தான். மருந்து கலந்து கொடுப்பவன் வாடிக்கைக்காரர்களுக்குப் பல வகைகளில் உதவி புரியக் கூடியவர்கள். அவர்களுடைய ஆலோசனேகளும் தடையின்றி ஏற்றுக் கொள்ளப்படும். அதனுல் ஐகியின் அனுபவத்தையும் ஆலோசனேகளேயும் அனேவரும் ஏற்றுக்கொண்டு வந்தார்கள்.

ரிடிலின் மனேவி நடத்தும் ஓட்டலில் ஐகி காலே ஆகாரம் சாப்பிடுவான். அந்த ஓட்டல் சமீபத்திலிலேயே இருந்தது மேலும் ரிடிலுக்கு ரோஸி என்ற மகள் இருந்தாள். அவளே ஐகி நேசித்தான். அவளும் ஐகியின் சிந்தனே பூராவையும் கவர்ந்துகொண்டாள். அவள் எல்லா வகையிலும் பரிசுத்தமானவள். ஆனுல் ஐகியோ மந்த புத்திக்காரன். அவனுடைய எண்ணம் ஈடேருமலே இருந்தது. இதற்கு முக்கியமாக அவனுடைய பயத்தையும் பிற்போக்கையுமே சொல்ல வேண்டும். மருந்து கலக்குமிடத்திலோ அவனேப்போன்ற சிறந்த அறிவாளியும் சுருசுருப்பானவனும் இருக்கவே மாட்டான் என்று காணப்படுவான். அங்கு அவன் வைத்தது தான் சட்டமாகவும் இருந்து வரும். அவனும் அடக்க முடியாத துணிவுடையவனேப்போல் நடந்து கொள்வான். ஆனுல் மருந்துக் கடையைவிட்டு வெளியே வந்துவிட்டாலோ அவனேப்போன்ற பலவீனமானவனே, பயந்தாங்கொள்ளியை, மந்த புத்திக்காரனேப் பார்க்கவே முடியாது.

மெக்கோவன்என்பவன் யுவதி ரோஸியின் புன்முறுவலுக்காக ஏங்கிக் கொண்டிருப்பவன். ஆனுல் அவனும் ஐகியைப் போலவே துணிவற்றவன்; தூர நின்றே காதல் கீதம் இசைக்கக்கூடியவன். அதே சமயம் அவன் ஐகியின் வாடிக்கைக்காரர்களில் ஒருவன்; நெருங்கிய நண்பன். அடிக்கடி ஏதாவது மருந்து வாங்க அவன் நீல விளக்கு மருந்துக் கடைக்கு வருவான்.

ஒரு நாள் மாலே மருந்துக் கடைக்கு வந்து மௌனமாக ஒரு பலகையில் உட்கார்ந்து கொண்டான் மெக்கோவன். அவனுடைய முகம் வாடியிருந்தது.

ஐகி ஏதோ ஒரு மருந்தைப் பொடி செய்துகொண்டு அவன் எதிரே உட்கார்ந்திருந்தான். மெக்கோவன் அவனைப் பார்த்து, "ஐகி, நீ உன் வேலையில் கவனமாக இருக்கிறாய். இது என்னுடைய வழியை நீ பற்றிக்கொண்டதுபோலக் காணப்படுகிறது" என்றான்.

ஐகி அவனை ஏற இறங்கப் பார்த்தான். மெக்கோவின் தோற்றத்திலிருந்து அவனால் எதையும் அறிந்துகொள்ள இயலவில்லை. பிறகு, "எங்கே உன் சட்டையைக் கழட்டு பார்க்கலாம். உன்னுடைய விலாப்புறம் கத்தியால் குத்தப் பட்டுள்ளது போலத் தோன்றுகிறது. அந்தப் பக்கம் போகாதே. அவர்கள் எதையும் செய்யத் துணிந்தவர்கள் என்று பலமுறை கூறியிருக்கிறேன்" என்றான்.

மெக்கோவன் புன்முறுவல் செய்தான். "அவர்கள் இல்லை. வேறு எவரும் குத்தவில்லை. நீ சரியான இடத்தைக் கண்டுபிடித்தாய். விலாவுக்கு அருகில் காயம் ஏற்பட்டிருக்கிறது. ஐகி, இன்றிரவு நானும் ரோஸியும் இங்கிருந்து தப்பிச் சென்று திருமணம் செய்துகொள்ளப் போகிறோம். என்ன சொல்கிறாய்?" என்று கேட்டான்.

ஐகியின் இடது கை விரல்கள் கலவத்தைக் கெட்டியாகப் பற்றிக்கொண்டன. அதற்குள் மெக்கோவனுடைய புன்முறுவல் மறைந்தது. அதில் சோகம் குடிகொண்டது.

"குறிப்பிட்ட நேரம்வரை அவள் சொன்ன சொல்லை மாற்றாமலிருக்க வேண்டும். இரண்டு வாரங்களாக நாங்கள் திருமணத்திற்காக சர்ச்சை செய்துகொண்டு வருகிறோம். காலையில் ஒன்று சொல்லுவாள்; மாலையே அதை மறுப்பாள். ஆனால் கடந்த இரண்டு நாட்களாக ரோஸி ஒரே பிடியாக இருக்கிறாள். பேச்சை மாற்றவே இல்லை. இன்றிரவு தப்பிச் சென்று திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்று உறுதியாக இருக்கிறாள். ஆனால் தப்பிச் செல்வதற்காகக் குறிப்பிடப்பட்ட நேரத்திற்கு இன்னமும் ஐந்து மணி இருக்கிறது. அதுவரை அவள் சொன்ன சொல்லிலிருந்து மாறாமல் இருப்பாளா?" என்றான் மெக்கோவன்.



"உனக்கு மருந்தா வேண்டும்?" என்று கேட்டான் ஐகி.

மெக்கோவன் அமைதி இழந்தவனைப்போல் காணப்பட்டான். அவனுடைய நிலைமை இயற்கைக்கு மாறாக இருந்தது. அவன் முன்னமேயே ஒரு மருந்தை வாங்கி வைத்திருந்தான். அதனால் அவன், "சந்தேகத்திற்கு இடமானதை இன்றிரவு நான் கையாள முடியாது. ஒரு மருந்து வாங்கி வந்திருக்கிறேன் இது ரோஸி மீண்டும் தன் மனதை மாற்றிக் கொள்ளாதவரை பயன்படும்" என்றான்.

"அப்படியானால் நான் செய்ய என்ன இருக்கிறது?"

"ரோஸியின் தகப்பனார் என்னை விரும்பவில்லை. கடந்த ஒரு வாரமாக என்னுடன் ரோஸியை எங்கும் வெளியில் அனுப்புவதில்லை. இவ்விதம் இல்லாவிட்டால் வெகுகாலத்திற்கு முன்பே காரியங்கள் முடிந்திருக்கலாம். நான் வாரத்திற்கு இருபது டாலர் சம்பாதிக்கிறேன். என்னைப்போன்ற ஒருவனுடன் ஓடி வந்துவிட ரோஸி தயங்கமாட்டாள்."

"நான் ஒரு முக்கியமான மருந்து தயாரித்தாகவேண்டும். அதை வாங்கிப் போக விரைவில் ஒருவன் வருவான்."

"ஐகி...ஒருவன் நேசிக்கும் பெண் அவனை நேசிக்கும்படியாகச் செய்ய ஏதும் மருந்து இல்லையா?"

ஐகியின் உதடுகள் மீசைக்கிடையே வளைந்தன. ஆனால் அவன் பதில் சொல்வதற்குள் மெக்கோவன் மீண்டும் பேசத் தொடங்கினான்:

"ஒரு சமயம் டிம் மருந்துக் கடைக்காரன் ஒருவனிடம் மருந்து வாங்கி வந்தானாம். அதை அவன் விரும்பும் பெண்ணிற்குச் சோடாத் தண்ணீரில் போட்டுக் கொடுத்தான். மறுகணமே அந்தப் பெண் அவன்மீது பித்துப் பிடித்தவளைப் போலாகிவிட்டாளாம். இரண்டு வாரங்களுக்குள் அவர்கள் திருமணம் செய்துகொண்டு விட்டனராம்."

மெக்கோவன் எளிமையானவன்; திடகாத்திரமான உடல் கட்டுள்ளவன். இதயத்தின் தந்திகளை மீட்ட ஐகியை

என்று கண் விழித்து எதிர்பார்த்திருந்தான். ஆனால் ஒன்றும் கிடைக்கவில்லை.

மறுநாள் எட்டு மணிக்குப் பகல் வேலைக்காரன் வந்தான். ஐகியும் தன் கடமையை முடித்துக்கொண்டு விவரத்தை அறிய ரிடிலின் வீட்டை நோக்கி வேகமாகப் புறப்பட்டான். ஆனால் அவன் கடையைவிட்டு வெளியே வந்ததும் அவ்வழியே சென்ற மோட்டாரிலிருந்து மெக்கோவன் கீழே குதித்தான். அவன் ஐகியின் கையைக் குலுக்கிப் புன்முறுவல் செய்தான். அது வெற்றிப் புன்னகையாகக் காணப்பட்டது.

"குறிப்பிட்ட நேரத்திற்கு ரோஸி புகைபோக்கி வழியாக வெளியேறி வந்தாள். ஒன்பதரை மணிக்கெல்லாம் நாங்கள் எங்கள் இடத்திற்குப் போய்ச் சேர்ந்தோம். இன்று காலை அவள் முட்டையில் பலகாரம் தயாரித்துக் கொடுத்தாள். நான் எவ்வளவு அதிர்ஷ்டக்காரன்! உனக்கு ஓய்வு இருக்கும் நாளில் எங்கள் இல்லத்திற்கு வா; நாம் மூவருமாக விருந்துண்ணலாம். வாராவதிக்கு அருகில் ஒரு முக்கியமான வேலை இருக்கிறது. அதற்காகச் சென்று கொண்டிருக்கிறேன்" என்றான்.

"நான் கொடுத்த மருந்து..." என்றான் ஐகி.

மெக்கோவன் குறுக்கிட்டு, "ஓ! நீ கொடுத்ததா? அதை இவ்விதம் பயன்படுத்தினேன். நேற்றிரவு ரிடிலுடன் சாப்பிட உட்கார்ந்தேன். ரோஸியைப் பார்த்து எனக்குள்ளாகவே, 'பெண்ணை வேண்டுமானால் நீ அழைத்துப் போ! ஆனால் அவளைப்போல் சொன்ன சொல்லை மாற்றாதே' என்று சொல்லிக்கொண்டேன். நீ கொடுத்த மருந்துப் பொட்டலம் என் சட்டைப் பையிலேயே இருந்தது; பிறகு என் பார்வை அங்கு இருந்த மற்றொருவரின்மீது திரும்பியது. எதிர்காலத்தில் மருமகனாக வரப் போகிறவனிடம் அவனுக்கு அன்பு ஏற்பட வேண்டும் என்று கருதினேன். அதற்காக ரிடில் பருகப் போகும் காபியில் நீ கொடுத்த மருந்தைக் கலந்துவிடச் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தேன். அப்படியே செய்தும் விட்டேன்" என்றான்.

## 12. கடிகாரமும் இளவரசனும்

பூங்காவினுள் இளவரசன் மைக்கேல் தனக்கு விருப்பமான பலகையில் உட்கார்ந்து கொண்டிருந்தான். செப்டம்பர் மாதத்துக் குளுமையான இரவு அவனுடைய வாழ்க்கைக்கு அபூர்வமான உணர்ச்சியூட்டும் மருந்தாக இருந்தது. பூங்காவிலிருந்த எல்லா பலகைகளிலும் மக்கள் உட்கார்ந்திருக்கவில்லை. பூங்காவிலேயே காலங் கடத்துபவர்கள் தங்கள் சோம்பேறித்தனத்துடன் வேனிற் காலத்தின் பிடியில் சிக்கப் போவதை அறிந்து வீட்டிற்கு ஓடிச் செல்லத் தயாராக இருந்தார்கள். கிழக்குப் பக்க வீடுகளுக்கு மேலே வானத்தில் சந்திரன் தோன்றினான். பூங்காவின் மத்தியிலுள்ள நேர்த்தியான குளத்தைச் சுற்றிக் குழந்தைகள் ஆடிப் பாடி மகிழ்ந்து விளையாடிக்கொண்டிருந்தன. இருட்டாக இருந்த இடங்களில் பூச்சிகளும், பாம்பு போன்றவனவும் மனிதர்களின் பார்வையில் தென்படாமல் ஓடித் திரிந்தன. பூங்காவை ஒட்டிய தெருவில் யாரோ வாசித்த ஹார்மோனியம், புல்லாங்குழல் ஆகியவற்றின் இனிய நாதம் மேலே எழுந்து மறைந்தது. பூங்காவைச் சுற்றி வண்டிகள் வந்து நின்றன. மீண்டும் புறப்பட்டுச் சென்றன. அருகாமையிலிருந்த இருப்புப் பாதையில் செல்லும் ரயில்கள் சேர வேண்டிய இடத்தை

நோக்கி புலி, சிங்கம்போல் உருமிக்கொண்டே சென்றன! மரங்களுக்குமேல் பொதுக் கட்டிடத்தின்மீது பொருத்தப் பட்ட கடிகாரம் அதனுள் எரிந்துகொண்டிருந்த விளக் கொளியில் பிரகாசமாகக் காணப்பட்டது.

இளவரசன் மைக்கேலின் பூட்ஸுகள் சிறந்த சக்கிலி யின் அறிவுக்குப் புலப்படாத வகையில் சிதைந்து போயிருந் தது. கந்தைத் துணியுடுத்திய அவன் அவனுடைய ஆடை களுடன் சமரசம் பேச மறுத்திருக்கலாம். அவனுடைய முகத்தில் இரண்டு வாரப் புழுதி பல வர்ணங்களில் காணப் பட்டது. அது கூட்டாகச் சேர்ந்து பாடுபவர்கள் பலதரப் பட்ட தங்கள் குரல்களை ஒன்று சேர்க்க முயல்வதுபோலிருந் தது. அவனுடைய ஆடை, தொப்பி ஆகியவை போல மோச மான வகையில் அவற்றை அணிந்துகொள்ளப் போதுமான பண வசதி உள்ளவன் எவனும் உலகத்தில் இருக்கவே மாட்டான்.

இளவரசன் மைக்கேல் தனது பிரத்யேகமான பலகையில் உட்கார்ந்து புன்முறுவல் செய்துகொண்டிருந்தான். எதிரே யுள்ள ஜன்னலில் விளக்கு எரியும் பெரிய மாடி வீட்டையும் அருகாமையிலுள்ள மற்ற வீடுகளையும் நினைத்தால் வாங்கு வதற்குப் போதுமான பணம் இருக்கிறது என்று மனதிற்குள் எண்ணி அந்த வகையிலேயே சிந்தனையைத் திருப்பினான்.

இந்தப் புகழ்பெற்ற மான்ஹாத்தன் நகரத்தினுள் இளவரசன் மைக்கேல் தன்னுடைய பதவியுடன் எந்த இடத்திற்குச் சென்றாலும், பொன்னும் பொருளும், நில புலன்களும் போதுமான அளவு பெறலாம்! அவன் தன் ஆட்சிப் பொறுப்பை மீண்டும் பெற மேஜை அருகில் உட்காரலாம். எங்கு அவன் எதை எடுத்துக்கொள்ள விரும்பினாலும் அப்படியே செய்யலாம். கௌரவம், பட்டம், பதவி, புகழ், வாழ்க்கையின் இனிமையான அனைத்தும் அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தன. ஆனால் அவனுடைய விருப்பமோ கந்தல் ஆடையுடன் பூங்காவிலுள்ள பலகையில் உட்கார்ந்திருப்பதுதான்.



வாழ்க்கை மரத்தின் கனியை அவன் சுவைத்தாகிவிட்டது. அது கசப்பாக இருப்பதை உணர்ந்து ஏடன் கானகத்தை விட்டு வெளியேறி மன மாற்றத்திற்காகப் படபடக்கும் உள்ளத்தையுடைய உலகத்திற்கு வந்திருந்தான்.

இந்த எண்ணங்கள் இளவரசன் மைக்கேலின் சிந்தனை யில் வட்டமிட்டன! உடனே பலவர்ண தாடி மீசையின் இடையேயுள்ள அவனுடைய உதடுகளில் புன்முறுவல் தவழ்ந்தது. மிகவும் ஏழையான பிச்சைக்காரனைப்போன்று பூங்காவில் சுற்றித் திரியும் அவன் மனித சமூகத்தைக் குறித்து ஆராய்வதை விரும்பினான். அவனுடைய செல்வம், பதவி, வாழ்க்கை இனிமையாக இருக்கக் கொடுக்கப்பட்ட அனைத்தையும்விட மனித சமூகத்தை ஆராய்வதில் சுயநல மற்ற தன்மையைக் கண்டறிந்தான். இல்லாதவர்களுக்குக் கொடுத்து, துன்பத்தில் உழல்பவர்களுக்கு ஆறுதல் மொழி கூறித் தேற்றுவதே அவனுடைய முக்கிய ஆனந்தமாகவும், மனதிருப்தியாகவும் இருந்து வந்தது.

இளவரசன் மைக்கேலின் பார்வை எதிரே மணிக் கூண்டிலிருந்த கடிகாரத்தின்மீது விழுந்தது. உடனே அவன் உதடுகளில் தோன்றிய புன்முறுவல் மன ஆறுதலை ஏற்படுத்தியதுபோல் காணப்பட்டாலும் அதில் வெறுப்பும் கலந்தே இருந்தது. இளவரசனுடைய சிந்தனைகள் எப் பொழுதும் உன்னதமானதாக இருந்துவரும். உலகத்தின் போக்கு மணிக்கணக்கின் கட்டுத் திட்டங்களுக்கு உட் பட்டிருக்கிறது என்பதை தலையை அசைப்பதன்மூலம் தீர்மானிப்பான். கடிகாரத்தின் இரண்டு முள்களின் போக்கிற்கேற்பவே மனிதர் வேகமாகப் போய் வந்து கொண்டிருப்பதற்குக் காரணமாக இருப்பது அவனை வருத்தமடையச் செய்தது.

நன்கு ஆடை உடுத்திய வாலிபன் ஒருவன் மெள்ள பூங்காவினுள் வந்து இளவரசன் மைக்கேலுக்கு மூன்றாவது பலகையில் உட்கார்ந்தான்! சுமார் அரை மணி நேரம் அவன் அவசர அவசரமாகச் சுருட்டைப் புகைத்துக்

கொண்டிருந்தான். பிறகு மரங்களுக்கு மேலே உள்ள எரியும் விளக்குடன்கூடிய கடிகாரத்தைப் பார்க்கத் தொடங்கினான். கடிகாரத்தின் முள்கள் இரண்டின் அளவிற் கேற்ப அவனுடைய முகத்தில் கவலைக் குறி தோன்றுவதை இளவரசன் கவனித்தான்.

இளவரசன் மைக்கேல் எழுந்து அந்த வாலிபன் இருக்கு மிடத்திற்குச் சென்றான். "உங்களிடம் நானே வந்து பேச முற்படுவதற்கு மன்னிக்கவும்! ஆனால் தங்கள் மனம் ஏதோ தொல்லையில் அகப்பட்டு அல்லல்படுவதாக உணர் கிறேன். நான் எடுத்துக்கொண்ட உரிமையினால் உங்கள் வருத்தம் தணியலாம் என்றால் என்னைக் குறித்துக் கூறு கிறேன். என் பெயர் இளவரசன் மைக்கேல். நான் வெலோனா சிம்மாசனத்தின் எதிர்கால மன்னன். என் தோற்றத்திலிருந்து நீங்கள் மாறுவேடத்திலிருப்பதை அறிந்துகொள்ளலாம். மற்றவர்களுக்கு உதவி செய்ய இந்த ஆடையே தகுதியானதாக நான் கருதுகிறேன்; நம் இருவருடைய முயற்சியினால் உங்கள் துன்பம் அகலும் என்றே எனக்குத் தோன்றுகிறது" என்றான்.

இளவரசன் மைக்கேலை அந்த வாலிபன் மலர்ந்த முகத்துடன் பார்த்தான். ஆனால் ஆச்சரியத்தால் மேலே எழுந்த புருவம் மாத்திரம் அப்படியே நின்றிருந்தது. அவன் சிரித்தான்; அப்போதும் புருவம் அப்படியே இருந்தது. ஆனால் அந்தக் கணத்தில் மனமாற்றம் ஏற்படுவதை ஏற்றுக்கொண்டான்.

பிறகு அந்த வாலிபன், "தங்களைச் சந்தித்தது மகிழ்ச் சியை அளிக்கிறது. நீங்கள் மாறுவேடம் பூண்டிருக்கிறீர்கள் என்பது உண்மைதான். உதவி செய்ய முன் வந்ததற்கு என் மனமார்ந்த நன்றி. ஆனால் என் விவகாரத்தில்' தங்க ளால் எவ்விதம் உதவி செய்ய முடியும் என்பதுதான் தெரியவில்லை. அப்படி உதவ முடியும் என்றும் நினைக்க வில்லை. என் விவகாரம் மிகவும் ரகசியமானது. ஆனால்



தாங்கள் உதவி செய்ய முன்வந்ததற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்றான்.

இளவரசன் மைக்கேல் அந்த வாலிபனின் அருகில் உட்கார்ந்துகொண்டான். அவன் அடிக்கடி ஏதோ சொல்லிக்கொண்டிருந்தான். ஆனால் அது குற்றமாக இருக்கவில்லை. அவனுடைய கம்பீரமான தோற்றமும், சொற்களும் அவ்விதம் நினைக்க வழியில்லாமல் செய்து விட்டன.

"காலத்தைக் காட்டும் கடிகாரமும் மனித சமூகத்திற்கு விலங்கு போன்றது. நீங்கள் அடிக்கடி அந்தக் கடிகாரத்தைப் பார்ப்பதைக் கவனித்தேன். அதனுடைய தோற்றம் கொடுமையானது. எண்களோ அதிர்ஷ்டச் சீட்டுகளைப் போன்றவை. மணியைக் காட்டும் முள்கள் உங்கள் அழிவை ஏற்படுத்த ஒன்றிற்காக நேரத்தைக் குறிப்பிடச் செய்வ தாகும். வெட்கக்கேடான அதன் தளையிலிருந்து விடு படுங்கள்! உங்கள் காரியங்களைக் காலத்தைக் காட்டும் முள்களின் கட்டளையை ஏற்காதீர்கள் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்" என்றான் இளவரசன் மைக்கேல்.

"நான் அவ்விதம் இருப்பதே இல்லை. மிக முக்கியமான காரியமாக இருந்தால் மாத்திரமே கடிகாரத்தை எடுத்துப் போவேன்; இல்லையேல் மாட்டேன்" என்றான் வாலிபன்.

"புல் பூண்டு மரம் செடிகளைப் போலவே மனிதர் களுடைய குணாதிசயங்களும் எனக்குத் தெரியும். வேதாந்த விவகாரத்தில் நான் கைதேர்ந்தவன். கலையில் பட்டம் பெற்றவன். அதிர்ஷ்டக்காரர்களின் பணப்பை என்னிடம் இருக்கிறது. சில துரதிருஷ்டங்களையும் சக்திக்கு மீறிய செயல்களையும் என்னால் கடக்க முடியவில்லை. உங்கள் தோற்றத்திலிருந்து நீங்கள் நேர்மையானவர், சிறந்த குண முள்ளவர் ஆகியவற்றுடன் துன்பத்தில் ஆழ்ந்திருப்பவர் என்றும் அறிந்துகொண்டேன். என்னுடைய ஆலோசனை அல்லது உதவியை ஏற்றுக்கொள்ளும்படி கெஞ்சிக் கேட்டுக்

கொள்கிறேன். என்னுடைய தோற்றத்திலிருந்து உங்களுடைய தொல்லைகளை அகற்ற முடியுமா என்று சந்தேகப் படாதீர்கள்.''

வாலிபன் மீண்டும் கடிகாரத்தைப் பார்த்தான். அவனுடைய முகம் திடீரென்று கருத்தது. கடிகாரத்திலிருந்து மாறிய அவன் பார்வை எதிரே இருந்த மாடி வீட்டின் பக்கம் சென்று நின்றது. வீட்டின் ஜன்னல்களின் திரைச் சீலைகள் விடப்பட்டன. விளக்கொளிகளும் மங்கத் தொடங்கின.

''ஒன்பது அடிக்க பத்து நிமிடங்கள் இருக்கின்றன'' என்று அமைதி இழந்த தோற்றத்துடனும் படபடப்பாகவும் சொன்னான் வாலிபன். பிறகு எழுந்து அந்த வீட்டிற்கு நேர் எதிர் வழியில் செல்ல இரண்டடி எடுத்து வைத்தான். அச்சமயம் இளவரசன் மைக்கேல், ''சற்று பொறுங்கள்'' என்று கட்டளையிட்டான். உடனே அந்த வாலிபன் திரும்பி நின்று ஏளனமாகச் சிரித்தான்.

''அவளுக்குப் பத்து நிமிஷ அவகாசம் கொடுக்கிறேன். பிறகு சென்றுவிடுவேன். கடிகாரத்தைப்பற்றிய உங்கள் கருத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன். பெண்களையும் கடிகாரத்தைப் போலவே ஒதுக்கித் தள்ளிவிடுகிறேன்'' என்றான் வாலிபன்.

''உட்கார்ந்து கொள்ளுங்கள். பெண்களைப் பற்றிக் கூறியதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. கடிகாரத்திற்குப் பெண்கள் இயற்கையான விரோதிகள்; நமது எண்ணங்களையும் ஆனந்தங்களையும் கட்டுப்படுத்தும் கடிகாரம் என்ற பூதத்திடமிருந்து அவர்கள் நம்மைக் காப்பாற்றவேண்டும். என்னிடம் உங்களுக்கு நம்பிக்கை இருந்தால் உங்களுடைய கதையைச் சொல்லுங்கள்.''

அலட்சியமாகச் சிரித்துக்கொண்டே வாலிபன் பலகையின்மீது உட்கார்ந்தான்,



''மேன்மை தங்கிய இளவரசரே! எதிரே மூன்று ஜன்னல்களில் விளக்கொளி தெரிகிறதே, அந்த மாடி வீட்டைப் பாருங்கள். அந்த வீட்டினுள் மாலை ஆறு மணிக்கு ஒரு யுவதியுடன் இருந்தேன். அவளும் நானும் திருமணம் செய்து கொள்வதாகத் தீர்மானித்துக் கொண்டோம். நான் மோசமாக நடந்துகொண்டேன்; ஒரு முட்டாள். ஒன்றும் தெரியாத சிறு பையனைப்போன்றவனாக இருந்து விட்டேன். இது அவளுக்கும் தெரியும். என்னை மன்னித்துவிட விரும்புகிறேன். பெண்கள் நம்மை மன்னிக்கவேண்டும் என்றுதானே நாம் அனைவரும் விரும்புகிறோம்?'

''அந்த யுவதி, 'சிந்தித்துப் பார்த்து முடிவுக்கு வர எனக்கு அவகாசம் வேண்டும். உங்களைப் பூரணமாக மன்னிக்கவேண்டும் அல்லது உங்கள் முகத்தை மீண்டும் பார்க்காமலே இருக்கவேண்டும். அரைகுறை விவகாரமே கூடாது. இந்த வீட்டில் மேல் மாடியிலுள்ள ஜன்னலை எட்டரை மணிக்குச் சரியாக வந்து பார். உங்களை மன்னித்துவிட விரும்பினால் ஜன்னலில் வெள்ளைப் பட்டுத் துணியைத் தொங்கவிடுவேன். அந்த அடையாளத்தைத் தெரிந்துகொண்டு நீங்கள் உள்ளே வரலாம். பட்டுத்துணி தொங்க விடாவிட்டால் உங்களுக்கும் எனக்குமுள்ள தொடர்புகள் அனைத்தும் சிதைந்து விட்டன என்று தெரிந்து கொள்ளுங்கள்' என்றாள். அதனாலேயே நான் கடிகாரத்தைக் கவனித்துக்கொண்டிருக்கிறேன். அவள் குறிப்பிட்ட நேரம் கடந்து இருபது நிமிடங்களாகிவிட்டன. என்னுடைய கவலை சாதாரணமானது என்று நினைக்கிறீர்களா?'' என்றான் வாலிபன்.

''நான் இதையேதான் மீண்டும் கூறுவேன். பெண்கள் இயற்கையாகவே கடிகாரங்களின் விரோதிகள்; கடிகாரங்கள் தீயவை. பெண்கள் வாழ்த்தத் தகுந்தவர்கள். தாங்கள் எதிர்பார்க்கும் அடையாளம் விரைவில் தோன்றலாம்.''

''உங்கள் கொள்கை வெற்றியே பெறாது. மேரியனைக் குறித்து உங்களுக்குத் தெரியாது. அவள் குறித்த வண்ணம்

வினாடிகூடத் தாமதிக்காமல் ஒன்றைச் செய்பவள். இந்த ஒன்றுதான் எனக்கு முதலில் அவளிடம் பற்றை ஏற்படுத்திற்று. பட்டுத் துணிக்குப் பதிலாக நான் வெட்கித் தலை குனியும்படி செய்யப்பட்டேன். எட்டு மணி முப்பத்தி ஒரு நிமிடத்திற்கு எனக்காக வாத்துக்கறி சமைக்கப்படும் என்றது தெரிந்திருக்கவேண்டும். இன்று நள்ளிரவுக்கு முன் ஜாக்மில் பரனுடன் மேற்கே போகப் போகிறேன். அங்கு நான் என் அதிர்ஷ்டத்தைச் சோதனை செய்து பார்க்கிறேன். வந்தனம். வருகிறேன் இளவரசே'' என்று எழுந்தான் வாலிபன்.

இளவரசன் மைக்கேல் புன்முறுவல் செய்தான். பிறகு வாலிபனுடைய மேல் அங்கியின் கையைப் பற்றி நிறுத்தினான். இளவரசனுடைய கண்கள் மின்னிப் பிரகாசித்தன.

''கடிகாரத்தில் மணி அடிக்கும்வரை பொறுத்திருங்கள். பெரும்பாலான மனிதர்களைக் காட்டிலும் எனக்குப் பொருளும் அதிகாரமும் இருக்கிறது. ஆனால் கடிகாரத்தில் மணி அடிக்கும்போது மாத்திரம் நான் நடுநடுங்குவேன். கடிகாரத்தில் மணி அடிக்கும்வரை என்னுடன் இருங்கள். அந்தப் பெண்ணை உங்களுக்கே உரியவளாக்குகிறேன். எதிர்கால மன்னனான என் வாக்கை நம்புங்கள். உங்களுடைய திருமண நாளன்று லட்சம் பவுனும் ஹட்ஸனிலுள்ள ஒரு மாளிகையையும் பரிசாக அளிக்கிறேன். ஆனால் அந்த மாளிகையினுள் நம்முடைய ஆனந்தத்தையும் மனப்போக்கையும் கட்டுப்படுத்தும் கொடிய கடிகாரம் இருக்காது. இந்த நிபந்தனைக்கு ஒப்புக்கொள்கிறீர்களா?'' என்றான் இளவரசன் மைக்கேல்.

''ஒப்புக்கொள்கிறேன். அவை தொல்லை கொடுக்கக் கூடியவை. எப்போதும் டிக் டிக் என்று சப்தித்துக் கொண்டே இருக்கும். அடிக்கடி மணி அடிக்கும் நமது சாப்பாட்டு நேரம் கடந்து சென்றுவிடும்'' என்று கூறி வாலிபன் மீண்டும் கடிகாரத்தைப் பார்த்தான். அதில் ஒன்பது அடிக்க இன்னமும் மூன்று நிமிடம் இருந்தது.



''சற்று படுத்துத் தூங்கலாம் என்று நினைக்கிறேன்: [..]ற்று எனக்குக் களைப்பாக இருக்கிறது'' என்று பலகையின் [..]து காலை நீட்டிக்கொண்டு படுத்தான் இளவரசன் மைக்கேல். அது அதற்கு முன்னதாகவே படுத்துத் தூங்குவது போலத் தோன்றிற்று.

பிறகு, ''இன்பமான தென்றல் வீசும் எந்த மாலை வேளையிலும் என்னை இந்தப் பூங்காவில் காணலாம். உங்களுடைய திருமண நாளன்று வாருங்கள். நான் கூறிய பணத்திற்கு பாங்கி ரசீது தருகிறேன்'' என்றான் இளவரசன்.

''மேன்மை தங்கிய இளவரசே! மனமார்ந்த நன்றி. எனக்கு ஹட்ஸனிலுள்ள மாளிகை தேவையில்லை போல் தோன்றுகிறது. ஆனால் தாங்கள் எனக்கு அளிப்பதாகக் கூறியதற்குப் பாராட்டுகிறேன்'' என்றான் வாலிபன்.

இளவரசன் மைக்கேல் குறட்டை விட்டுத் தூங்கத் தொடங்கினான். அவனுடைய தொப்பி தலையிலிருந்து கழன்று தரையில் விழுந்தது. வாலிபன் அதை எடுத்து இளவரசனுடைய முகத்தின்மீது வைத்து மூடினான். பலகையிலிருந்து கீழே தொங்கிய கையையும் காலையும் சரியாக எடுத்துவைத்தான். பிறகு, ''பாவம்!'' என்று கூறிக் கொண்டே இளவரசனுடைய கிழிந்த ஆடைகளைச் சரி செய்தான்.

அதே சமயம் கடிகாரம் ஒன்பது மணி அடித்தது. உடனே அந்த வாலிபன் மீண்டும் மாடி வீட்டைப் பார்த்துப் பெருமூச்சு விட்டான். மறு கணம் சந்தோஷத்தால் உரக்கக் கத்தினான். மேல் மாடியின் ஜன்னலில் அவளை மன்னிப்பதற்கும், எல்லையற்ற இன்பத்தை அளிப்பதற்கும் அடையாளமான வெள்ளைப் பட்டுத் துணி தொங்கிக் கொண்டிருந்தது.

அதே சமயம் பூங்காவினுள் ஒருவன் வேகமாக வந்து கொண்டிருந்தான். அவனிடம் வாலிபன், ''மணி என்ன ஆகிறது?'' என்று கேட்டான்.

அவன் தன் கைக்கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, "எட்டு அடித்து இருபத்தி ஒன்பது நிமிடமாகிறது" என்று கூறி, பழக்கம் காரணமாக மணிக்கூண்டு கடிகாரத்தைப் பார்த்தான். "ஹூம், அரை மணி நேரம் முன்னதாகப் போகிறது. கடந்த பத்து ஆண்டுகளில் இப்போதுதான் அது முன்னதாகப் போவதை இன்று காண்கிறேன்; என் கடிகாரம் தவறாக ஓடவே ஓடாது" என்று கூறித் திரும்பிப் பார்த்தான். அப்போது வாலிபன் எதிரே இருந்த மாடி வீட்டை நோக்கி வேகமாகப் போய்க்கொண்டிருந்தான்.

மறுநாள் காலை இரண்டு போலீஸ்காரர்கள் நகரத்தின் பாதுகாவலைக் கவனிக்க பூங்காவினுள் வந்தார்கள். பூங்காவினுள் ஒருவன் படுத்துத் தூங்குவதைத் தவிர வேறு யாருமே இருக்கவில்லை.

"இவன் பெயர் மிக். இரவு நேரங்களில் இவன் தன் காரியங்களை முடித்துக்கொள்கிறான். இருபது ஆண்டுகளாகப் பூங்காவிலேயே வசித்து வருகிறான்" என்று ஒரு போலீஸ்காரன் சொன்னான் இளவரசனைப் பார்த்து.

மற்றொரு போலீஸ்காரன் இளவரசன் எதையோ கசக்கிக் கையில் வைத்துக்கொண்டிருப்பதைப் பார்த்தான். பிறகு, "ஹூம், இவன் எப்படியோ ஐம்பது டாலர் நோட்டை யாரிடமிருந்தோ பறித்திருக்கிறான். இவன் புகை இழுக்கும் சுருட்டு எத்தகையது என்று எனக்குத் தெரியும்" என்றான்.

பிறகு இளவரசனுடைய பூட்ஸின் அடிப்பாகத்தைக் குறுந்தடி 'டப்டப்' என்று அடிக்கும் சப்தம் கேட்கத் தொடங்கிற்று.

## 13. கோச் வண்டிக்காரன்

வாடகை கோச் வண்டி ஓட்டுவதே ஜெர்ரியின் தொழில். வண்டியின் முன் பாகத்தில் உயரமான இடத்தில் அவன் உட்கார்ந்து கொள்வான். அச்சமயம் அவன் மற்றவர்களை வேறு இனம்போல நோக்குவான். ஒரு வகையில் அவனை பணத்தாசை பிடித்தவன் என்றும் கூறலாம். நாடோடியோ, ஒரு நாட்டின் அதிபதியோ, பிச்சைக்காரனோ அதைப்பற்றி அவனுக்குக் கவலை இல்லை. உங்களுக்காக வண்டி ஓட்டியதற்கு நீங்கள் அதற்கான கூலியைக் கொடுத்தால் போதுமானது; அவன் உங்களை வண்டியில் ஏற்றிக்கொண்டு ஆனந்தமாகத் தலையை அசைப்பான். சாட்டையால் குதிரையின்மீது மெள்ளச் சொடுக்குவான்; குறிப்பிட்ட இடத்திற்குக் கொண்டு சேர்த்துவிடுவான்.

ஆனால் கூலி கொடுக்கும் சமயம் நீங்கள் சட்டம் பேசினாலோ, அவன் எவ்வளவு அலட்சியமாக நடந்து கொள்கிறான் என்பதை அறியலாம். ஒரு வேளை நீங்கள் தவறுதலாகப் பணப்பையை வீட்டில் வைத்து வந்துவிட்டாலோ அதற்கான பலனை அனுபவித்தே தீரவேண்டும் என்ற நிலைக்குக் கொண்டுவந்து விடுவான்.

வாடகை கோச் வண்டி ஓட்டுபவர்கள் விசித்திரமான போக்குடையவர்களாக இருப்பார்கள். நாம் உட்காரும்

இடத்திற்கும் உயரமான பகுதியில் அவர்கள் ஜூபிடர் தேவதையைப் போல வீற்றிருப்பார்கள்; உங்களுடைய விதியை அவர்கள் லகான் என்ற தோல்பட்டையின் மூலம் கையில் பிடித்திருப்பார்கள். நீங்கள் உதவியற்றவர்களாகவும் கூண்டில் அகப்பட்ட எலி போலவும் வண்டியினுள் கதவை அடைத்துக்கொண்டு உட்கார்ந்திருப்பீர்கள். வண்டியின் ஜன்னல் வழியே மாத்திரம் உங்களுக்கு விருப்பமானவற்றைப் பார்க்கலாம்.

ஒரு நாள் இரவு மெக்ரே குடும்ப ஓட்டலுக்குப் பக்கத்திலுள்ள பெரிய கல் கட்டிடத்தினுள்ளிருந்து கூக்குரல் எழுந்தது; அது அந்த வீட்டின் மேல் மாடியில் குடியிருக்கும் வாலஸ் குடும்பத்தினரின் அறையிலிருந்து வருவதுபோலத் தோன்றியது. அந்தப் பக்கமாகப் போனவர்கள் பலவிதமாகச் சர்ச்சை செய்யத் தொடங்கினர். அவர்கள் பேச்சிலிருந்து நோராவுக்குத் திருமணம் ஆகப் போவதை அவர்களால் அகற்ற இயலவில்லை.

அந்தக் கல் வீட்டிற்கு அருகாமையில் ஜெர்ரியின் கோச் வண்டி நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அவன் குதிரைக்குத் தானியம் புசிக்கக் கொடுத்துக்கொண்டிருந்தான். அச்சமயம் சமையல் பாத்திரங்களைச் சுத்தம் செய்து கொண்டிருந்த போது கை கழுவாமல் பாதியிலேயே எழுந்து வந்து தெருவில் வேடிக்கை பார்க்கும்போது எப்படியிருக்குமோ அவ்விதமே அவனுடைய கைகள் இருந்தன.

வேறு தெருவிலிருந்தோ அல்லது மந்தைபோல் வந்து கொண்டிருக்கும் மக்கள் மத்தியிலிருந்தோ ஒரு யுவதி ஜெர்ரியின் கோச் வண்டியின் முன் தோன்றினாள். வழக்கமான அவனுடைய கழுகுக் கண்கள் அவளைப் பார்த்து விட்டன. அவனைப்போன்ற நான்கு ஐந்து வண்டிக்காரர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அவன் வண்டியின் கதவருகில் தாவி வந்தான். அந்த யுவதியின் முன்வந்து கதவைத் திறந்து விட்டான். பிறகு குதிரையின் முன்பக்கம் சென்று தானியத்தை எடுத்து மூட்டை கட்டினான். அதற்குக்



கடிவாளத்தைப் பூட்டினான். மறு கணம் அவன் ஒரு அனுபவ மாலுமியைப்போல் வண்டியின் முன் பக்கத்திற்குத் தொத்திக்கொண்டு ஏறினான்.

கையில் லகானைப் பிடித்துக்கொண்டு தன் இடத்தில் உட்கார்ந்து, ''ஏறி உட்கார்ந்து கொள்ளுங்கள் சீமாட்டி'' என்றான்.

வண்டியினுள் ஏறி உட்கார்ந்து கதவை மூடித் தாளிட்டாள் யுவதி. மறு கணம் ஜெர்ரியின் கையிலிருந்த சாட்டை வானவெளியில் சொடுக்கப்பட்டது; குதிரை ஓடத் தொடங்கியது. வண்டியின் முன்னால் போய்க்கொண்டிருந்த கூட்டத்தினர் பாய்ந்து ஒதுங்கினர்.

குதிரை வேகமாக ஓடத் தொடங்கியதும் ஜெர்ரி வண்டியில் முன் பக்கத்திலிருந்த திட்டுக் கதவைத் திறந்தான். உள்ளே உட்கார்ந்திருக்கும் யுவதியிடம் பணிவான குரலில், ''எங்கே போகவேண்டும்?'' என்று கேட்டான்.

''உங்களுக்கு விருப்பமான இடத்திற்கு ஓட்டுங்கள்'' என்றாள் அந்த யுவதி.

'உல்லாசமாகப் போகிறாள் போலிருக்கிறது' என்று எண்ணினான் ஜெர்ரி. பிறகு, ''பூங்காவின் பக்கமாக ஓட்டட்டுமா? அந்தப் பகுதி குளுமையாகவும் நேர்த்தியாகவும் இருக்கும் சீமாட்டி'' என்றான்.

''அப்படியே செய்யுங்கள்.''

ஐந்தாவது தெருவைக் கடந்து வண்டி மற்றொரு நெடுஞ்சாலையை நெருங்கிக்கொண்டிருந்தது. ஜெர்ரியின் சிந்தனையில் மெக்ரே குடும்ப ஓட்டலுக்கு அருகாமையிலுள்ள வீட்டிலிருந்து வந்த கூக்குரல் வட்டமிட்டுக் கொண்டிருந்தது. அவன் வாய் ஒரு துதிப்பாடலைப் பாடத் தொடங்கிற்று.

வண்டியினுள் யுவதி உட்கார்ந்திருந்தாள். அடிக்கடி வலது இடது பக்கம் திரும்பிப் பார்த்துக்கொண்டிருந்தாள். வண்டியினுள் இருட்டாக இருந்த போதிலும் அவளுடைய

நேர்த்தியான கண்கள் விண் மீனைப்போல் ஒளி விட்டுப் பிரகாசிப்பது தெரிந்தது.

ஐம்பத்தி ஒன்பதாவது தெருவை வண்டி நெருங்கியதும் ஜெர்ரியின் தலை சுழன்றது; அவனது கையிலிருந்து லகான் தானாகவே நழுவிற்று. ஆனால் அவனுடைய குதிரை மாத்திரம் பூங்காவின் வாயிலில் நுழைந்து பழக்கப்பட்ட வழிகளில் ஓடத் தொடங்கிற்று. யுவதி வண்டியின் ஜன்னல் வழியே தலையை நீட்டி, பூங்காவிலிருக்கும் மரம் செடி கொடி மலர்கள்—ஆகியவற்றின் வாசத்தை நுகரத் தொடங்கினாள். நன்றியறிதலுடைய குதிரையும் ஒரு மணி நேரம் பூங்காவினுள்ளேயே சுற்றிச் சுற்றி வந்தது.

பழக்கமும் வெற்றிகரமாக ஜெர்ரியின் சோம்பேறித்தனத்தை அதிகரிக்கச் செய்தது. அவன் திட்டுக் கதவைத் திறந்து, ''காஸினோ ஓட்டலுக்கு முன்னால் நிறுத்தட்டுமா? பாட்டையும் கேட்கலாம்; பலகாரமும் சாப்பிடலாம்'' என்றான்.

''அதுவும் நல்லதுதான்'' என்றாள் யுவதி.

காஸினோ ஓட்டலுக்கு முன்னால் கொண்டு வண்டியை நிறுத்தினான் ஜெர்ரி. வண்டியின் கதவு திறந்தது. யுவதி நேரிடையாகத் தரையில் கால் வைத்து இறங்கினாள். உடனே அவளுடைய செவிகள் ஓட்டலிலிருந்து வரும் இனிமையான பாடலையும், பல வர்ண விளக்குகளைக் கண்களும் ரசிக்கத் தொடங்கின. யாரோ ஒருவன் முப்பத்தி நான்கு என்ற எண்ணுள்ள அட்டையை அவளிடம் கொடுத்தான். அவள் திருப்பிப் பார்த்தாள். ஏறி வந்த வண்டி இருபது அடி தூரத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டு மற்ற வண்டிகளுடன் நிறுத்தி வைத்திருந்ததைக் கண்டாள். அங்கு கோச் வண்டிகளுடன் மோட்டார் கார்களும் இருந்தன. அதன் பிறகு ஒருவன் அந்த யுவதியின் முன்னால் நடனமாடுவதுபோல் ஓடி வந்தான். மறுகணம் அவள் ஒரு மேஜையின் முன்போய் உட்கார்ந்திருந்தாள்.



ஓட்டல் சிப்பந்தி அங்குள்ள பல பொருள்களைப்பற்றிச் சொல்லிக்கொண்டே போனான். பணப் பையிலிருந்து சில நாணயங்களை எடுத்து அவனிடம் கொடுத்து சாராயம் கொண்டு வரும்படி கட்டளையிட்டாள் யுவதி. அதைச் சுவைத்துக்கொண்டே அந்த விசித்திரமான இடத்தையும் அங்கு வந்துள்ள மக்களையும் பார்த்தாள்.

ஐம்பதுக்கும் அதிகமான மேஜைகளுக்கு அருகில் சீமாட்டிகளும் அழகு ராணிகளும் பட்டாடை உடுத்திக்கொண்டு உட்கார்ந்திருந்தனர். அவர்களுடைய உடல்களில் உலகத்திலுள்ள வைரம் முதலிய விலை உயர்ந்த கற்கள் பதித்த நகைகள் விளக்கொளியில் பிரகாசித்துக் கொண்டிருந்தன. அடிக்கடி அவர்களில் யாராவது ஒருத்தி ஜெர்ரியின் வண்டியில் வந்து இறங்கிய யுவதியை நோக்குவாள். நகைகளே இல்லாத அவள் உடலை மேகவர்ணப் பட்டாடை மறைத்துக்கொண்டிருந்தது. அவளுடைய அழகிய முகம் சீமாட்டிகளையும் பொறாமையடையச் செய்யும்படியாக இருந்தது.

கடிகாரத்தின் பெரிய முள் இரு முறை சுற்றி வந்தது. ஓட்டலுக்கு வந்திருந்தவர்களில் பெரும்பாலோர் வெளியேறிச் சென்றனர். வெளியில் நிறுத்தப்பட்டிருந்த வண்டிகளிலும் பல அங்கு காணப்படவில்லை. இசைக் கருவிகள் பெட்டிகளில் வைக்கப்பட்டன. சிப்பந்திகள் மேஜைகளைச் சுத்தம் செய்யத் தொடங்கினர்.

யுவதி எழுந்து ஓட்டலைவிட்டு வெளியே வந்தாள். அவள் ஏறி வந்த வண்டியின் இலக்கத்தைக் குறிக்கும் அட்டையைச் சிப்பந்தியிடம் கொடுத்தாள். அதை வாங்கிப் பார்த்த அவன் வண்டிக்காரனைக் கூவி அழைத்தான். ஜெர்ரி உட்கார்ந்த வண்ணமே தூங்கிக்கொண்டிருந்தான். அங்கு மூன்று வண்டிக்காரர்களே இருந்தார்கள். அவர்களில் ஒருவன் ஜெர்ரியைத் தட்டி எழுப்பினான். அவன் கண்களைக் கசக்கிக்கொண்டே எழுந்தான். கையில் லகானைப் பற்றிக் குதிரையைப் போகும்படி சைகை காட்டினான்.

வண்டியில் யுவதி ஏறிக்கொண்டாள். உடனே வண்டியும் புறப்பட்டது. பூங்காவின் பக்கமாக சுருக்கு வழியில் திரும்பிச் செல்லத் தொடங்கிற்று.

பூங்காவின் வாயிலை நெருங்கிய சமயம் ஜெர்ரிக்குத் திடீரென்று ஒரு சந்தேகம் ஏற்பட்டது. அதற்கு முன் இது போன்று சில சம்பவங்கள் நடைபெற்றிருக்கின்றன. அதனால் அவன் குதிரையை நிறுத்தினான். திட்டுக் கதவைத் திறந்து வண்டியினுள்ளிருக்கும் யுவதியிடம், ''இதற்குமேல் வண்டியைச் செலுத்துமுன் என் வாடகைக்காக நான்கு டாலர்கள் கொடுத்துவிடவேண்டும். உங்களிடம் பணம் இருக்கிறதா?'' என்று கேட்டான்.

''நான்கு டாலர்களா?'' என்று கேட்டு யுவதி ஏளனமாகச் சிரித்தாள். பிறகு, ''என்னிடம் ஏதோ சிறிது சில்லறைதான் இருக்கிறது'' என்றாள்.

ஜெர்ரி கையில் சாட்டையை எடுத்துச் சொடுக்கினான். குதிரை நாலு கால் பாய்ச்சலில் செல்லத் தொடங்கிற்று. அதன் குளம்பொலிகள் ஒரேவிதமாகக் கேட்டன. ஜெர்ரி ஏதேதோ வாயில் வந்த வண்ணம் உளறினான். சாட்டையினால் பக்கத்தில் வரும் வண்டிகளின்மீது அடித்தான்.

நீல விளக்கு எரிந்துகொண்டிருந்த வீட்டின் முன் வண்டியை நிறுத்தினான் ஜெர்ரி. வண்டியைவிட்டு இறங்கி கதவைத் திறந்தான். உள்ளே இருக்கும் யுவதியிடம் அதிகார தோரணையில், ''வெளியே வா'' என்றான்.

யுவதி வண்டியிலிருந்து இறங்கினாள். அப்போதும் காஸினோ ஓட்டலின் கனவுப் புன்னகை அவளுடைய உதடுகளில் தவழ்ந்துகொண்டிருந்தது. அவள் கையைப் பற்றி இழுத்துக்கொண்டு போலீஸ் நிலையத்தினுள் சென்றான் ஜெர்ரி. அங்கு பெரிய மீசையுடைய சார்ஜெண்ட் உட்கார்ந்திருந்தான். அவனுக்கு ஜெர்ரி புதியவனல்ல.

''சார்ஜெண்ட்! நான் என் வண்டியில் சவாரி செய்த...'' என்று இழுத்தான். பக்கத்தில் நின்றிருந்த யுவதியைப்



பார்த்தான். உடனே அவனுடைய புருவங்கள் நெறித்தன. அப்போதுதான் மெக்ரே குடும்பம் வசிக்கும் வீட்டிலிருந்து எழுந்த கூக்குரலின் மயக்கம் கலைந்தது.

பிறகு, ''ஒரு பிரயாணி'' என்று ஜெர்ரி ஆரம்பித்தான். மேலும் அவன் பேசத் தொடங்கினான். ''உங்களுக்கு என் மனைவி நோராவை அறிமுகம் செய்து வைக்க விரும்பினேன். இன்று மாலைதான் எங்கள் திருமணம் நடந்தேறியது. இது வரை காலத்தை வீணில் போக்கினோம்'' என்று கூறி யுவதியிடம், ''சார்ஜெண்டுடன் கைகுலுக்கு. நாம் வீட்டிற்குப் போகலாம்'' என்றான்.

நோரா வண்டியில் ஏறும்போது பெருமூச்சு விட்டு, ''பொழுது மிகவும் மகிழ்ச்சிகரமாகக் கழிந்தது''' என்றாள்.

# 14. பெரிய மனிதனு?

**போ**கலின் ஓட்டல் உங்களுக்குத் தெரியாவிட்டால் அது உங்களுடைய துரதிர்ஷ்டம்தான். அந்த ஓட்டலில் அதிக விலையுள்ள பலகாரங்களைச் சாப்பிடக் கூடியவர்களை உங்களுக்குத் தெரிந்திருந்தால் அது உங்களுடைய அதிர்ஷ்டம் என்றே கூறவேண்டும். ஓட்டல் சிப்பந்திகளையும், அவர்களுடைய நடவடிக்கைகளையும் அறிந்தவர்களாக இருந்தாலோ நீங்கள் கொடுக்கும் பணத்திற்குத் தகுந்த—அளவு குறையால்—பொருள்களைப் பெறுவீர்கள்.

எட்டாவது தெருவில் போகலின் ஓட்டல் இருக்கிறது; அதில் வரிசைக்கு ஆறு மேஜை வீதம் இரண்டு வரிசைகள் போடப்பட்டிருந்தன; மேஜைமீது வைக்கப்பட்டிருக்கும் மிளகு தூள், உப்பு ஆகியவை ஒரு சல்லிக்கும் உதவாதது. புளிச்ச காடியோ இந்தியாவில் தயாரிப்பதைப் போன்ற போலி ஒன்ருகும்.

பணப் பெட்டியின் அருகில் போகல் உட்கார்ந்திருப்பான்; அவன் மௌனமாகவும் பதட்டமின்றியும் நீங்கள் கொடுக்கும் பணத்தைப் பெற்றுக்கொள்ளுவான். மலைபோல் குவித்து வைக்கப்பட்டுள்ள பல் குச்சிகளிடையே உங்களுக்கு மீத சில்லறையை எடுத்துப் போடுவான்; சாப்பிட்ட பொருள்களுக்கான உங்கள் ரசீதைக் கம்பியில் குத்தி



வைப்பான்; அவசியமிருந்தாலொழிய அவன் பேசமாட்டான். மேலும் நீங்கள் அவனுடைய நண்பர் அல்ல; நீங்கள் வாடிக்கைக்காரர். உண்ண பலகாரங்களும், சாப்பாடும் கொடுக்கிருர்கள். அதற்கான பணத்தைக் கொடுத்துச் சென்றவர் மீண்டும் சாப்பாடு அல்லது பலகாரம் சாப்பிடும் நேரமே அங்கு வரலாம். அதனுல் உங்களுக்கு உண்டான மீதப் பணத்தை எடுத்துக்கொண்டு நீங்கள் போய்விட வேண்டியதுதான். நீங்கள் யாராகவேனும் இருக்கலாம்; அதைப்பற்றி போகலுக்குக் கவலை இல்லை. இதுதான் அவன் தீர்மானம்.

போகலின் வாடிக்கைக்காரர்களுக்குத் தேவையானவற்றை அளிக்க ஒரு குரலும் இரண்டு பணிப்பெண்களும் இருந்தனர். பணிப்பெண்களில் ஒருத்தியின் பெயர் அயலின். அவள் உயரமாக இருப்பாள்; கவர்ச்சிகரமான தோற்றமுடையவள்; வம்பளப்பதில் அவளுக்கு அதிக விருப்பம் உண்டு.

மற்ருெரு பணிப்பெண்ணின் பெயர் டில்டி. அவளுக்கு ஏன் மடில்டா என்று பெயர் வைக்க எண்ணுகிறீர்கள்? நான் சொல்வதைக் கேளுங்கள். டில்டி என்ற பெயரை ஏற்றுக்கொள்ளுங்கள். டில்டி அதிகமாக யாரிடத்திலும் பேசமாட்டாள்; மௌனமாகத் தன் வேலைகளைக் கவனிப்பாள். அவளுடைய தோற்றமும் கவர்ச்சிகரமாக இருந்தது. வாடிக்கைக்காரர்கள் மனம் நோகாமல் மிகவும் பக்குவமாக நடந்து கொள்வாள்.

போகல் ஓட்டலின் குரலோ எங்கிருந்து வருகிறது; யார் பேசுகிருர்கள் என்பது யாருக்குமே தெரியாது. அது மர்மமானது ஆனுல் அது சமையலறையிலிருந்தே வந்தது. அப்படியும் அதன் ஒலி இயற்கையாக இருக்கவில்லை.

அயலின் நல்ல அழகி என்று மீண்டும் சொன்னுல், உங்களுக்குச் சலிப்பு ஏற்படுகிறதா? ஆனுல் நூறு டாலர் பெறுமான சிறந்த ஆடைகளை வாங்கி அணிந்துகொண்டு அவள்

அழகுப் போட்டிக்கு வருவதாக வைத்துக்கொள்வோம். அப்போது அவளை நீங்கள் பார்க்க நேர்ந்தால் கட்டாயம் சலிப்படையமாட்டீர்கள். நீங்களே முந்திக்கொண்டு அவளை நல்ல அழகி என்று அழைப்பீர்கள்.

போகல் ஒட்டலுக்கு வரும் வாடிக்கைக்காரர்கள் அவளுடைய அடிமைகள்; அவள் ஆறு மேஜைகளின் அவ வந்து உட்காருபவர்களுக்குத் தேவையானவற்றைக் கொண்டு கொடுக்கவேண்டும். ஆனால் அவளோ எல்லோருக்கும் தேவையான பலகாரங்களை உடனே கொண்டு கொடுக்கமாட்டாள். அவர்களை வெகு நேரம் பொறுமையுடன் இருக்கச் செய்வாள். அவர்களும் அவளுடன் பேசி மகிழ்வதையே பெரிதாக எண்ணுவார்களே தவிர, பலகாரம் கொண்டு கொடுக்கத் தாமதமாகிவிட்டதே என்று நினைக்கமாட்டார்கள். அத்துடன் அவளுடைய கவர்ச்சிகரமான தோற்றத்தையும் அங்க அசைவுகளையும் பார்த்துக்கொண்டிருப்பார்கள். அதுவே பலகாரம் சாப்பிட்டு முடித்தவர்களாக இருந்தால் மேலும் உண்ண எதையாவது எடுத்து வரச் சொல்லுவார்கள். அதன் மூலமாவது அயலினுடைய புன்முறுவல் பூத்த முகத்தை இன்னும் சிறிது நேரம் பார்த்திருக்கலாமே என்று எண்ணுவார்கள். அந்த ஒட்டலுக்கு வரும் ஒவ்வொரு ஆணுக்கும் அவள்மீது ஒரு கண் இருந்து வந்தது.

அயலின் ஒருத்தியே தனியாகப் பன்னிரண்டு பேர்களுடன் போராடி வெற்றி பெற்றுவிடுவாள்; அவள் ஒவ்வொரு முறையும் புன்முறுவல் செய்யும்போது அங்கு வரும் வாடிக்கைக்காரர்களின் இதயத்தில் துப்பாக்கிக் குண்டு பாய்ந்ததுபோலிருக்கும். இவ்வளவுக்கும் மத்தியில் அவள் தன் கடமையையும் மறந்துவிடமாட்டாள். வாடிக்கைக்காரர்கள் கேட்ட பொருள்களைக் கொண்டுவந்து கொடுத்த வண்ணம் இருப்பாள்.

எப்போதோ அந்த ஒட்டலுக்கு வருபவர்கள் அயலினுடைய அழகில் மயங்கக்கூடியவர்கள் என்றால், வழக்கமாக



வருபவர்களை அவளைக் கௌரவிக்கக் கூடியவர்களாகக் கருத வேண்டும்; வழக்கமாக வரும் வாடிக்கைவர்களாகக் கருத அவளுக்காகப் பெரிய போட்டியும் வாடிக்கைக்காரர்களிடையே வந்தது. ஒவ்வொரு நாள் மாலையும் விரோதமும் இருந்து மணத்தைப் பற்றிய முடிவு ஏற்படும். அயலினுக்குத் திருமணத்தைப் பற்றிய முடிவு ஏற்படும். குறைந்தது இரண்டு வாரத்திற்கு ஒரு முறையாவது அவளை யாராவது இரண்டு நாடகத்திற்கோ நடனத்திற்கோ அழைத்துச் செல்லுவான். அவளும் டில்டியும் செல்லமாக ஒருவனுக்கு, "குண்டன்" என்று பெயர் வைத்திருந்தார்கள். அவன் அயலினுக்கு ஒரு மோதிரம் பரிசளித்திருந்தான். 'தொப்பை' என்ற மற்றொருவன் தனது சகோதரனுக்கு ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டால் அயலினுக்கு ஒரு சிறந்த நாய்க் குட்டி வாங்கி வந்து தருவதாக வாக்களித்திருந்தான். மாமிசம் முதலியவற்றை அளவுக்கு மீறி உண்ணும் தரகன் ஒருவன் பர்சிவால் என்ற இடத்திற்குப் போக அவளை அழைத்திருந்தான்.

இதைக் குறித்து டில்டியிடம் அயலின், "எனக்கு அந்த இடம் எங்கு இருக்கிறது என்றே தெரியாது. ஆனால் பிரயாணத்திற்கான ஆடைகளைத் தைக்கக் கொடுப்பதற்கு முன் திருமண மோதிரம் என் விரலில் மின்ன வேண்டும். நான் சொல்வது சரிதானே?...அவ்விதம்தான் நான் நினைக்கிறேன்" என்றாள்.

ஆனால் டில்டி!

கலகலப்பாகவுள்ள போகல் ஒட்டலில் அவள் வருந்தக்கூடிய வகையில் இருந்தாள். டில்டியின் தோற்றம் எடுப்பாகவும் கூந்தல் செந்நிறத்துடனும் நல்ல கடைந்தெடுத்தது போன்ற உடல் அமைப்பும் ஒருவராலும் பாராட்டப்படாமலேயே இருந்தது.

பசியோடு இருக்கும் வாடிக்கைக்காரர்களுக்கு அதைத் தணிக்க அவள் உணவுப் பொருள்களை எடுத்துச் சென்ற போதும் ஒருவன்கூட அவளைக் கண்களாலும் பின் தொடரவில்லை. யாரும் அவளுடன் அன்புடனோ வேடிக்கையாகவோ கூடப் பேசியது கிடையாது. வாடிக்கைக்காரர்கள் முக

மலர்ச்சியுடன் அயலினுக்குக் காலை வந்தனம் கூறுவதுபோல அவளுக்கு ஒருவன்கூடச் சொன்னது இல்லை. அதற்கு மாறாக அவள் பலகாரங்களை எடுத்து வரத் தாமதமாகிறது என்று குற்றம் சுமத்தினர்கள். மேலும் அவளுக்கு மோதிரம் பரிசளிக்கவோ, ஏதாவது ஒரு ஊருக்கு உல்லாசமாக அழைத்துப் போவதாகவோகூடக் கூறியது கிடையாது.

டில்டி நல்ல பணிப்பெண். அவளுடைய மேஜைக்கு வந்து உட்காருபவர்கள் அவளிடம் பொறுமையாகவே நடந்துகொண்டனர். அவளைப்போல அவர்களும் அதிகமாகப் பேசமாட்டார்கள். அயலினிடத்தைப் போலவே இவளிடமும் அன்புடன் பேசத் தொடங்குவார்கள்.

எல்லோர் பாராட்டுதல்களையும் பரிசுகளையும் அயலின் பெறுகிறுள் என்றுல் அவ்விதம் டில்டிக்கு இல்லாதது அவள் காதலில் வெற்றி அடைய முடியாததே காரணமாகும். டில்டி நேர்மையானவள்; அவள் அயலினுடைய தோழி. ஒரு சிலருடைய மனதைக் கவர முடிந்ததையே அவள் பெருமையாகக் கருதினுள். ஆனல் மனதின் அடித்தளத்தில் அழகான இளவரசன் தன்னைத் தேடி வருவான் என்று கனவு கண்டுகொண்டிருந்தாள்.

ஒரு நாள் காலை அயலின் கண்கள் ஒன்றின் பக்கம் காயத்துடன் வேலைக்கு வந்தாள். டில்டி அதைப் பார்த்து விவரம் கேட்டாள்.

"நேற்றிரவு நான் இருபத்தியாறுவது தெரு வழியாக வீட்டிற்குச் சென்றுகொண்டிருந்தேன்; அப்போது ஒரு வாலிபன் என் பக்கமாக வந்தான். அவன் என்னைப் பின் தொடர்கிறுன் என்று தெரிந்ததும் நான் ஏமாற்ற முற்பட்டேன். அப்படியும் அவன் விடவில்லை; உடனே நான் அவன் கன்னத்தில் ஓங்கி ஒரு அறை விட்டேன். பிறகு அவன் என் கண் பக்கம் இவ்விதம் காயத்தை ஏற்படுத்தினுன். என் கண் பக்கம் அவ்வளவு மோசமாகவா காணப்படுகிறது? நிகோலஸன் இங்கு பத்து மணிக்குத் தேனீர் பருக வரும்



போது இந்தக் காயத்தைப் பார்க்க நான் விரும்பவில்லை" என்றுள் அயலின்.

மூச்சு விடாமல் அயலின் விவகாரத்தைக் கேட்டுக் கொண்டிருந்தாள் டில்டி. ஒரு ஆண்கூட டில்டியைப் பின் தொடர்ந்தது இல்லை. ஒரு நாளில் இருபத்தி நான்கு மணி நேரமும் அவள் பயமின்றி இருக்கலாம். ஒருவன் பின் தொடர்ந்து வருவதும் காதலுக்காக ஒரு கண் பக்கம் இவ்விதம் காயம் ஏற்படுத்துவதும் எவ்வளவு அதிர்ஷ்டகரமானது.

போகல் ஒட்டலில் வாடிக்கைக்காரர்களில் சிடர் என்ற வாலிபனும் ஒருவன். அவன் சலவைத் தொழிற்சாலையில் வேலை செய்து வந்தான். ஒல்லியாகவும் கருத்த சிகையுடனும் இருந்தான். அவனுல் அயலினுடைய பார்வையைக் கூட பெற முடியவில்லை. அதனுல் அவன் வழக்கமாக டில்டியின் மேஜையின் பக்கமே வந்து உட்காருவான். அங்கிருந்து மௌனமாக அயலினுடைய அழகைக் கண்டு ரசிப்பதுடன் நடவடிக்கைகளை உன்னிப்பாகக் கவனிப்பான்.

ஒரு நாள் இரவு சிடர் மது அருந்திவிட்டு போகல் ஓட்டலுக்கு வந்தான்; அப்போது அங்கு இரண்டு மூன்று வாடிக்கைக்காரர்களே இருந்தார்கள். சிடர் சாப்பிட்டு முடித்ததும் எழுந்தான். டில்டியை இறுகக் கட்டி முத்தமிட்டான். பிறகு அங்கிருந்து புறப்பட்டுத் தெருவிற்குச் சென்றுன். சலவைத் தொழிற்சாலை இருக்கும் திசையில் கையை உயர்த்தி விரலை ஆட்டிவிட்டுச் சென்றுன்.

சம்பவம் நடந்த கணம் டில்டி திகைத்து நின்று விட்டாள். அயலின் அவளை நோக்கி விரலை ஆட்டிப் பேசத் தொடங்கியதும் சுய உணர்வுக்கு வந்துவிட்டாள்.

"ஏ முட்டாள் பெண்ணே! செல்பூட்டுக்குத் துரோகம் செய்வது உனக்கு வெட்கமாக இல்லை? என் வாடிக்கைக்காரர்களில் யாரையாவது நீ பறித்துக்கொண்டு விடுவாய். இனி உன்மீது ஒரு கண் வைத்திருக்க வேண்டியதுதான்" என்றுள் அயலின்.

இச்சம்பவத்தால் டில்டியின் மனதில் ஒரு எண்ணமும் உதயமாயிற்று. தீய சகோதரியான அயலினுல் தன் அழகின் மூலம் அவளைப் பாராட்டுவதற்குப் பலரைப் பெற மாத்திரமே முடிந்தது. டில்டியின் அழகோ ஒரு படி மேலே போய்விட்டது. இப்போது டில்டி தன்னுல் ஆண்களைக் கவர முடியும் என்பதைக் கண்டறிந்தாள். திடீரென்று சிடர் நடந்துகொண்ட முறை அவளுடைய மனதில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்திற்று.

டில்டியின் கன்னங்கள் சிவந்தன; இப்போது அவளுடைய கண்களில் காதல் தெய்வங்கள் கூத்தாடின. அயலினைக்கூட ஒட்டலில் பலர் முன்னிலையில் இவ்விதம் யாரும் முத்தமிட்டதில்லை.

டில்டி மனதினுள்ளே மகிழ்ச்சிகரமான ரகசியத்தை மறைத்து வைத்துக்கொண்டாள். அதிகமாக யாரும் இல்லாதபோது டில்டி ஒட்டல் சொந்தக்காரன் போகல் இருக்குமிடத்திற்குச் சென்றுள். அவளுடைய கண்கள் மின்னின. அவள் கூறியவற்றில் கர்வமோ தற்பெருமையோ தலை காட்டவில்லை. அமைதியான வகையில், ''ஒருவன் இன்று என்னை அவமானப்படுத்தினுன். என்னைக் கட்டி அணைத்து முத்தமிட்டான்'' என்றுள்.

''அப்படியா? இந்த வாரத்திலிருந்து உனக்கு ஒரு டாலர் அதிகமாகச் சம்பளம் தருகிறேன்'' என்று மௌனத்தைக் கலைத்துக்கொண்டு சொன்னுன் போகல்.

அதன் பிறகு வழக்கமாகச் சாப்பிட வரும் தன் வாடிக்கைக்காரர்களிடம் டில்டி நடந்த சம்பவத்தைச் சொன்னுள். சிலர் அவள் கூறியதைக் கேட்டுக்கொண்டு மௌனமாக இருந்தார்கள். சிலர் அவளைப் பாராட்டினுர்கள். மற்றும் சிலரோ அவள் மேஜையைவிட்டு அயலினுடைய மேஜைக்குச் சென்றுர்கள். டில்டியின் மனம் அளவுக்கு மீறிப் பூரித்தது. காதல் சின்னம் வானளாவ உயர்ந்ததுபோலக் கருதினுள். இதற்காகத்தான் இவ்வளவு நாள்வரை அவள் ஏங்கிக் கொண்டுமிருந்தாள்.



சம்பவம் நடந்த நாளிலிருந்து இரண்டு நாள்வரை சிடர் அங்கு வரவே இல்லை. அதற்குள் டில்டி தன்னுல் ஒருவனைக் கவர்ந்து காதலிக்கச் செய்ய முடியும் என்று தீர்மானித்துக் கொண்டாள். அயலினைப் போலவே தலையை வாரி விட்டுக் கொண்டாள்; புதிய நாடா வாங்கி வந்து முடிந்துகொண்டாள். இடுப்பை அயலினைப் போலவே இன்னும் இறுக்கமாக பட்டையை இழுத்துக் கட்டினுள். ஆனுல் திடீரென்று சிடர் கையில் துப்பாக்கியுடன் வந்து அவளைச் சுட்டுக் கொன்று விடுவானே என்ற மகிழ்ச்சி கலந்த பயம் அவளுக்கு இருந்து வந்தது. அவன் டில்டியை அளவு கடந்து காதலித்து வரலாம். கண்மூடித்தனமான காதலர்கள் ஒரு வகையில் பொருமையால் மதியிழந்து விடுவார்கள்.

அயலினைக்கூட யாரும் துப்பாக்கியால் சுடமாட்டார்கள். அயலினை யாரும் சுடமாட்டார்கள் என்பதை உணர்ந்த டில்டி அவளுக்குத் துரோகம் செய்யாமல் நடந்துகொண்டாள். அயலினுடைய வாடிக்கைக்காரர்களைப்பற்றி அவள் கவலைப்படாமல் இருந்தாள்.

மூன்றுவது நாள் பிற்பகல் நான்கு மணிக்கு சிடர் வந்தான். அச்சமயம் ஓட்டலுக்கு ஒருவர்கூட வந்திருக்கவில்லை. அதனுல் டில்டி ஓட்டலின் பின்புறம் சென்று சாமான்களை எடுத்து அடுக்கி வைத்துக்கொண்டிருந்தாள். அயலினும் அங்கு வேறு வேலையில் ஈடுபட்டிருந்தாள். ஓட்டலுக்கு வந்த சிடர் நேராகப் பின்புறம் சென்றுன்.

அவனைப் பார்த்ததும் டில்டி கையிலிருந்ததைப் போட்டுவிட்டு இரண்டு கைகளை மார்புக்கு நேராக எடுத்துச் சென்று அழுத்திக்கொண்டாள். அவளுடைய முகத்திற்கு நேராகச் சிறிது கூந்தல் கலைந்து தொங்கிக்கொண்டிருந்தது. அச்சமயம் அவள் அழகுத் தெய்வமான வீனஸே எதிரில் வந்து நிற்பதுபோலிருந்தது.

சிடரின் முகம் வாடியிருந்தது. அவனது ஒரு கை நிஜாரின் பையினுள் இருந்தது. அவன் தழுதழுத்த குரலில்,

''டில்டி, அன்று நான் செய்த தவறுக்காக உன்னிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறேன். அன்று நான் அளவு மீறிச் சாராயம் பருகியிருந்தேன்; இல்லாவிட்டால் அவ்விதம் நடந்துகொண்டிருக்கவே மாட்டேன். இதுவரை நான் எவ்வளவுதான் மது அருந்தியிருந்தாலும் எந்த ஒரு பெண் மணியிடத்திலும் முறை தவறி நடந்துகொண்டதே இல்லை. தயவு செய்து என் தவறை மறந்து மன்னித்துவிடு'' என்று கூறிவிட்டு அவன் வந்த வழியே வேகமாகச் சென்றான். அது அவன் தவறை உணர்ந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டதால் மனதின் சுமை அகன்றதுபோல் காணப் பட்டது.

ஆனால் அதே சமயம் டில்டியோ ஒரு மேஜைமீது போய் சாய்ந்தாள். மனம் விட்டு அழத் தொடங்கினாள். அதுவரை உன்னதமான உலகங்களுக்கு அவள் மனதின் மூலமே பிரயாணம் செய்து வந்தது சிதைந்தது; கற்பனைக் கோட்டைகள் மறைந்தன. அவளுடைய அழகை அதிகரிக்கச் செய்த முன்னால் வந்து தொங்கிய கூந்தலைப் பிய்த்து எடுத்து எறிந்தாள். சிடரை அவள் அடியோடு வெறுத்தாள். ஆனால் காதல் உலகில் உல்லாசமாகப் பிரயாணம் செய்ய உதவிய அவன் அளித்த முத்தத்தை மாத்திரம் அப்படியே வைத்துக் கொண்டாள். அதனால் அவள் என்றைக்குமே அழகு தெய்வமாக விளங்கி வரலாம்.

அப்படியும் எல்லாமே அழிந்துவிடவில்லை; அயலின் அவளை மார்புடன் தழுவிக்கொண்டாள். டில்டியும் மெள்ளத் தன் கைகளால் அயலினை அணைத்தாள்.

''டில்டி, கவலைப்படாதே; அந்த சிடர் ஒன்றுக்கும் உபயோகமற்றவன்; முட்டாள். அவன் பெருந்தன்மையான வனோ, பெரிய மனிதனோ இல்லை. செய்த காரியத்திற்கு அவன் மன்னிப்பாவது கேட்டுக்கொள்ளாமல் இருக்கலாம்'' என்றாள்.

# 15. யுவதியின் கணவன்!

சாண்டலர் மிடுக்காகவும் பொருத்தமான வகையிலும் மாலை உடுப்புகளை அணிந்துகொண்டு தன் இருப்பிடத்தை விட்டுப் புறப்பட்டான். அவனது தோற்றம் நியூயார்க் நகரத்துச் சலிப்படைந்த மாலையின் இன்பத்தை அனுபவிக்க சங்கத்திற்குச் செல்வது போலிருந்தது.

அவனுக்கு வாரத்திற்குப் பதினெட்டு டாலர் வருமானம் வந்தது. அவன் கட்டிட அமைப்பு வேலை நிபுணர் காரியால யத்தில் வேலை பார்த்தான். அவனுக்கு இருபத்திரண்டு வயது தான் ஆகியிருந்தது. கட்டிட அமைப்புத் தொழிலை அவன் உண்மையான கலையாகக் கருதினான்; அவனுடைய நம்பிக் கையில் —இதை நியூயார்க் நகரத்தில் யாரும் ஏற்றுக்கொள்ள மாட்டார் கள்—நவ நாகரிகக் கட்டிடங்கள், பழங்கால மாளி கைகளின் அமைப்புக்குத் தாழ்ந்ததாக இருந்தது.

ஒவ்வொரு வார வருமானத்திலும் சாண்டலர் ஒரு டாலர் எடுத்து வைத்து வந்தான். பத்து வாரம் பூர்த்தி யானதும், பணத்துடன் வயதான ஒருவனுடைய கடைக்குச் செல்வான். அந்த வயதானவனுடன் பேரம் பேசி விலையைக் குறைத்து மாலை உடுப்புக்களை வாங்குவான். அந்த ஆடை களை அணிந்துகொண்டு அவன் தன்னை லட்சாதிபதி, அல்லது நாட்டின் ஜனாதிபதி என்று எண்ணுவான். ஆடம்பரமான

ஓட்டல்களுக்குச் செல்வான்; அங்கேயே பொழுதையும் மகிழ்ச்சிகரமாகக் கழிப்பான். பத்து டாலரைக் கொண்டு ஒருவன் பணக்காரச் சோம்பேறியைப்போல் சிலமணி நேரம் நடிக்கலாம்; அந்தப் பணமே போதுமான அளவு சாராயம், சாப்பாடு முதலியவற்றைக் கொடுப்பதுடன் வண்டிச் செலவையும் சரிக்கட்டிக்கொண்டு விடலாம்.

ஒரு நாள் மகிழ்ச்சி, சாண்டலருக்கு எழுபது நாள் கவலையையும் சலிப்பையும் போக்கிவிடுகிறது. அது ஒன்று தான் அவனுக்குக் கிடைத்த அதிர்ஷ்டமாகும். சமூகத்தில் சிலருக்கு மகிழ்ச்சி என்பது அவர்கள் தலை நரைத்த பிறகு இன்பகரமான நாட்கள் நினைவுக்கு வரும்போதே ஏற்படும். ஆனால் சாண்டலருக்கோ ஒவ்வொரு எழுபதாவது நாளும் முதலில் ஏற்பட்டதைப் போன்ற மகிழ்ச்சியே இருந்து வந்தது. அவனுடைய மகிழ்ச்சியுடன் சங்கீத வாத்தியங்கள் இசைக்க ஒரு அழகிய யுவதி முதன் முறையாக நடனமாடும் போது ஏற்படுவதுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் எப்படி யிருக்கும்?

பிராட்வே தெருவில் சாண்டலர் தன் புதிய ஆடையை அணிந்துகொண்டு அதை அனைவரும் பார்க்கும் வண்ணம் நடந்தான். அன்று அவன் எல்லோரும் அவனைப் பார்க்கும்படி யாகவே நடந்துகொண்டான். இன்னும் அறுபத்தி ஒன்பது நாட்கள் மாலை வேளைகளில் தன் அறையைவிட்டு வெளியில் போக முடியாது. அங்கேயே கிடைப்பதை உண்ண வேண்டியதுதான். இதை அவன் புகழ் பெற்ற நகரத்தின் உண்மையான குழந்தை என்ற வகையில் கடைப்பிடித்து வருவான். அவ்விதம் செய்யவும் அவனுக்கு விருப்பம்தான்.

ஒரு தெருவின் திருப்பத்தை அடைந்ததும் சாண்டலர் சட்டென்று நின்றான். வழக்கமாகச் செல்லும் ஆடம்பர மான ஓட்டலுக்குப் போவதா, வேறு எங்காவது போகலாமா என்று சிந்திக்கத் தொடங்கினான். அச்சமயம் ஒரு யுவதி அந்தத் திருப்பத்திற்கு வந்தாள். திடீரென்று உரை பனியால் கால் சறுக்கிக் கீழே விழுந்துவிட்டாள்.



சாண்டலர் ஓடிச் சென்று அவள் கையைப் பற்றித் தூக்கினான். அந்த யுவதியும் மெள்ள எழுந்து பக்கத்தி லிருந்த சுவரைப் பிடித்துக்கொண்டு நின்றாள். பிறகு சாண்டலர் உதவி செய்ததற்கு நன்றி தெரிவித்து, ''கீழே விழுந்ததில் ஒரு கால் சற்று மடங்கிவிட்டது'' என்றாள்.

''அதிகமாக வலிக்கிறதா?'' என்று கேட்டான் சாண்டலர்.

''அந்தக் காலில் நிற்கும்போதே வலிக்கிறது. சற்று நேரம் ஓய்வு எடுத்துக்கொண்டால் என்னால் நடக்க முடியும் என்று நம்புகிறேன்.''

''ஒரு வண்டியை அழைக்கட்டுமா?''

''வேண்டாம்; உங்களுக்கு மேலும் தொந்தரவு கொடுக்க நான் விரும்பவில்லை. நடந்த சம்பவம் எனக்கே அவமானப் படும்படியாகச் செய்துவிட்டது.''

சாண்டலர் அந்த யுவதியையே உற்றுப் பார்த்தான். கணத்தில் அவனுடைய மனதைக் கவர்பவளாக அவள் இருந்தாள். அவள் அழகாகவும் நாகரிகம் தெரிந்தவளாகவும் காணப்பட்டாள். கண்கள் இரண்டும் ஆனந்தத்தை அளிப்ப தாகவும் நேர்த்தியாகவும் இருந்தன. அவள் எளிய ஆடையே உடுத்தியிருந்தாள். கடைகளில் வேலை செய்யும் பெண்களைப் போல அவள் கருப்பு ஆடை உடுத்தியிருந்தாள். சாதாரண தொப்பிக்கு அடியில் கருத்த அழகிய கூந்தல் கழுத்துவரை தொங்கிக்கொண்டிருந்தது. சுயமரியாதையுடைய வேலைக் காரப் பெண்களுக்கு எடுத்துக்காட்டானவளைப்போல் அவள் தோற்றமளித்தாள்.

வாலிப சாண்டலருக்குத் திடீரென்று ஒரு எண்ணம் ஏற் பட்டது. அந்த யுவதியைத் தன்னுடன் சாப்பிட வரும்படி அழைக்கலாமா என்று எண்ணினான். அவனுடைய ஆடம் பரத்திற்கும் மகிழ்ச்சிக்கும் இது ஒன்றுதான் குறையாக இருந்தது. அந்த அழகிய யுவதி அவனுடன் சாப்பிட வந் தால் எவ்வளவோ நேர்த்தியாக இருக்கலாம்; அவனுடைய

ஒட்டல்களுக்குச் செல்வான்; அங்கேயே பொழுதையும் மகிழ்ச்சிகரமாகக் கழிப்பான். பத்து டாலரைக் கொண்டு ஒருவன் பணக்காரச் சோம்பேறியைப்போல் சிலமணி நேரம் நடிக்கலாம்; அந்தப் பணமே போதுமான அளவு சாராயம், சாப்பாடு முதலியவற்றைக் கொடுப்பதுடன் வண்டிச் செலவையும் சரிக்கட்டிக்கொண்டு விடலாம்.

ஒரு நாள் மகிழ்ச்சி, சாண்டலருக்கு எழுபது நாள் கவலையையும் சலிப்பையும் போக்கிவிடுகிறது. அது ஒன்று தான் அவனுக்குக் கிடைத்த அதிர்ஷ்டமாகும். சமூகத்தில் சிலருக்கு மகிழ்ச்சி என்பது அவர்கள் தலை நரைத்த பிறகு இன்பகரமான நாட்கள் நினைவுக்கு வரும்போதே ஏற்படும். ஆனால் சாண்டலருக்கோ ஒவ்வொரு எழுபதாவது நாளும் முதலில் ஏற்பட்டதைப் போன்ற மகிழ்ச்சியே இருந்து வந்தது. அவனுடைய மகிழ்ச்சியுடன் சங்கீத வாத்தியங்கள் இசைக்க ஒரு அழகிய யுவதி முதன் முறையாக நடனமாடும் போது ஏற்படுவதுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் எப்படி யிருக்கும்?

பிராட்வே தெருவில் சாண்டலர் தன் புதிய ஆடையை அணிந்துகொண்டு அதை அனைவரும் பார்க்கும் வண்ணம் நடந்தான். அன்று அவன் எல்லோரும் அவனைப் பார்க்கும்படி யாகவே நடந்துகொண்டான். இன்னும் அறுபத்தி ஒன்பது நாட்கள் மாலை வேளைகளில் தன் அறையைவிட்டு வெளியில் போக முடியாது. அங்கேயே கிடைப்பதை உண்ண வேண்டியதுதான். இதை அவன் புகழ் பெற்ற நகரத்தின் உண்மையான குழந்தை என்ற வகையில் கடைப்பிடித்து வருவான். அவ்விதம் செய்யவும் அவனுக்கு விருப்பம்தான்.

ஒரு தெருவின் திருப்பத்தை அடைந்ததும் சாண்டலர் சட்டென்று நின்றான். வழக்கமாகச் செல்லும் ஆடம்பர மான ஓட்டலுக்குப் போவதா, வேறு எங்காவது போகலாமா என்று சிந்திக்கத் தொடங்கினான். அச்சமயம் ஒரு யுவதி அந்தத் திருப்பத்திற்கு வந்தாள். திடீரென்று உரை பனியால் கால் சறுக்கிக் கீழே விழுந்துவிட்டாள்.



சாண்டலர் ஓடிச் சென்று அவள் கையைப் பற்றித் தூக்கினான். அந்த யுவதியும் மெள்ள எழுந்து பக்கத்தி லிருந்த சுவரைப் பிடித்துக்கொண்டு நின்றாள். பிறகு சாண்டலர் உதவி செய்ததற்கு நன்றி தெரிவித்து, "கீழே விழுந்ததில் ஒரு கால் சற்று மடங்கிவிட்டது" என்றாள்.

"அதிகமாக வலிக்கிறதா?" என்று கேட்டான் சாண்டலர்.

"அந்தக் காலில் நிற்கும்போதே வலிக்கிறது. சற்று நேரம் ஓய்வு எடுத்துக்கொண்டால் என்னால் நடக்க முடியும் என்று நம்புகிறேன்."

"ஒரு வண்டியை அழைக்கட்டுமா?"

"வேண்டாம்; உங்களுக்கு மேலும் தொந்தரவு கொடுக்க நான் விரும்பவில்லை. நடந்த சம்பவம் எனக்கே அவமானப் படும்படியாகச் செய்துவிட்டது."

சாண்டலர் அந்த யுவதியையே உற்றுப் பார்த்தான். கணத்தில் அவனுடைய மனதைக் கவர்பவளாக அவள் இருந்தாள். அவள் அழகாகவும் நாகரிகம் தெரிந்தவளாகவும் காணப்பட்டாள். கண்கள் இரண்டும் ஆனந்தத்தை அளிப்ப தாகவும் நேர்த்தியாகவும் இருந்தன. அவள் எளிய ஆடையே உடுத்தியிருந்தாள். கடைகளில் வேலை செய்யும் பெண்களைப் போல அவள் கருப்பு ஆடை உடுத்தியிருந்தாள். சாதாரண தொப்பிக்கு அடியில் கருத்த அழகிய கூந்தல் கழுத்துவரை தொங்கிக்கொண்டிருந்தது. சுயமரியாதையுடைய வேலைக் காரப் பெண்களுக்கு எடுத்துக்காட்டானவளைப்போல் அவள் தோற்றமளித்தாள்.

வாலிப சாண்டலருக்குத் திடீரென்று ஒரு எண்ணம் ஏற் பட்டது. அந்த யுவதியைத் தன்னுடன் சாப்பிட வரும்படி அழைக்கலாமா என்று எண்ணினான். அவனுடைய ஆடம் பரத்திற்கும் மகிழ்ச்சிக்கும் இது ஒன்றுதான் குறையாக இருந்தது. அந்த அழகிய யுவதி அவனுடன் சாப்பிட வந் தால் எவ்வளவோ நேர்த்தியாக இருக்கலாம்; அவனுடைய

மகிழ்ச்சியும் உன்னதமான நிலையை அடையலாம். அந்தப் பெண்ணும் பேசும் முறையிலிருந்தே ஒரு பெரிய இடத்தைச் சேர்ந்தவள் என்று தெரிகிறது. இதில் சந்தேகமே இல்லை. அவள் எளிய ஆடை உடுத்தியிருந்தாலும் அவளுடன் சேர்ந்து சாப்பிட சாண்டலர் விரும்பினான்.

அவளைச் சாப்பிட வரும்படி அழைக்க உடனே முடிவு செய்தான் சாண்டலர். இது மரியாதைக் குறைவான செய்கைதான். ஆனால் கூலி வேலை செய்து வாழ்க்கை நடத்தும் பெண்களைப் பொறுத்தவரை மரியாதைக் குறைவிற்கு இடமே இல்லை. இத்தகைய பெண்கள் பொதுவாக ஆண்களைப்பற்றி நன்கு அறிந்துகொள்ளக் கூடியவர்களாக இருப்பார்கள். அவர்களே ஒன்றை முடிவு செய்வார்களே தவிர, பயனற்ற கட்டுத் திட்டங்களைக் கவனிக்கமாட்டார்கள். அவனுடைய பத்து டாலர்களின் மூலம் இருவரும் ஆடம்பரமாகச் சாப்பிட முடியாது. ஆனால் அந்தப் பெண்ணின் வாழ்க்கையில் என்றைக்கும் நினைவிலிருக்கும் வண்ணம் சாப்பாடு அமையும் என்பதில் சந்தேகமே இல்லை. அவளுடைய பாராட்டுதல்கள் சாண்டலரின் மகிழ்ச்சியை அதிகரிக்கவே செய்யும்.

"உங்கள் காலுக்கு நீண்ட நேர ஓய்வு தேவை என்று நினைக்கிறேன். அதே சமயம் அதற்காக நான் ஒரு யோசனையைக் கூறுகிறேன். நீங்கள் இங்கே வந்து சறுக்கி விழும் சமயம் நான் தனியாகச் சாப்பிடப் போய்க்கொண்டிருந்தேன். நீங்கள் இப்போது என்னுடன் சாப்பிட வந்தால் பேசிக்கொண்டே சந்தோஷமாகப் பொழுதைப் போக்கலாம். அதே சமயம் நீங்களும் நன்றாக ஓய்வு எடுத்துக் கொண்டது போலாகும். பிறகு ஒரு கவலையுமின்றி நீங்கள் வீடு போய்ச் சேரலாம்" என்றான்.

அந்தப் பெண் சாண்டலரை அன்பு நிறைந்த கண்களால் பார்த்தாள். அவளுடைய கண்கள் ஒரு முறை மின்னின. உதடுகளில் புன்முறுவலும் தோன்றியது. "ஆனால் நாம் இருவரும் முன்பின் தெரியாதவர்களாயிற்றே? அதனால் நீங்கள் என்னைச் சாப்பிட அழைப்பதும், நான் வருவதும் முறையாகுமா?" என்று கேட்டாள்.

"இதில் தவறே இல்லை; நானே என்னை அறிமுகம் செய்து கொள்கிறேன். என் பெயர் சாண்டலர். சாப்பாட்டிற்குப் பிறகு உங்களிடம் விடை பெற்றுச் செல்கிறேன்; அல்லது உங்களை வீடுவரை கொண்டுவிட்டுப் போகிறேன்."

"மேலும் ஒன்று. நான் இந்தப் பழைய ஆடையுடன் வந்தால் எப்படியிருக்கும்?"

"அதைப்பற்றிக் கவலைப்படாதீர்கள். சாப்பிடச் செல்லும் ஓட்டலில் நாம் பார்ப்பவர்களைவிட நீங்களே வெகு நேர்த்தியானவராகக் காணப்படுவீர்கள்; இதில் சந்தேகமே இல்லை."

"என் கால் இன்னமும் வலித்துக்கொண்டே இருக்கிறது. உங்கள் விருப்பத்தை என்னால் ஏற்றுக்கொள்ளாமல் இருக்க இயலவில்லை. என்னை மேரி என்று அழையுங்கள்."

"நல்லது; வாருங்கள் மேரி" என்று அழைத்தான் சாண்டலர். அவன் குரலில் மரியாதைக் குறைவாக எதுவும் தென்படவில்லை. "நீங்கள் அதிக தூரம் நடக்க வேண்டாம். சிறந்த ஓட்டல் பக்கத்திலேயே இருக்கிறது. என் தோளைப் பற்றிக்கொண்டே நீங்கள் மெள்ள நடந்து வரலாம். தனியாகச் சாப்பிடுவதே மிகவும் துன்பமயமானது. இதனால் நீங்கள் சறுக்கி விழுந்தது கண்டு நான் சிறிது மகிழ்ச்சியடைகிறேன்" என்றான் சாண்டலர்.

இருவரும் மெள்ள நடந்து வந்து ஓட்டலை அடைந்தார்கள். அவர்களுக்கு விருப்பமானவற்றை வரவழைத்து உண்ணத் தொடங்கினர். சாண்டலர் உண்மையிலேயே மகிழ்ச்சி தன்னை மறந்து இருந்தான். அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி உன்னதமானதாகத் தோன்றியது.

அடுத்த தெருவிலிருக்கும் ஓட்டலுடன் இதை ஒப்பிடும் போது ஒன்றுமே இல்லை எனலாம். அப்படியும் அன்று சாண்டலர் மகிழ்ச்சியடைந்திருந்தான். எளிய உடை உடுத்திய மேரி, அவனுடன் சாப்பிட்டது இயற்கையிலேயே மகிழ்ச்சியை அளித்தது. மேலும் அந்த உடையிலேயே அவள் மிகவும் அழகாகக் காணப்பட்டாள். அவளும் சாண்டலரை உற்று நோக்கினாள். சுய மரியாதையுடன் கூடிய அவளது நீல நிறக் கண்கள் அவனை அளவு மீறி பாராட்டும்படி செய்தன.

சாண்டலர் தற்புகழ்ச்சியாகப் பேசத் தொடங்கினான். பெரிய பணக்காரனுடைய மகனைப் போலவும், ஆடம்பரமாக வாழ்க்கை நடத்தி வருவதாகவும், வேலை ஒன்றும் செய்யாமல் பொழுது போக்குக்காக சங்கங்களில் சேர்ந்தும் ஆடிப்பாடி வருவதாகவும் சொன்னான்.

''இவ்விதமாகவா நீங்கள் வாழ்க்கை நடத்துகிறீர்கள்? ஒரு குறிக்கோளோ பயனோ இல்லாமலா காலத்தை வீணாக்கி வருகிறீர்கள்? உங்களுக்கு விருப்பத்தையும் நன்மையையும் அளிக்கக்கூடிய தொழில் உலகத்தில் எதுவுமே இல்லையா?'' என்று மேரி கேட்டாள்.

''தொழிலா, வேலையா? தினமும் விருந்துகளுக்குச் செல்ல இவ்விதம் ஆடம்பரமாக ஆடை உடுத்துகிறேன். குறைந்தது ஆறு ஏழு பேர்களையாவது சந்திக்கச் செல்கிறேன். தொழிலாளிகள் கடுமையாக உழைக்கும்போது நாம் ஒன்றுமே செய்வதில்லை'' என்றான் சாண்டலர்.

சாப்பாடு முடிந்தது; ஓட்டல் சிப்பந்தி நல்ல ஆகாரங்களாகக் கொண்டு கொடுத்துச் சாப்பிடச் செய்தான். இருவரும் மெள்ள எழுந்து முன்பு சந்தித்த இடத்திற்கு வந்தார்கள். மேரியால் நன்றாக நடக்க முடிந்தது. காலின் வலி அடியோடு மறைந்தது.



''தங்களுடன் நல்லவிதமாகப் பொழுதைப் போக்கியதற்கு நன்றி. இப்போது நான் வீட்டிற்குச் சென்றே ஆக வேண்டும். நீங்கள் அளித்த விருந்து உன்னதமானது'' என்றாள் மேரி.

அவள் கையைப் பற்றிப் புன்முறுவல் செய்துகொண்டே குலுக்கினான் சாண்டலர். சங்கத்தில் அவன் விளையாடும் ஆட்டத்தைக் குறித்துச் சொன்னான். மேலும் அவளுடைய சங்கம் இருக்குமிடம்வரை அவளுடன் வந்தான். பிறகு அவளுக்கு விடை கொடுத்து அனுப்பினான். அவள் போவதையே கவனித்துக்கொண்டிருந்தான். பார்வைக்கு அவள் மறைந்ததும் ஒரு வண்டியை அமர்த்திக்கொண்டு வீடு வந்து சேர்ந்தான்.

குளிர் அதிகமாக இருந்த தன் அறையில் அடுத்த அறுபத்தி ஒன்பது நாட்களுக்குப் பிறகு அணியப் போகும் ஆடையுடன் படுத்திருந்தான். அவனுடைய சிந்தனை வேலை செய்யத் தொடங்கிற்று.

'அவள் என்னைத் திகைக்க வைக்கக்கூடியவள்தான். ஆனால் நல்லவள். எந்த வேலை செய்து வந்தாலும் கவலையில்லை. நான் உண்மையைச் சொல்லியிருக்கலாம். வீணாக பொய்யைச் சொன்னேன். வீண் பெருமை அடித்துக் கொண்டேன். எப்படியிருந்தால் என்ன? உடுத்தியுள்ள ஆடைகளுக்கேற்ப நான் நடந்து கொள்வதுதான் முறைமையாகும்' என்று எண்ணினான். ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த அவன் இவ்விதம் நடந்துகொள்வதே சிறந்தது என்று தீர்மானித்தான்.

* * *

சாண்டலரை விட்டுப் பிரிந்த அந்த யுவதி வேகமாக நடந்தாள். விசாலமான வீதியில் பெரிய மாளிகையின் முன்னால் போய் நின்றாள். பிறகு மாளிகையினுள் நுழைந்து ஒரு அறைக்குச் சென்றாள். அந்த அறையின் ஜன்னலில் ஆடம்பரமான ஆடை உடுத்திய ஒரு யுவதி ஆவலுடன் வெளியே பார்த்துக்கொண்டிருந்தாள்.

யுவதி உள்ளே வந்ததைக் கண்டதும் அவள், "என்ன பைத்தியக்காரத்தனம்! இப்படித்தான் எங்களைப் பயப் படும்படி செய்வதா? மேரியின் ஆடை, தொப்பியுடன் நீ சென்று இரண்டு மணி நேரமாகிறது. அம்மா பயந்தே போய்விட்டாள். லூயியை உன்னைத் தேடி அழைத்து வர வண்டியில் அனுப்பியிருக்கிறாள். நீ ஒரு முட்டாள். எதையும் சிந்தித்துப் பார்க்காதவள்'' என்றாள். பிறகு அவள் ஒரு பித்தானை அழுத்தினாள். வேலைக்காரி உடனே அங்கு தோன்றினாள்.

''மேரி, அம்மாவிடம் போய் தங்கை வந்துவிட்டாள் என்று சொல்'' என்றாள் வீட்டிலிருந்த யுவதி.

''அக்கா, என்னைக் கோபித்துக்கொள்ளாதே; தியோ சீமாட்டியிடம் ஒரு செய்தியைச் சொல்லச் சென்றேன். எனக்கு மேரியின் ஆடையும் தொப்பியும் அதற்குத் தேவை யாக இருந்தது. நான் அந்தஆடையை அணிந்து சென்றதைக் கண்ட அனைவரும் என்னைக் கடைகளில் வேலை செய்யும் பெண் ணாகவே நினைத்துவிட்டார்கள்'' என்றாள் சாண்டலருடன் சாப்பிட்ட யுவதி.

''நீ அதிக நேரம் வெளியில் தங்கியதால் சாப்பாடு எல்லாம் தீர்ந்துவிட்டது'' என்றாள் அக்கா.

''எனக்கு அது தெரியும்; வழியில் கால் சறுக்கி விழுந்து விட்டேன். அதனால் என் ஒரு காலில் அதிக வலியாக இருந்தது. என்னால் நடக்கவும் இயலவில்லை. ஒரு ஓட்ட லுக்குச் சென்று வலி குறையும்வரை உட்கார்ந்திருந்தேன். அதிக நேரம் தாமதமானதற்கு இதுதான் காரணம்!''

இரண்டு பெண்களும் ஜன்னல் அருகில் உட்கார்ந்து கொண்டார்கள். தெருவில் எரியும் விளக்குகளையும் வேக மாகச் செல்லும் வண்டிகளையும் பார்த்துக்கொண்டிருந் தார்கள். சாண்டலருடன் சாப்பிட்ட யுவதி தன் சகோதரி யின் தோளில் தலையைச் சாய்த்துக்கொண்டாள். பிறகு, ''நாம் என்றாவது ஒரு நாள் ஒருவரை மணந்தே தீர



வேண்டும்; நம்மிடம் ஏராளமாகப் பணம் இருக்கிறது. பொதுமக்கள் நம்மால் ஏமாற்றமடையக் கூடாது. எத் தகைய ஒருவனை நான் மணக்க விரும்புகிறேன், சொல் லட்டுமா?'' என்றாள்.

''போடி முட்டாள்'' என்று புன்முறுவல் செய்து கொண்டே சொன்னாள் மூத்த சகோதரி.

''நீல நிறக் கண்களும், ஏழைப் பெண்களிடம் அன் புடனும் நடந்து கொள்பவனையே நான் நேசிக்கவும் மணக்கவும் விரும்புகிறேன். காதலை ஒரு கேலிக் கூத்தாகக் கருதுபவனை நான் மணக்கவே மாட்டேன். ஆனால் நான் மணக்க விரும்புபவன் வாழ்க்கையில் ஒரு குறிக்கோளும் முன்னேற வேண்டும் என்ற ஆவலும் உள்ளவனாக இருக்க வேண்டும். உலகத்தில் ஏதாவது தொழிலைச் செய்து வர வேண்டும். அவன் எவ்வளவு ஏழையாக இருந்தாலும் எனக்குக் கவலையில்லை. அவன் வாழ்க்கையில் முன்னேற நான் உதவி புரிவேன். ஆனால் நாம் பெரும்பாலும் சந்திக்கும் வாழ்க்கையில் ஒரு குறிக்கோளுமில்லாமல் வீணில் பொழுது போக்குபவன், நீல நிறக் கண்களுடனும் தெருவில் சந்தித்த ஏழைப் பெண்களிடம் அன்புடன் நடந்து கொண்டாலும் அவனை மணக்கவே மாட்டேன்'' என்றாள்.

# 16. சிறந்த அறை

அந்த மாவட்டத்தில் ஒரு குறிப்பிட்டவர்கள் அடிக்கடி குடி மாறிக்கொண்டே இருக்கிறார்கள். வீடில்லாத அவர்களுக்கு ஆயிரக்கணக்கான வீடுகள் இருக்கின்றன. எல்லா வசதிகளையுமுடைய ஒரு வீட்டைவிட்டு மற்றொன்றிற்குக் குடி மாறிக்கொண்டே இருப்பார்கள். வீட்டை மாத்திரம் என்பதல்ல; உள்ளத்தையும் எண்ணங்களையும்கூட மாற்றிக் கொள்வார்கள். ''இனிமையான இல்லம்'' என்றும் ஒவ்வொரு புது வீட்டிற்குக் குடி போன சமயமும் பாடுவார்கள்.

அப்படியும் அந்த மாவட்டத்து வீடுகளில் ஆயிரக்கணக்கான குடித்தனக்காரர்கள் இருந்தார்கள். அவர்கள் வசிக்கும் வீட்டைக் குறித்து ஆயிரக்கணக்கான கதைகளும் இருக்கலாம். அவை சலிப்பை அளிப்பதாகவே இருக்கலாம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அவற்றில் ஒரு பேயோ பூதமோ இல்லாதிருப்பதுதான் விசித்திரமாகத் தோன்றலாம்.

ஒருநாள் மாலை மங்கிய நேரத்தில் இந்த மாவட்டத்தின் பெரிய கற்கட்டிடங்களுள்ள தெருவிற்கு ஒரு வாலிபன் வந்தான். ஒவ்வொரு வீட்டின் மணியையும் அசைத்தான். பன்னிரண்டாவது வீட்டின் மணியை அசைத்து விட்டுக் கைப்



பையைக் கீழே வைத்தான். தலையிலிருந்த தொப்பியைக் கழட்டினான். நெற்றியிலும், தொப்பியின் விளிம்பிலும் இருந்த வியர்வையைத் துடைத்தான். அவன் அசைத்த மணியின் நாதம் வீட்டின் எங்கோ ஒரு மூலைக்குச் சென்று மெள்ள ஒலித்தது. அது பெரிய ஆழமுள்ள சுரங்கத்தினுள் மணி அடிப்பதுபோல் தோன்றியது.

அவன் மணி அசைத்த வீட்டின் சொந்தக்காரி வந்தாள். அவளைக் கண்டதும் வாலிபன், ''வாடகைக்கு அறை கிடைக்குமா?'' என்று கேட்டான்.

''உள்ளே வாருங்கள்'' என்றாள் வீட்டின் சொந்தக்காரி. அவளுடைய குரல் தொண்டையிலிருந்தே வந்தது. அது தொண்டையினுள் கம்பளம் சுற்றப்பட்டதுபோலத் தோன்றியது. ''வீட்டின் பின்புறம் மூன்றாவது மாடியில் ஒரு அறையிருக்கிறது; அது காலியாகி ஒரு வாரமே ஆகிறது. அதை எடுத்துக் கொள்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

வாலிபன் சம்மதம் தெரிவித்தான். பிறகு அவளைப் பின்தொடர்ந்து நடந்தான். கூடத்தைக் கடக்கும் சமயம் அங்கு எங்கிருந்தோ மங்கலான ஒளி உள்ளே பாய்ந்து வந்து கொண்டிருந்தது. அவர்கள் இருவரும் கம்பளம் விரிக்கப்பட்ட மாடிப்படிகளில் சந்தடியின்றி ஏறிச் சென்றார்கள். கம்பளமோ காலப்போக்காலும், புழுபூச்சிகளாலும் மெலிந்து, இன்றோ, நாளையோ என்ற நிலையில் அழியும் தருவாயில் இருந்தது. மாடிப்படிகளின் ஒவ்வொரு திருப்பத்திலும் சுவரில் ஒரு மாடம் இருந்தது. ஒரு வேளை அவற்றில் செடிகள் இருந்திருக்கலாம். அப்படியானால் அவை அந்த இடத்தின் மோசமான காற்றினாலேயே ஒழிந்து போயிருக்கலாம். அந்த மாடங்களில் மகான்களின் உருவச் சிலைகள் வைக்கப்பட்டிருக்கலாம். ஆனால் அவ்விதம் மகான்களின் உருவச் சிலைகளை வைத்திருந்தால் பேய்கள், குட்டிச்சாத்தான் ஆகியவை அவற்றை இருட்டிலும் ஆழம் காண முடியாத பள்ளங்களிலும் இழுத்துச் சென்று மறைத்திருக்கலாம்.

கடைசியாக காலியாகவுள்ள அறையை அடைந்ததும் வீட்டின் சொந்தக்காரி தொண்டையைச் சரிசெய்து கொண்டு, ''இந்த அறைதான். இது மிகவும் சிறந்த அறை. அநேகமாக இது காலியாக இருக்காது. சென்ற கோடை காலத்தில் இந்த அறையில் சில புகழ்பெற்றவர்கள் வந்து தங்கியிருந்தனர். ஒருவித தொல்லையும் கிடையாது. வாடகையையும் முன்னதாகவே கொடுத்து வந்தனர். கூடத்தின் கடைசி பாகத்தில் தண்ணீர் இருக்கிறது. ஸ்போரோவும் மோனியும் இந்த அறையில் மூன்று மாதங்கள் வசித்து வந்தனர். ஸ்போரோவைக் குறித்து நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். ஆமாம், நாடக நடிகை தான். உடைகளை மாட்டும் வளையத்திற்கு வலது பக்கம் கலியாண அத்தாட்சிப் பத்திரம் கண்ணுடி போட்டு மாட்டப்பட்டிருக்கிறது. அடுப்பு எரிக்கும் வாயு இருக்கிறது. சாமான்கள் வைக்க மேஜையில் பல அறைகள் இருக்கின்றன. எல்லா வசதிகளுடன் கூடிய இந்த அறையையே அனைவரும் விரும்புகின்றனர். இந்த அறை அநேகமாகக் காலியாக இருக்காது'' என்ருள்.

''நாடகங்களில் நடிப்பவர்கள் இங்கு அதிகமாக வந்து தங்குகிருர்களா?'' என்று வாலிபன் கேட்டான்.

''ஆமாம்; அவர்கள் வருவார்கள், போவார்கள். என் வீட்டில் குடி வருபவர்களில் பெரும்பாலானவர்கள் நாடகக் கலையில் சம்பந்தப்பட்டவர்களாகவே இருப்பர். இந்த மாவட்டமே நாடகக் கலைஞர்கள் நிறைந்ததுதான். நடிகர்கள் ஒரே இடத்தில் அதிக நாட்கள் தங்கியிருக்கமாட்டார்கள். எனக்கு என் பங்கு கிடைக்கிறது. அவர்கள் வருவார்கள்; போவார்கள்.''

வாலிபன் அந்த அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டான். ஒரு வார வாடகையையும் முன்பணமாகக் கொடுத்தான். அவன் மிகவும் களைப்படைந்திருந்தான். அதனுல் அறையையும் உடனேயே வசப்படுத்திக்கொண்டு



தங்க முற்பட்டான். அறையில் தண்ணீரும், துடைத்துக் கொள்ள துவாலையும்கூட இருந்தது. வீட்டுக்காரி அங்கிருந்து போவதற்குள் அவன் ஆயிரம் முறை ஒரே கேள்வியைத் திரும்பத் திரும்பக் கேட்டான். ''யுவதி, எலிஸி வாஷனர். உங்கள் வீட்டிற்குக் குடி வந்தவர்களில் இந்தப் பெயருள்ளவள் யாராவது இருந்தாளா? இவள் நாடகங்களிலும் மேடைகளிலும் மிகவும் இனிமையாகப் பாடுவாள். அழகாக இருப்பாள். நடுத்தர உயரமாகவும் நல்ல சிவப்பாகவும் இருப்பாள். அவளுடைய கூந்தல் பொன் நிறமாக இருக்கும். இடது புருவத்திற்கு அருகில் ஒரு வடு இருக்கும். இவளைப் பார்த்திருக்கிறீர்களா? உங்கள் வீட்டில் இவள் குடியிருந்தாளா?'' என்று கேட்டான்.

''நீங்கள் கூறும் பெயரை நான் கேட்டதாக நினைவில்லை. இருப்பிடங்களைப் போலவே அவர்கள் அடிக்கடி தங்கள் பெயரையும் மாற்றிக்கொண்டே இருப்பார்கள். அவர்கள் திடீரென்று வருவார்கள்; அதேபோல போய்விடுவார்கள். ஆமாம்; யாருக்குமே அவர்களுடைய பெயர்கள் நினைவிருக்காது'' என்ருள் வீட்டின் சொந்தக்காரி.

வாலிபன் கடந்த ஐந்து மாதங்களாக யுவதி வாஷனரைக் குறித்து எங்கெல்லாமோ தேடினுன். பலரிடம் கேட்டான். எங்கும் அவள் காணப்படவில்லை! யாருமே அவளைப் பற்றிக் கூறவில்லை. பகல்வேளை முழுவதும் அவளைப் பல இடங்களுக்குச் சென்று தேடுவான்; கண்டவர்களிடமெல்லாம் கேட்பான். இரவிலோ, நாடகம், சங்கீதக் கச்சேரி ஆகிய இடங்களுக்குச் செல்வான். அவன் தேடி வந்தவள் எங்கும் அகப்படமாட்டாள்; அவளை நேசித்த அவன் சோர்வடைந்தான். அந்த யுவதி வீட்டைவிட்டு வெளியேறிய பிறகு இந்த நகரம் அவளை எங்கோ மறைத்து வைத்திருக்கிறது என்று அவன் பூர்ணமாக நம்பினுன்.

வஞ்சக நெஞ்சமுள்ள அந்த எல்லா வசதிகளையுமுடைய அறை தனது விருந்தாளியைப் புன்முறுவல் செய்து வரவேற்றது. அது அளிக்கவிருக்கும் வசதிகள் உளுத்து மடிந்து

கொண்டிருக்கும் மேஜை, நாற்காலி ஆகியவற்றிலேயே அடங்கியிருந்தன. மேலும் ஒரு முகம் பார்க்கும் பழைய கண்ணாடி, இரண்டு படங்கள், இரண்டு ஜன்னல்கள், ஒரு மூலையில் போடப்பட்டிருந்த பித்தளைக் குமிழ்களுள்ள கட்டில் முதலியவையும் இருந்தன.

வாலிபன் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து சாய்ந்து கொண்டான். அதே சமயம் அந்த அறையோ குழப்பமான நிலையில் உள்ளதுபோல் பேச முடியாமல் தட்டுத் தடுமாறி தன்னிடம் குடியிருந்த விசித்திரமானவர்களைக் குறித்துச் சொல்ல முயற்சித்தது.

சுவரில் சித்திர வேலைப்பாடுகள் நிரம்பிய காகிதம் ஒட்டப்பட்டிருந்தது. பூவேலை செய்யப்பட்ட திரைச் சீலைகள் பல இடங்களில் தொங்கிக் கொண்டிருந்தன.

அறையிலிருந்த பொருள்கள், சித்திரங்கள், திரைச் சீலைகள் ஆகியவை வாலிபனின் உள்ளத்தில் ஒரு எண்ணத்தை உருவாக்கின. உடை உடுக்கும் இடத்திற்கு முன்னாலுள்ள திரைச்சீலையின் முனை ஒரு அழகான மங்கை இந்தப் பக்க மாகச் சென்றாள் என்று கூறியது. சுவரிலிருந்த மெல்லிய விரல்களின் சின்னங்கள் அறையினுள் அடைந்து கிடந்தவள் காற்று, சூரியன் இரண்டைக் குறித்து என்ன நினைத்தாள் என்பதைத் தெரிவித்தது. சுவரில் படிந்திருந்த கறை, புட்டி அல்லது கண்ணாடி டம்ளரிலிருந்த பொருள் அங்கு ஊற்றப் பட்டது என்ன என்பதைப் புலப்படுத்திற்று. இரண்டு கண்ணாடிகளில் வைரத்தால் ''மேரி'' என்று பெயர் பொறிக்கப்பட்டிருந்தது. அறையிலிருந்த ஒவ்வொன்றும் அதில் குடியிருந்தவர் திடீரென்று ஆத்திரமடைந்ததையே எடுத்துக் காட்டிற்று.

மேஜை நாற்காலிகளின் ஓரங்கள் கத்தியால் சேதப் படுத்தப்பட்டிருந்தன. இதே போல அங்கிருந்த பல பொருள்கள் உடைந்தும், பாழாக்கப்பட்டுமிருந்தன. இந்த அறையைத் தனது இல்லம் என்று கூறிக்கொண்டு சிலகாலம்



வசித்தவர்களாலேயே அவ்விதம் நாசமாக்கப்பட்டன என்பது நன்கு தெரிந்தது.

நாற்காலியில் உட்கார்ந்திருந்த வாலிபன் தன் சிந்தனையை அதன் போக்கில் ஓடவிட்டான். அவனது கவனம் அந்த அறையை விட்டும் வெளியே சென்றது. அந்தப் பெரிய வீட்டின் ஏதோ ஒரு அறையிலிருந்து அலட் சியமாக யாரோ சிரிப்பதன் ஒலி கேட்டது. வேறு ஒன்றில் யாரையோ குறை கூறுவதும், குழந்தையைத் தூங்க வைக்கத் தாலாட்டுப் பாடுவதும் கேட்டது. எங்கோ கதவு தட்டப்பட்டது. அடிக்கடி ரயில்கள் வேகமாகப் போய்க் கொண்டிருந்தன. பின்புறத்திலிருந்து ஒரு பூனை துயரம் நிரம்பிய குரலில் கத்திக் கொண்டிருந்தது. வாலிபன் பெரு மூச்சு விட்டான். அவன் மூச்சை உள்ளே இழுத்த சமயம் அறையிலுள்ள மக்கி மடிந்துகொண்டிருந்த மரச் சாமான் களின் வாசமே போயிற்று.

திடீரென்று அந்த அறையில் வெகு நேர்த்தியான வாசனை வீசத் தொடங்கிற்று. திறந்திருந்த ஜன்னல் வழியே வந்த காற்றிலேயே அந்த வாசனை கலந்திருந்தது. அது யாரோ ஒரு உயிரினம் போலவும் தோன்றியது. யாரோ ஒருவன், ''என்ன அன்பே?'' என்று வாலிபனைக் கேட்பது போல உரத்த குரலில் சொன்னான். வாலிபன் உடனே துள்ளி எழுந்து நின்றான். உள்ளே வந்த நேர்த்தியான வாசம் அவன் உடல் முழுவதும் கவிந்துகொண்டது. அந்தக் கணம் வாலிபன் குழப்பமடைந்து தன் மனதைக் கட்டுப் படுத்தும் தன்மையையும் இழந்துவிட்டான். ஒரு வாசனை ஒருவனைக் கீழ்ப்படியும் வண்ணம் அழைக்க முடியும்? உண்மையில் அது ஏதாவது சப்தமாக இருக்கலாம். ஆனால் அவனைத் தீண்டி, அவனுக்குக் அதைக் காட்டியது அந்த ஒலி இல்லையா?

''அவள் இந்த அறையில் வசித்திருக்கிறாள்'' என்று வாலிபன் உரத்த குரலில் சொன்னான். அவனைக் கலந்துள்ள வற்றிலிருந்து விடுபடப் போராடினான். மேலும் அவளுக்குச்

சொந்தமான ஒவ்வொரு சிறு பொருளேயும் அவனுக்குத் தெரியும். அவள் கைபட்ட ஒவ்வொன்றையும் அவன் அறிவான். அவனைச் சூழ்ந்துள்ள வாசமும் அவளால் நேசிக்கப்பட்டு, அவளுடையதாகவே செய்துகொண்டது அல்லவா?

அறையிலிருந்த சாமான்கள் அலங்கோலமாக வைக்கப்பட்டிருந்தன. அறையும் சுத்தம் செய்யப்படாமலே இருந்தது. ஆடை உடுத்துமிடத்தில் பல கொண்டை ஊசிகள் தரையில் கிடந்தன. பெண்கள் உபயோகிக்கும் அவற்றை அடையாளம் தெரிந்துகொள்ள முடியாது என்ற காரணத்தால் அலட்சியமாகவிட்டான். மேஜையிலுள்ள அறைகளில் ஒன்றைத் திறந்தான். அதில் ஒரு கைக்குட்டை காணப்பட்டது. அதை எடுத்து முகர்ந்தான். அதில் ஒரு வாசமுமில்லாததால் கீழே போட்டான். மற்ருெரு அறையில் சில பித்தான்கள். ஒரு நாடகக் கொட்டகையின் கால அட்டவணை, அடகு வைத்த பொருளின் குறிப்பு, கனவுகளின் பலன்களைக் கூறும் ஒரு புத்தகம் ஆகியவை இருந்தன. புத்தகத்தினுள் கூந்தலை அள்ளி முடியும் கருப்புப் பட்டு நூல் வளையும் இருந்தது. ஆனால் அது ஒரு கதையையும் கூறவில்லை.

அதன் பிறகு வேட்டை நாய்போல் அந்த அறை முழுவதும் மோப்பம் பிடித்துக்கொண்டு திரிந்தான். ஒவ்வொரு மூலை முடுக்கிலும் கையையும், காலையும் விட்டுத் துழாவினுன். மண்டியிட்டும், படுத்தும் பல இடங்களை உற்று நோக்கினுன். எங்காவது அவள் இருக்கலாம் என்று தேடினுன். அங்கிருந்த ஒவ்வொரு பொருளும் அவனை அழைப்பதுபோலவே இருந்தது. அவனுக்கும் அவற்றிற்குப் பதில் கூறவேண்டும் என்று தோன்றிற்று. மீண்டும் ஒரு முறை அவன், ''ஆம், அன்பே'' என்று பதில் கூறினுன். திரும்பி கண்களை அகல விழித்து நாலா பக்கங்களிலும் பார்த்தான். அங்கு அந்த வாசனையைத் தவிர அவனை அன்புடன் அணைத்துக் கொள்ளவோ, தீண்டவோ கைகளை நீட்டிய



தாகத் தெரியவே இல்லை. 'வாசனைக்கு ஒருவனை அழைக்க சக்தியிருக்குமா?'—வாலிபன் இவ்விதம் எண்ணினுன்.

ஒரு மூலையில் குனிந்து பார்த்தான். புட்டிகளை மூடும் நெட்டி மூடிகளும், சிகரெட்டு துண்டுகளும் தென்பட்டன. இவற்றை அவன் அலட்சியமாக ஒதுக்கித் தள்ளினுன். ஆனுல் ஒரு இடத்தில் பாதி பிடித்து அணைத்துப் போட்டிருந்த சுருட்டு காணப்பட்டது. அதைப் பார்த்த பிறகு அறையின் ஒவ்வொரு பகுதியையும் உன்னிப்பாகப் பார்த்தான். அந்த அறையில் குடியிருந்த பலருடைய கடிதங்கள், குறிப்புகள், ரசீதுகள்—கிடைத்தன. ஆனுல் அங்கு குடியிருந்ததாக அல்லது அவளுடைய ஆவி வளைய வந்துகொண்டிருப்பதாக நம்பும் அவளைப்பற்றிய விவரத்தைக் கூறும் ஏதும் அகப்படவே இல்லை.

உடனே அவனுக்கு வீட்டுக்காரியின் நினைவு வந்தது. அவன் அந்த அறையைவிட்டுக் கீழே சென்ருன். அங்கு ஒரு அறைக் கதவின் இடைவெளியிலிருந்து விளக்கொளி தென்பட்டது. அவன் கதவு தட்டியதும் வீட்டுச் சொந்தக்காரி வெளியே வந்தாள். வாலிபன் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தை வெளியிடத் தொடங்கினுன். ''எனக்கு முன்னதாக அந்த அறையில் யார் குடியிருந்தது என்று சொல்லுங்கள்?'' என்ருன்.

''நல்லது; சொல்கிறேன். ஸ்போரோ, மோனி என்ற இருவர் இருந்தனர். இருவரும் நாடகத்தில் நடித்து வந்தனர். என் வீடு கௌரவமானது. சரியான அத்தாட்சிப் பத்திரம்...'' என்ருள் வீட்டுக்காரி.

''ஸ்போரோ எப்படியிருப்பாள்?'' என்று குறுக்கிட்டான் வாலிபன்.

''குள்ளமாகவும், கூந்தல் கருப்பாகவும், புன்முறுவல் பூத்த முகத்துடனும் இருப்பாள். அவர்கள் ஒரு வாரத்திற்கு முன்பே சென்ருர்கள்.''

''அவர்களுக்கு முன் யார் குடியிருந்தது?''

"ஒரு வியாபாரி குடியிருந்தான். ஒரு வார வாடகை கொடுக்காமல் அவன் சென்றுவிட்டான். அவனுக்கு முன்னால் ஒரு பெண்மணி தன் இரண்டு குழந்தைகளுடன் நான்கு மாதங்கள் இருந்தாள். அதற்கும் முன்னால் வயதான டோயில் என்பவன் இருந்தான். அவனுடைய பிள்ளைகள் எனக்கு வாடகையைக் கொடுத்தார்கள். அவன் ஆறு மாத காலம் அந்த அறையில் வசித்து வந்தான். அதற்கும் முன்னால்...எனக்கு நினைவில்லை" என்றாள் வீட்டுக்காரி.

வாலிபன் அவளுக்கு நன்றி கூறிவிட்டுத் தன் அறைக்குத் திரும்பி வந்தான். அப்போது அந்த அறை சந்தடியின்றியிருந்தது. அங்கு வீசி வந்த வாசமும் மறைந்துவிட்டது. மக்கி மடிந்துகொண்டிருந்த மரச் சாமான்களின் நாற்றமே வீசிக் கொண்டிருந்தது.

வாலிபனுடைய நம்பிக்கை மறைந்தது. அவன் உட்கார்ந்து எதிரேயிருந்த விளக்கைப் பார்த்தான். அது உஸ் என்று கூவியவண்ணம் எரிந்துகொண்டிருந்தது. அவன் எழுந்து படுக்கையின் அருகில் சென்றான். அதன் போர்வையைக் கிழித்தான். கத்தியின் உதவியைக்கொண்டு ஜன்னல், கதவு ஆகியவற்றின் இடைவெளிகளில் போர்வைக் கந்தையை வைத்துத் திணித்தான். எல்லாம் முடிந்த பிறகு விளக்கை அணைத்தான். அடுப்பு எரிக்க உபயோகிக்கும் கரி வாயுவின் மரையைத் திருப்பி விட்டான்; பிறகு படுக்கையில் போய் படுத்துக்கொண்டான்.

* * *

வீட்டுக்காரி பூர்டி இரவு வேளைகளில் சாராயம் பருக வெளியே போகும் பழக்கமுள்ளவள். இவளைப்போல் வீட்டுச் சொந்தக்காரிகள் பலரும் ஒரு ஓட்டலில் கூடுவார்கள். அன்றும் அப்படியே அவர்கள் ஒன்றுகூடி சாராயம் பருகத் தொடங்கினர். அச்சமயம் பூர்டி பெருமையாக, "இன்று மாலை என் வீட்டு மூன்றாவது மாடியில் பின்புற



முள்ள அறையை வாடகைக்கு விட்டேன். ஒரு வாலிபன் அதை எடுத்துக்கொண்டான். இரண்டு மணி நேரத்திற்கு முன்தான் அவன் படுக்கச் சென்றான்" என்றாள்.

"அத்தகைய அறையை வாடகைக்கு விடுகிறீர்களா? நீங்கள் அதைச் சொன்னீர்களா?" என்று மைக்கோல் கேட்டாள். ஏதோ மர்மமானதை அவள் ரகசியக் குரலில் வெளியிட்டாள்.

"வாடகைக்கு விடும் நோக்கத்துடனேயே அறைகள் எல்லா வசதிகளுடனும் இருக்கின்றன. நான் அவனிடம் சொல்லவில்லை."

"அதுதான் நல்லது; வாடகைக்கு அறைகளை விடுவதாலேயே நாம் உயிர் வாழ்கிறோம். உங்களுக்கு வியாபாரிகளுக்குள்ள அறிவு இருக்கிறது; ஒரு குறிப்பிட்ட அறையில் படுக்கையிலேயே ஒருவன் தற்கொலை செய்துகொண்டுவிட்டான் என்றால் சிலர் வாடகைக்கு எடுத்துக்கொள்ளவே மாட்டார்கள்."

"நாம் வாழ்க்கை நடத்தவே வீட்டை வாடகைக்கு விடவேண்டும் என்று சொன்னீர்கள் அல்லவா?"

"ஆமாம்; இன்றைக்கு ஏழு நாட்களுக்குமுன் உங்கள் வீட்டு மூன்றாவது மாடியிலுள்ள பின்புற அறையிலிருந்து ஒரு சடலத்தை அகற்ற நான் உதவவில்லையா? அந்த அழகான பெண் அடுப்பு எரிக்க உதவும் கரி வாயுவைக்கொண்டு தற்கொலை செய்துகொள்ளவில்லையா?"

"உன்னைப்போலவே அவளை அழகி என்று அழைத்தார்கள். ஆனால் அதனாலேயே அவள் இடது புருவத்தில் ஒரு மறு வளர்ந்து கொண்டிருந்தது...உங்கள் கோப்பையைச் சாராயத்தால் நிரப்புங்கள்" என்றாள் பூர்டி.

# 17. பண்டிகை பரிசு

ஒரு டாலர் எண்பத்தியேழு சென்ட்டுகளே இருந்தன. இதில் அறுபது சென்ட்டுகள் பென்னி நாணயங்களாக இருந்தன. இவை காய்கறி விற்பவர், மற்றும் சில்லறை வியாபாரிகளிடம் விடாப்பிடியாகப் பேரம் பேசி அவர்கள் கூறிய விலையிலிருந்து ஒன்று அல்லது இரண்டு பென்னிகளைக் குறைத்ததால் கிடைத்தவை. சேமிப்பிலிருந்த ஒரு டாலர் எண்பத்தியேழு சென்ட்டுகளை மூன்று முறை எண்ணினாள். அப்பொழுதும் அது அதற்குமேல் இருக்கவில்லை. மறு நாளோ கிறிஸ்துமஸ் பண்டிகை.

சும்மா படுத்துத் தூங்குவதையும் வாய்விட்டுப் புலம்பு வதையும் தவிர டெல்லாவுக்குச் செய்ய ஒன்றுமே இருக்க வில்லை. அவ்விதமே அவள் செய்தாள். அது வாழ்க்கையில் கண்ணீர் பெருக்குவது, பெருமூச்சு விடுவது, மூக்கை உறுஞ் சுவது, புன்முறுவல் செய்வது ஆகியவையே முக்கியமாக இருக்கின்றன என்பதை எடுத்துக் காட்டியது.

குடும்பத் தலைவி டெல்லாவின் முதல் அங்க வேலை முடிந்தது. அவள் வருத்தம் சிறிது தணிந்தது. உடனே அவள் இரண்டாவது அங்கத்தின் வேலைகளைக் கவனிக்கத் தொடங்கினாள்; தனது அறையைத் தலை நிமிர்ந்து பார்த்



தாள். வாரத்திற்கு எட்டு டாலர் வாடகை கொடுக்கும் அந்த அறை எல்லா வசதிகளுடனும் இருந்தது.

வரும் தபால்களைப் போட வெளிப்பக்கம் ஒரு பெட்டி யிருந்தது; ஆனால் அதில் டெல்லாவுக்கோ அவள் கணவ னுக்கோ ஒரு கடிதத்தைக்கூடத் தபால்காரர் போடுவதே இல்லை; தபால் பெட்டிக்கு அருகில் வீட்டின் உள்ளே இருப் பவர்களை அழைக்க மின்சார மணியை அடிக்கும் பித்தான் இருந்தது; அதை எந்த ஒரு மனிதனும் அழுத்தி டெல்லா வையோ அவள் கணவனையோ அழைத்ததே கிடையாது. மின்சார மணிப் பித்தானுக்குப் பக்கத்தில் "ஜேம்ஸ்" என்ற பெயர்ப் பலகையும் தொங்கிற்று.

முன்பு ஜேம்ஸுக்கு வாரத்தில் முப்பது டாலர் வரு மானம் வந்துகொண்டிருந்தது; இப்போது அது இருபது டாலராகக் குறைந்துவிட்டது. அதனால் பெயர்ப்பலகையி லுள்ள எழுத்துக்களும் மங்கத் தொடங்கிவிட்டன.

தனது நிலைமையைக் குறித்து வருத்தப்பட்டுக் கண்ணீர் பெருக்கிய பிறகு டெல்லா மெள்ள எழுந்து கண்களையும், கன்னங்களையும் துடைத்துக்கொண்டாள். அவள் எழுந்து ஜன்னல் பக்கம் சென்று வெளியே பார்த்தாள். அப்பொழுது ஒரு சாம்பல் நிறப் பூனை பின்புறமாகப் போய்க்கொண் டிருந்தது. நாளைக்கு கிறிஸ்துமஸ் பண்டிகை. அவளிடமோ ஒரு டாலர் எண்பத்தியேழு சென்ட்டுகளே இருந்தன. இதைக்கொண்டே கணவனுக்கு ஏதாவது பரிசு வாங்கிக் கொடுக்க வேண்டும். அவள் பல மாதங்களாக இந்தப் பெருந்தொகையைச் சேமித்து வந்தாள். வாரத்திற்கு இருபது டாலர் வருமானம் வந்தது. ஆனால் செலவோ அவள் போட்ட கணக்கிற்கும் மேலாகிற்று. கணவனுக்கு என்ன பரிசு வாங்கிக் கொடுப்பது என்று அவள் வெகு நேரம் சிந்தித்தாள். அவள் வாங்கிக் கொடுக்கும் பரிசு நேர்த்தி யானதாகவும் பயன்படக்கூடியதாகவும் இருக்க வேண்டும் என்று எண்ணினாள்.

அந்த அறையில் இரண்டு முகம் பார்க்கும் கண்ணாடிகள் இருந்தன. எட்டு டாலர் வாடகை கொடுக்கும் அறைகளில் முகம் பார்க்கும் கண்ணாடிகள் இருப்பதை நீங்கள் பார்த் திருக்கலாம்.

திடீரென்று ஜன்னலைவிட்டுக் கண்ணாடி முன் வந்து நின்றாள் டெல்லா. அவளுடைய கண்கள் நேர்த்தியாக மின்னின. ஆனால் அவள் முகமோ சட்டென்று வெளுத்து விட்டது. அவசர அவசரமாக அவள் தன் முடிந்திருந்த கூந்தலை அவிழ்த்துவிட்டாள்.

ஜேம்ஸின் இல்லத்தில் இரண்டுமுக்கியமான பொருள்கள் இருந்தன; அவை அவர்களைக் கர்வப்படும்படியாகவும் வைத்திருந்தன. அவற்றில் ஒன்று ஜேம்ஸிடமுள்ள தங்கக் கைக்கடிகாரம். அது அவனுடைய தகப்பனால் கொடுக்கப் பட்டது. கடிகாரமோ தகப்பனின் தகப்பனுடையது. அதை அவனுடைய மூதாதையரின் சொத்து என்றே கூறலாம். இரண்டாவதோ டெல்லாவின் கூந்தல். ஜேம்ஸ் தன் கைக்கடிகாரத்தையும் டெல்லா தன் அழகிய கூந்தலையும் கிடைத்தற்கரிய பொக்கிஷமாகக் காப்பாற்றி வந்தனர்.

டெல்லாவின் அவிழ்த்து விடப்பட்ட கூந்தல் கரிய நீர் வீழ்ச்சிபோல் காற்றில் அசைந்து ஆடிற்று. அவளுடைய ஆபரணம் போன்ற அது முழங்கால்வரை நீண்டிருந்தது. கூந்தலின் அழகைக் கண்டு களித்த டெல்லா அதை வாரி எடுத்து முடிந்தாள். மேலும் ஒரு கணம் கண்ணாடியில் தன்னையும் கூந்தலின் அழகையும் பார்த்தாள். அவள் கண் களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் வெளிப்பட்டுக் கீழே விரித்திருந்த கம்பளத்தின்மீது விழுந்தது.

வேறு ஆடை உடுத்தினாள் டெல்லா. தலையில் தொப்பியை எடுத்து அணிந்துகொண்டாள். அப்பொழுது அவளுடைய அழகு பன்மடங்காக அதிகரித்தது. கண்களிலும் ஒருவித ஆனந்த ஒளி ஏற்பட்டது. அவள் கதவை மூடிவிட்டு மாடிப்படிகளில் மளமளவென்று இறங்கி வீதியை அடைந்தாள்.



அவள் வந்து நின்ற வீட்டின் முன், ''சப்ரோனி, சவுரி, பொய் தாடி மீசை வியாபாரி'' என்ற பெயர் பலகை தொங் கிக்கொண்டிருந்தது. டெல்லா ஒரே தாண்டலில் கடையி னுள் சென்றாள். அங்கு கடையின் சொந்தக்காரி சப்ரோனி இருந்தாள். அவளை நெருங்கி, ''என் கூந்தலை விலைக்கு வாங்கிக்கொள்வீர்களா?'' என்று டெல்லா கேட்டாள்.

''வாங்கிக் கொள்கிறேன். எங்கே தலையிலிருந்து தொப்பியை எடுங்கள். உங்கள் கூந்தலைப் பார்க்கலாம்'' என்றாள் சப்ரோனி.

டெல்லா தொப்பியை எடுத்தாள். கூந்தலை அவிழ்த்து விட்டாள். அதை சப்ரோனி தன் அநுபவம் வாய்ந்த கையால் தடவிப் பார்த்தாள். பிறகு, ''இருபது டாலர் தருகிறேன்'' என்றாள்.

''நல்லது, கொடுங்கள்'' என்றாள் டெல்லா.

அடுத்த இரண்டு மணி நேரம்வரை டெல்லா சிறகுகள் உள்ள தேவதைபோல் கடை வீதிகளில் பறந்து திரிந்தாள். தனது அழகிய கூந்தலை இழந்ததையும் அவள் மறந்தாள். ஒவ்வொரு கடையாக ஏறி இறங்கினாள். கணவனுக்குப் பரிசளிக்கத் தகுந்த பொருளைத் தேடி அலைந்தாள்.

கடைசியில் அவள் மனதில் நினைத்த பொருள் கிடைத்தது அது அவளுடைய கணவன் ஜேம்ஸுக்காகவே தயாரிக்கப்பட்டது போலவும் தென்பட்டது. அதைப்போல் வேறு எந்தக் கடையிலும் இருக்கவே இல்லை. டெல்லா அதைக் கையில் எடுத்துத் திரும்பத் திரும்பப் பார்த்தாள். அது ஒரு கைக்கடிகாரச் சங்கிலி. பிளாட்டினத்தால் செய்யப் பட்ட அது வெகு நேர்த்தியாக இருந்தது. அந்தச் சங்கிலி யைக் கணவனும் விரும்புவான் என்று அவள் தீர் மானித்தாள்.

உடனே சங்கிலியின் விலையைக் கேட்டு வியாபாரத்தை முடிக்கத் தொடங்கினாள். சங்கிலி அவளிடமிருந்து இருபத்தி

யோரு டாலரைப் பறித்துக்கொண்டது. அவள் கையில் எண்பத்தியேழு சென்ட்டுடன் வீடு திரும்பினாள். ஆனால் கணவன் அந்தச் சங்கிலியில் கைக்கடிகாரத்தைப் பிணைத்துக் கட்டிக்கொண்டால் வெகு நேர்த்தியாக இருக்கும்; பார்த் தவர் மகிழ்ச்சி அடைவார்கள் என்று எண்ணினாள்.

வீட்டை அடைந்ததும் டெல்லாவின் மகிழ்ச்சியின் வேகம் மட்டுப்படத் தொடங்கிற்று. அவள் நீண்ட கூந்தலைக் கத்தரித்துவிட்டதால் இப்போது அது கழுத்தளவே இருந்தது. அந்த சுருட்டையான கரிய கூந்தலைச் சரியாக வாரி அலங்கரித்துக்கொண்டாள். சுமார் இருபது வினாடி களிலேயே அவள் பள்ளி மாணவியைப்போல் காட்சி அளித் தாள். கண்ணாடி முன் நின்று கழுத்துவரை நீண்டு சுருட்டை சுருட்டையாக வண்டினம்போல் இருக்கும் கூந்தலின் அழகைக் கண்டு களித்தாள்.

''இரண்டாம் முறையாகப் பார்ப்பதற்குமுன் கணவர் என்னைக் கொலை செய்யாவிட்டால் நான் சிறந்த அழகி யாகவே காட்சி அளிப்பேன். கோனித் தீவில் பாடும் அழகிய பெண்களைப்போல் இருப்பதாகவே அவர் கூறலாம்—ஆனால் ஒரு டாலர் எண்பத்தியேழு சென்ட்டுகளை வைத்துக்கொண்டு நான் என்ன செய்ய முடியும்?'' என்று டெல்லா தன்னையே கேட்டுக்கொண்டாள்.

சரியாக ஏழு மணிக்குக் காபி தயாரித்தாள் டெல்லா. பிறகு இரவு சமையலைச் செய்யத் தொடங்கினாள்.

ஜேம்ஸ் என்றைக்குமே வேலையிலிருந்து திரும்பி வரத் தாமதம் செய்தது கிடையாது. டெல்லா மேஜையருகில் போய் உட்கார்ந்து கன்னத்தில் கையை வைத்துக் கொண் டதுமே அவன் வரும் காலடிச் சப்தம் கேட்கும். அதேபோல இன்றும் நடைபெற்றது. அவன் மாடிப் படிகளில் ஏறிவரும் காலடிச் சப்தம் கேட்டதும் டெல்லாவின் மனம் பட படத்தது. அவள் இத்தகைய நேரங்களில் வழக்கமாக நினைப்பது போலவே கடவுளைத் துதிக்கத் தொடங்கினாள்.



''கடவுளே! நான் இன்னமும் அழகாகவே இருப்பதாக அவர் நினைக்கும் படி செய்யுங்கள்'' என்றாள்.

அறையின் கதவு திறந்தது. ஜேம்ஸ் மெள்ள உள்ளே கால் எடுத்து வைத்தான். அவனுடைய கண்கள் எதிரே இருந்த டெல்லாவை நோக்கின. அவனுடைய பார்வையி லிருந்து டெல்லாவால் எதையும் புரிந்துகொள்ள முடிய வில்லை. அவள் பயந்தாள். ஆத்திரம், திகைப்பு, வெறுப்பு ஆகிய எதையும் ஜேம்ஸின் பார்வையிலிருந்து அவள் அறிய வில்லை. அவள் இந்த எதற்கும் தயாராகவும் இருக்கவில்லை. மேலும் அவனோ அவ்வித உணர்ச்சிகளை வெளிப்படுத்தியவ னாகவும் காணப்படவில்லை. அவளை உற்றுப் பார்த்தானே தவிர தன் மன உணர்ச்சிகளை வெளிப்படுத்தவில்லை.

மேஜையை விட்டு அவனை நெருங்கி வந்தாள் டெல்லா. அன்பான குரலில், ''என்னை அவ்விதம் பார்க்காதீர்கள். என் கூந்தலைக் கத்தரித்து விற்றுவிட்டேன். உங்களுக்குக் கிறிஸ்து மஸ் பண்டிகைக்குப் பரிசு அளிக்காமல் என்னால் இருக்க இயலவில்லை. என் கூந்தல் விரைவிலேயே வளர்ந்துவிடும். அதைப்பற்றிக் கவலைப்பட மாட்டீர்கள் என்று நம்புகிறேன். கவலைப்படுவீர்களா? எனக்குக் கிறிஸ்துமஸ் வாழ்த்துக் கூறுங்கள். நாம் மகிழ்ச்சியோடு இருக்கலாம். நான் உங்க ளுக்கு என்ன நேர்த்தியான பரிசு வாங்கி வந்திருக்கிறேன் என்று தெரியாது'' என்றாள்.

''உன் கூந்தலைக் கத்தரித்து விட்டாயா?'' என்று யந்திரம் போன்று உணர்ச்சியே இல்லாத வகையில் கேட்டான் ஜேம்ஸ். மனப் போராட்டத்திலிருந்து விடுபட்ட பிறகும் அவனால் ஒரு முடிவுக்கு வர இயலவில்லை.

''கத்தரித்து விற்றுவிட்டேன். இப்போது என்னைக் காண அழகாக இல்லையா? கூந்தலைக் கத்தரித்த போதிலும் நான் நானாகவே இருக்கிறேனே?''

ஜேம்ஸ் அறையை ஒரு முறை உற்றுப் பார்த்தான்.
பிறகு, "உன் கூந்தல் போய்விட்டது என்ரு சொல்லுகிருய்?"
என்ருன்.

"நீங்கள் எங்கும் பார்க்க வேண்டாம். நான் அதை
விற்றுவிட்டேன். அது என் நன்மைக்காகவே போயிற்று.
என் கூந்தலை வேண்டுமானுல் கணக்கிட்டுவிடலாம். ஆனுல்
உங்களிடம் நான் வைத்துள்ள காதலின் தன்மையை
யாராலும் கணக்கிட்டுத் தீர்மானிக்கவே முடியாது."

ஜேம்ஸ் மயக்கத்திலிருந்து தெளிந்தவனைப்போல் உடலை
அசைத்துக்கொண்டான். அவன் தன் காதலி டெல்லாவைப்
பற்றி ஆராய்ச்சி செய்வதை விட்டான். அறையைக் கண
நேரம் உற்றுக் கவனித்தான். வாரத்திற்கு எட்டு டாலர்
அல்லது ஒரு ஆண்டிற்குப் பத்து லட்சம் டாலர்—இதனுல்
என்ன அதிக வேற்றுமை ஏற்படப் போகிறது? கணித
மேதைகள் ஏதாவது கணக்குப் போட்டுத் தவருன முடி
வையே கூறுவார்கள். காதலி டெல்லா வாங்கி வந்த
பரிசுப் பொருள் அந்த அறையில் காணப்படவே இல்லை.
அது என்ன என்றும் ஜேம்ஸால் உணர இயலவில்லை.

மேல் அங்கியின் பையிலிருந்து ஒரு பொட்டலத்தை
எடுத்து மேஜைமீது போட்டான் ஜேம்ஸ். "என்மீது தவருக
ஏதும் நினைக்காதே டெல்லா. கூந்தலை கத்தரித்ததாலோ,
வேறு அலங்காரங்கள் செய்து கொண்டதாலோ என்
காதலியிடமுள்ள அன்பு மாறிவிடாது. ஆனுல் இந்தப்
பொட்டலத்தை அவிழ்த்தால் நான் உன்னை முதலில் பார்த்
ததும் ஏன் திகைத்தேன் என்பதை அறிவாய்" என்ருன்.

டெல்லாவின் மென்மையான விரல்கள் பொட்டலத்தை
அவிழ்த்தன, பொட்டலத்தினுள் இருந்ததைக் கண்டதும்
டெல்லா மகிழ்ச்சி மேலீட்டால் உரக்கக் கத்தினுள். மறு
கணம் அவளுடைய பெண்மையின் தன்மை வெளிப்பட்டது.
அவளுடைய கன்னங்களில் நீர்த் துளிகள் உருண்டு ஓடின.



பொட்டலத்தினுள் இருந்தது இவைதான்: கூந்தலை
வாரி முடிந்து பின் பக்கம் மேல் பக்கம் ஆகியவற்றில் செருக
இரண்டு சீப்புகள் இருந்தன. அவை நேர்த்தியான வெள்ஞ்சல்
களால் செய்யப்பட்டவை. அவற்றின் ஓரத்தில் கற்கள்
பதித்திருந்தன. அவை அதிக விலை மதிப்புள்ளவை. இவ்வித
சீப்புகளையே அவள் வாங்க வேண்டும் என்றும் ஏங்கிக்கொண்
டிருந்தாள். இப்போது அவள் விரும்பியதை ஜேம்ஸ்
வாங்கிக்கொண்டு வந்திருக்கிருன். ஆனுல் அதை வைத்து
அலங்கரித்து அழகு பார்க்க அவளுக்குக் கூந்தல் இல்லை.
அந்த அழகிய கூந்தல் போய்விட்டது.

சீப்புகளை எடுத்து மார்புடன் அணைத்துக்கொண்டாள்
டெல்லா. பிறகு நீர் நிரம்பிய கண்களால் ஜேம்ஸைப்
பார்த்துப் புன்முறுவல் செய்து, "என் கூந்தல் அதிவிரைவில்
வளர்ந்துவிடும்" என்ருள்.

ஜேம்ஸ் இன்னமும் அவனுக்காக டெல்லா வாங்கி வந்த
பரிசுப் பொருளைப் பார்க்கவே இல்லை. டெல்லா அதை
எடுத்து ஜேம்ஸின் முன்னுல் நீட்டினுள். கைக்கடிகாரச்
சங்கிலி அவள் கையில் மின்னிப் பிரகாசித்துக்கொண்
டிருந்தது. "இதுதான் உங்களுக்காக நான் வாங்கியது.
இந்த ஊர் முழுவதுமே நான் இதைத் தேடி அலைந்தேன்.
ஒரு நாளைக்கு நீங்கள் நூறு முறையாவது மணி பார்க்க
வேண்டியிருக்கிறது. உங்கள் கடிகாரத்தைக் கொடுங்கள்.
சங்கிலியை மாட்டிய பிறகு அது எப்படியிருக்கிறது
பார்க்கலாம்" என்ருள்.

அவள் கேட்டதைக் கொடுப்பதற்குப் பதில் ஜேம்ஸ்
நாற்காலியில் தொப்பென்று உட்கார்ந்தான். தலையிலும்
கையை வைத்துக்கொண்டான். பிறகு ஏளனமாகச் சிரித்த
வண்ணம், "டெல், நமது கிறிஸ்துமஸ் பண்டிகைப் பரிசுப்
பொருள்கள் சில காலம் உபயோகமில்லாமல் இருக்க
வேண்டியவைதான். உபயோகிக்க அவை மிகவும் சிறந்த
வையே. உனக்குச் சீப்பு வாங்குவதற்காக நான் கைக்
கடிகாரத்தை விற்றுவிட்டேன்" என்ருன்.

